

பெயர் :

**பத்மஸ்ரீ சில்பகலாமணி எம். முத்தையா ஸ்தபதி**

தகப்பனார் பெயர் : ஸ்தபதி எம். முத்து ஆச்சாரி

பிறந்த தேதி, இடம் : 14.12.1941, தேவக்கோட்டை அருகில் எழுவன்கோட்டை

பத்மஸ்ரீ எம். முத்தையா ஸ்தபதி தொன்றுதொட்டு பரம்பரையாக கோயில்கள் கட்டுதல் மற்றும் கல் சிற்ப விக்ரகங்கள் செய்வதில் சிறந்து வந்திருக்கிறார்கள். விஸ்வகர்மா என்று அழைக்கப்படும் கலைக் குடும்பத்தில் பிறந்தவர். இவரது பாட்டனாரும் தந்தையாரும் சகோதரர்களும் இவரும் பல திருக்கோயில்கள் புதியதாக அமைத்தும் அனேக கல் விக்ரக சிற்பங்கள் செய்தும் வரலாறு படைத்துள்ளார்கள். இவர் தனது தொடக்கப் பள்ளிக் கல்வியை தேவகோட்டையை அடுத்து இராம்நகரில் முடித்து, அரசால் ஏற்படுத்தப் பட்ட மாமல்லபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் சேர்ந்து திரு. வைத்தியநாத ஸ்தபதியை குருவாகக் கொண்டு 1957 முதல் 1961 வரை திருக்கோயில் நிர்மானம் மற்றும் சிற்பக்கலை ஆகியவற்றை பயின்றார். மேற்படி சிற்பக்கலை கல்லூரியில் பயின்ற பிறகு அவர் திருக்கோயில்கள் கட்டுதல் மற்றும் விக்ரகங்கள் செய்தல் போன்ற திருப்பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். இவருடைய திறமைக்கு 1992ல் பத்மஸ்ரீ விருது இந்திய ஜனாதிபதி திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் மூலம் கிடைக்கப் பெற்றார். தற்சமயம் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையில் ஸ்தபதி ஆலோசகராக 1990ல் இருந்து பணியாற்றி வருகிறார்.

### குறிப்பு விவரங்கள்

பத்மஸ்ரீ சில்பகலாமணி எம். முத்தையா ஸ்தபதி, இவர் சிவகங்கை மாவட்டம், தேவகோட்டை சமீபம் எழுவங்கோட்டை என்னும் கிராமத்தில் பரம்பரையாக ஸ்தபதி குடும்பத்தில் பிறந்தவர். தேவகோட்டை இராம் நகரில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் பள்ளி படிப்பை முடித்து 1957ல் மகாபலிபுரத்தில் தமிழ்நாடு அரசால் ஆரம்பிக்கப்பட்ட சிற்பக்கலை பாடசாலையில் நான்கு வருடம் பயின்று சில்பகலையில் பட்டயம் பெற்றவர்.

இவர் இந்தியா மற்றும் அமெரிக்கா, லண்டன், தென் ஆப்பிரிகா, பேங்காக், இலங்கை, ஆஸ்திரேலியா போன்ற வெளிநாடுகளிலும் பல கோயில்கள் புதிதாக அமைத்தும், திருப்பணிகள் செய்தும், பல கல் விக்ரகங்கள் செய்தும் சாதனை படைத்துள்ளார்.

இவரை தொடர்ந்து இவருடைய மகன்கள் திரு. எம். முத்துக்குமார் மற்றும் திரு. எம். சீனிவாசன் ஆகிய இருவரும் இதே பணியில் ஈடுபட்டு வருகின்றனர்.

(தொடர்ச்சி பின் அட்டை உட்புறம்)

6-4

# ஆலய நிர்மாண
# பிம்பலக்ஷண சிற்பநூல்

இந்து சமய அறநிலையத்துறை
தமிழக அரசின் வெளியீடு




பத்மஸ்ரீ
சில்பகலாமணி
**எம். முத்தையா ஸ்தபதி**
ஸ்தபதி ஆலோசகர்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
தமிழக அரசு.

வெளியீடு
அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில்,
மயிலாப்பூர், சென்னை - 600 004.

**ஆலய நிர்மாண பிம்பலக்ஷண சிற்பநூல்**

ஆசிரியர் : பத்மஸ்ரீ சில்பகலாமணி **எம். முத்தையா ஸ்தபதி**

முதற் பதிப்பு 2003

உரிமம் : இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை

வெளியீடு : அருள்மிகு கபாலீஸ்வரர் திருக்கோயில்,
மயிலாப்பூர்,
சென்னை - 600 004.

விலை : ரூ. 1000

அச்சிட்டோர் : **பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,**
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொ.பே. : 28482441, 28482973

6-4

**ஜெ ஜெயலலிதா**
முதலமைச்சர்




**தலைமைச் செயலகம்**
**சென்னை - 600 009.**

**நாள் : 28.07.2003.**

## சிற்ப சாஸ்திரம்

# அணிந்துரை

திருக்கோயில்கள் நிறைந்த தெய்வீக பூமி தமிழகம். அரசர்கள், செல்வர்கள் மற்றும் ஆன்மீக ஈடுபாடுள்ள ஏழை எளிய மக்கள் கூட திருக்கோயில் திருப் பணிகளில் தமிழ்நாட்டில் காலம் காலமாக ஈடுபட்டு வருகிறார்கள். இறைவன் அருள் சிறந்து விளங்கும் இடம் திருக்கோயில். ஆகவே தான், ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்னும் முதுமொழி நீண்ட காலமாக இங்கு நிலவி வருகிறது.

இத்தகைய ஆலய நிர்மாணம் பற்றியும், மூர்த்தி இலக் கணங்கள் பற்றியும் நூல் ஒன்றை இந்து சமய அறநிலையத் துறை, தனது ஆலோசகர் சில்ப கலாமணி பத்மஸ்ரீ முத்தையா ஸ்தபதி அவர்களைக் கொண்டு உருவாக்கி வெளியிட்டிருக் கிறது. வாழையடி வாழை எனக் குடும்ப வழியாகவும், குரு வழியாகவும் வந்துள்ள இந்தப் பாரம்பரியச் சிறப்பு மிக்க கலை, இந்தத் துறையில் சிறந்து விளங்கும் திரு. முத்தையா ஸ்தபதி அவர்களால் நூலாக்கம் பெற்று வெளியிடப் படுவது பாராட்டுக்குரியது.

'ஆலய நிர்மாண பிம்ப லட்சண சிற்ப நூல்' என்னும் இந்த நூலை அச்சிடுவதற்கான செலவினை மயிலாப்பூர் அருள் மிகு கபாலீஸ்வரர் திருக் கோயில் ஏற்றுள்ளது பாராட்டத்தக்கது. திருக்கோயிலை அமைப்பவர்களுக்கும், சிற்பங்களை வடிப்பவர்களுக்கும், வழிகாட்டியாக அமைந்த இந்த நூல் அனைத்துத் தரப்பினர்க்கும் பயன்படும் அரிய நூலாகும்.

தமிழர்களின் நாகரிகச் சிறப்பை, பண்பாட்டு வளத்தைப் பாருக்கு உணர்த்துகின்ற திருக்கோயில்கள் முன்பு அறச் சாலைகளாக விளங்கின. இடைக்காலத்தில் ஆலயங்களுக்கும் மக்களுக்கும் இடையே ஆன்மீக உறவு குறைந்து போனது. இந்த நிலையை மாற்றி ஆலயங்கள் மீண்டும் அறச் சாலை களாக விளங்க திருக்கோயில்களில் மதிய நேரத்தில் இறைவனை வழிபட வரு கின்ற பக்தர்களுக்கு உணவு வழங்கும் சிறப்புத் திட்டத்தை ஏற்படுத்தினேன். ஆலயங்களில் ஆன்மீக வகுப்புகள் நடைபெறவும் ஆவன செய்தேன்.

'கோபுர தரிசனம் பாவ விமோட்சனம்' என்பார்கள். அத்தகைய கோபுரங்களையும், சிற்பங்களையும் அமைக்கும் நுட்பங்களைத் தற்காலத் தலைமுறையினரும், எதிர்காலத் தலைமுறையினரும் அறிய வேண்டும் என்பதற்காக இந்த நூல் உருவாக்கப் பட்டுள்ளது.

இந்த நூலை உருவாக்கியுள்ள பத்மஸ்ரீ மு. முத்தையா ஸ்தபதி அவர்கள், ஆலயப் பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர்; உயர்ந்தோங்கி விளங்கும் இராஜகோபுரங்களையும், அழகிய தெய்வச் சிலைகளையும் வடிப்பதில் கை தேர்ந்தவர். தமிழகத்தில் மட்டும் அல்லாமல், இந்தியாவில் பல மாநிலங்களிலும், அமெரிக்காவில் பல்வேறு நகரங்களிலும், ஆஸ்திரேலியா, தாய்லாந்து, ஸ்ரீலங்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளிலும் இவரால் உருவாக்கப் பட்டுள்ள ஆலயங்கள் மற்றும் தெய்வத் திருமேனிகள் இவருடைய அரிய திறமைக்குச் சான்றுகளாக விளங்கிக் கொண்டிருக்கின்றன. சிற்ப சாஸ்திர விற்பன்னராகிய திரு. மு. முத்தையா ஸ்தபதி அவர்கள் இந்த நூலை உருவாக்கியிருப்பது பொருத்த மானது. அவரை நான் பாராட்டுகிறேன், வாழ்த்துகிறேன்.

இந்து சமய அறநிலையத் துறையின் இந்த முயற்சியைப் பாராட்டுவதோடு தொடர்ந்து இது போன்ற ஆன்மீக கலைச் சிறப்புமிக்க நூல்களை வெளியிட என் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஜெ ஜெயலலிதா**
*தமிழக முதலமைச்சர்*

Email : skmkanci@md3.vsnl.in
kanchimutt@vsnl.com
www.kamakoti.org.



Phone : (04112) 22115
Fax : (04112) 24305

Sri Chandramouleeeswaraya Namaha:

Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolomnaya

**His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi**

# JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL SRIMATAM SAMSTHANAM

No. 1, Salai Street, Kancheepuram - 631 502. Tamilnadu, India.



4.11.2001.

நமது அத்யந்தப்ரிய சிஷ்யரும் ஸ்ரீ மடத்தின் ஆஸ்தான சில்பகலா வித்வானும், பத்மஸ்ரீ சில்பகலாமணி தமிழ்நாடு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆலோசகரு மான M. முத்தய்யாஸ்தபதி அவர்கள் எழுதிய ''ஆலய நிர்ணாம பிம்ப லக்ஷண சிற்ப நூல்'' கிடைக்கப்பெற்று மிக்க மகிழ்ச்சி அடைந் துள்ளோம்.

நமது புனித தமிழ் நாட்டின் பெருமைகளுக்குக் காரணம் சில்பகலைகளே யாகும். பல்லவ சோழ மன்னர்களால் சில்ப சாஸ்த்ரப்படி அமைக்கப்பட்ட வானளாவிய கோபுரங்களைக் கண்டு ப்ரமிக்காதவர்களே கிடையாது. அப்படிப் பட்ட பெருமை வாய்ந்த சில்பசாஸ்திரப்படி கிராமங்களிலும் நகரங்களிலும் கோவில்கள் அமைந்துள்ளன; ஆகம சாஸ்திர முறைப்படி பூசைகள் நடந்து வ'ருகின்றன. இந்நூலை தமிழக அரசு வெளி யிடுவது அரசாங்கத்திற்கே தனிப் பெருமையாகும். இந்நூல் எல்லோரும் சுலபமாய் புரிந்து கொள்ளும் வகையில் மிக எளிய நடையில் அமைந்துள்ளது. படவிளக்கங்களும் நன்றாக உள்ளது. இந் நூல் சில்பிகளுக்கும் ஆலய நிர்வாஹிகளுக்கும் மிகவும் பயன் உள்ளதாக உள்ளது. இந்நூலின் உதவியால் கிராமங்கள் நகரங்கள் அனைத்திலும் கோயில்கள் அமைத்தும், புதிப்பித்தும் விநாயகர் முதல் ஆஞ்சநேயர் வரை உள்ள எல்லா தேவதைகளின் அருளால் மக்கள் அனைவரும் நூலாசிரியரும் அரசாங்க நிர்வாஹிகள் அனைவரும் ஸகல மங்களங்களையும் அடைந்து பரமக்ஷேமமாக வாழ வேண்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்மிருதி :

**சுகவனேஸ்வர்,** இ.ஆ.ப.,
தலைமைச் செயலாளர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.

நாள் : 25.10.2002

# வாழ்த்துரை

மனிதன் இயற்கையோடு இணைந்து பஞ்ச பூதங்களை ஒன்றி வாழ்க்கை நடத்தினாலும் அதை இறை உணர்வோடு செய்யும் போதுதான் பிறவியின் பயன் பெற்று, ஈடில்லா இன்பம் காண்கிறான். இறைநிலையை உணர்த்த இரு மார்க்கங்கள் உள்ளன. ஒன்று சகுண ப்ரம்மம், இன்னொன்று நிர்குண ப்ரம்மம். இவ்விரண்டு வழிகளில், சமரச சன்மார்க்க நிலையை எட்டியவர்களாலேயே சுத்த உணர்வுமயமான (Pure consciousness) நிர்குண ப்ரம்மத்தை அடைய முடியும். சாதாரண மனிதன் இறைவனை நாம, ரூப, .கல்யாண குணங்கள் நிறைந்த சகுண ப்ரம்மம் மூலமாகவே பார்க்கின்றான். தேவதைகளை சூட்சும திருஷ்டியால் நம் முன்னோர்கள் கண்டறிந்துள்ளனர். ஞானக் கண்ணால் பார்த்ததை மனத்தில் நிறுத்தி பின் தியானம் செய்வதாலேயே இறைவனை உணர முடியும். அத்தகு இறைநிலையின், கடவுளின் ரூபங்களை மனக்கண்களால் காணவே நமது கோயில்கள் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. இதனை வலியுறுத்தவே, ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என ஆன்றோர் கூறியுள்ளனர். எப்படி மனித ரூபமானது கருவிலிருந்து வளர்ந்து உரிய காலத்தில் உருவ நிலை அடைகின்றதோ, கோயிலிலும் மூலாதாரத்தில் ஆரம்பித்து சஹஸ்ரார நிலையான பரம் பொருளை அடையும் மார்க்கத்தைத் தெள்ளெனத் தெரிவிக்கின்றது. கோயில்களின் அமைப்பையெல்லாம் இறை வடிவத் துடன் ஒப்பிட்டு பல சில்ப சாஸ்திரங்களும், ஆகமங்களும், வேதங்களும் சொல்லுகின்றன. இவை மனிதன் தனக்குள்ளேயே கடவுளின் நிலை காணவே சொல்லப்பட்டவை. அத்தகைய கோயிலின் அமைப்பைக் கற்றாயவே திரு. முத்தையா ஸ்தபதி அவர்கள் இந்த நூலை எழுதியுள்ளார். இது சிற்பிகளுக்காக மட்டும் எழுதப்பட்ட நூல் அல்ல. ஒவ்வொரு பண்பாடுள்ள மனிதனும் படித்து அறிய வேண்டிய பொக்கிஷம். நம்மில் பலர் இயந்திரத் தன்மையுடன் (Mechanical - ஆக) கோயில் சென்று வருகின்றோம். ஆனால் இந்நூலைப் படித்த பின் ஒரு முறை சென்றால் கோயிலைக் கண்கொண்டு நோக்கும் நோக்கமே வித்யாசமாக இருக்கும். ஸ்தபதி கோயிலின் நிர்மாணத்தை சொல்வதோடு நில்லாமல் பல மூர்த்தங்களின் லக்ஷணங்களையும் விளக்கியுள்ளார். பல்வேறு மூர்த்தங்களின் த்யானஸ்லோகங்களை விளக்கத்துடன் கூறியிருப்பது அந்தந்த மூர்த்தியே நேரில் வந்து நிற்பதுபோல் உள்ளது. ஆங்கிலத்தில் Nutshell என்பது போல் மொத்தத்தில் இந்த நூல் ஓர் அரிய பொக்கிஷம். ஒரு முறை இந்நூலை படித்து வலம் வந்தால் நாம் வாயிலார் நாயனார் ஸ்திதிக்குச் சென்று நம்முள் நாமே ஓர் ஆலயத்தை உருவாக்கும் நிலையில் உள்ளது.

இந்நூல் பரவிட திரு. முத்தையா ஸ்தபதிக்கும், இந்து சமய அறநிலையத் துறைக்கும் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுகவனேஸ்வர்
சுகவனேஸ்வர்
*25.10.2002.*

**எம். ஏ. கௌரிசங்கர்,** இ.ஆ.ப.,
*சிறப்பு ஆணையர் மற்றும் ஆணையர்,*
*இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை,*



119, உத்தமர் காந்தி சாலை,
சென்னை - 600 034.

நாள் : 22.08.2003

# வாழ்த்துரை

*"பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும்*
*அறுமுகச் செல்வேன் அணிதிகழ் கோயிலும்*
*வால்வளை மேனி வாலியோன் கோயிலும்*
*நீலமேனி நெடியோன் கோயிலும்"*

எனவரும் சிலப்பதிகாரக் காவியபகுதி, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் தமிழகம் திருக்கோயில்களால் பொலிவு பெற்றிருந்த சிறப்பினைப் பறை சாற்றுகின்றது.

கோயில் என்பது கோ கில் எனக் கடவுள் உறையும் இடம் எனப் பொருள் தரும். ஆலயம் என்பது ஆ லயம் எனக் கடவுள் திருவடியில் ஆன்மா லயிப்பதற்கு உரிய இடம் எனப் பொருள்படும்.

"க்ஷேத்திரம் சரீரப் பிரஸ்தாரம்" என்பர். மனிதர்களின் உடம்பு போல் கோயில்கள் வடிவு அமைக்கப்பட்டிருப்பதாக ஆன்றோர்கள் விளக்குகின்றனர்.

மனிதனுடைய பாதங்கள் கோபுரம், முழங்கால் ஆஸ்தான மண்டபம், துடை நிருத்த மண்டபம், தொப்புள் பலிபீடம், மார்பு மகா மண்டபம், கழுத்து அர்த்த மண்டபம், சிரம் கர்ப்பகிரகம், தலையின் உச்சி விமானம் என ஆன்றோர்கள் விவரிக்கின்றனர்.

மனிதர்கள் ஆன்ம முன்னேற்றம் காண வேண்டும். அதனால் திருக்கோயில் வழிபாடு மிகவும் அவசியம் ஆகும்.

ஆகவேதான் திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கோயில் இல்லா ஊர் திருவில் ஊர் எனவும், திருக்கோயில்களால் பொலிவு பெறாத ஊரினைக் காடு எனவும் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

"பத்மஸ்ரீ" "சில்பகலாமணி" திருமிகு முத்தைய்யா ஸ்தபதி அவர்கள் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையில் மேற்பார்வை பொறியாளர் நிலையில் ஸ்தபதி ஆலோசகராகப் பணியாற்றிவரும் சிறப்பினைப் பெற்றவர்.

உலக நாடுகள் பலவற்றிலும் புகழ்மிக்க இந்து சமய ஆலயங்கள் பலவற்றைக் கட்டியுள்ளார்.

இத்தகைய அறிவாற்றல், அனுபவத்திறம் வாய்ந்த, "பத்மஸ்ரீ" "சில்பகலாமணி" திருமிகு முத்தையா ஸ்தபதி அவர்கள் "சில்ப சாஸ்திர தேவாலய விதி" எனும் அதிய நூலைப் படைத்திருப்பது மிகுந்த பாராட்டிற்குரியது.

தமிழ் மக்களின் கோயில் கட்டும் கலைச் சிறப்பினைக் கவினுற விளக்கி இவ்வொப்பற்ற நூலைப் படைத்துள்ளமைக்காக "பத்மஸ்ரீ" "சில்பகலாமணி" திருமிகு முத்தைய்யா ஸ்தபதி அவர்களுக்கு என் மனமார்ந்த நல் வாழ்த்துக் களை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைச் சிறப்புற வெளியிட்டுள்ள இந்து சமய அறநிலையத் துறைக்கும் திருமயிலை திருகபாலீசுவரர் திருக்கோயில் நிர்வாகிகளுக்கும் என் மனமார்ந்த பாராட்டுக்கள்.

அன்புள்ள,

(எம்.ஏ. கௌரிசங்கர்)

**பி.சி. ராமசாமி**
*இந்து சமய மற்றும்*
*அறநிலையத் துறை*
*அமைச்சர்*




**தலைமைச் செயலகம்**
**சென்னை - 600 009.**

நாள் : 27.01.2003.

# அணிந்துரை

*மாண்புமிகு தமிழக முதலமைச்சர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்களின் பொற்கால ஆட்சியில் தான் ஆலயங்கள், நாளும் திருப்பணிகளால் பொலிவு பெற்று வருகின்றன.*

*''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்'' என்ற அருட்பிரகாச வள்ளலாரின் அமுதவாக்கினைப் பின்பற்றி திருக்கோயில்களில் தினந்தினமும் மதியவேளைகளில் அடியார்களுக்குத் திருஅமுது படைத்து அறநிலையத் துறையில் புதிய சரித்திரம் படைத்து வருகிறார்கள் நம் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள்.*

*திருவேற்காடு அருள்மிகு தேவிகருமாரியம்மன் திருக் கோயிலில் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள், தம் திருக்கரங்களால் மங்கல நாண் வழங்கி, 1008 தம்பதியர்களுக்கு இலவசத் திருமணங்கள் நடத்தி வைத்து சாதனை புரிந்ததை மக்கள் மற்றும் நாளேடுகளும் பாராட்டியுள்ளது நாடறிந்த உண்மை.*

*இத்தகைய ஆன்மீக புரட்சி நிகழ்த்தி வரும் நம் மாண்பு மிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர் களின் ஆட்சி காலத்தில் இந்து சமய அறநிலையத் துறையின் மற்றுமொரு மகத்தான சாதனையாக வெளிவரும் நூல்தான் திருக்கோயில் கட்டுமானக் கலையை விவரிக்கும் ''ஆலய நிர்மாண பிம்ப லட்சண சிற்ப நூல்'' எனும் இந்நூல்.*

**''சிற்பக்கலை கண்டேன் - நல்ல**
**சித்திரவேலை கண்டேன்''**

*என்று சிற்பக்கலை சிறப்பினைப்பாடிப் போற்றுகின்றார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்.*

*தமிழகமெங்கும் உள்ள பழமையான திருக்கோயில்கள் பலவற்றின் சிறப்பினைக் கண்டு, வெளிநாட்டினர் பலரும் திகைத்து நின்று வியந்து பாராட்டும் அருமையை இன்றும் நாம் காணுகின்றோம். அத்தகைய சிற்பக் கலை, சிறப்புமிக்க*

திருக்கோயில்களை கட்டும் கலையினைக் கவினுற விவரித்து மிக அருமையான நூலினைப் படைத்துள்ளார் ''பத்மஸ்ரீ'' மற்றும் ''சில்பகலாமணி'' திருமிகு முத்தையா ஸ்தபதி அவர்கள். அவர் இந்து சமய அறநிலையத்துறையின் ஸ்தபதி ஆலோசகர் பணியிலும் சிறப்புறப் பணியாற்றி வருகிறார்.

மாண்புமிகு இதுயதெய்வம் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்களின் ஆசியோடு இம்மகத்தான நூல் பத்மஸ்ரீ திருமிகு முத்தையா ஸ்தபதி எழுத, அதனை நம் அறநிலையத்துறை வெளியிடுவது நம் தமிழன்னை பெருமை கொள்ளத்தக்க அரிய திருப்பணி என்பதில் ஐயமில்லை.

''ஆலய நிர்மாண பிம்ப லட்சண சிற்ப'' நூலை வடித் துள்ள ''பத்மஸ்ரீ'' மற்றும் ''சில்பகலாமணி'' திருமிகு முத்தையா ஸ்தபதி அவர்களுக்கும், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளி யீடாக இந்நூலைச் சிறப்புற வெளியிடும் இந்து சமய அறநிலையத் துறை ஆணையர் மற்றும் திருமயிலை அருள்மிகு கபாலீஸ்வரர் திருக்கோயில் நிர்வாகிகளுக்கும், மாண்புமிகு தமிழக முதலமைச்சர் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்களின் நல்லாசியோடு அனைத்து தரப் பினரும் பயன்படும் விதத்தில் சிறந்து விளங்கிட என் மனமார்ந்த நல்வாழ்த்துக் களை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்

பி.சி. ராமசாமி

**பி.சி. ராமசாமி**

# முன்னுரை



எங்கும் நிறைந்த பரம்பொருளை (ஆண்டவனை) மஹான்கள் சித்தர்கள் முதலிய தபஸ்விகள் தங்கள் தியானத்தால் கண்டறிந்திருக்கிறார்கள்.

ஆனால் சாமான்யமான மனிதர்கள் காணமுடியவில்லை அதனால் ஆன்மாக்கள் மனநிலை குழம்பியநிலையில் தவிர்த்தார்கள். அதற்கு பரிகாரம் வேண்டி மஹான்கள் பகவானை நோக்கி தவம் செய்து அறிய பொக்கிஷங்களான சில்பசாஸ்த்திரம் ஆகம சாஸ்த்திரம் முதலியவைகளை நமக்கு தந்து அதன் மூலம் எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளை ஒரிடத்தில் கண்டு ஆன்மாக்கள் லயம் அடைவதற்கு வழிவகுத்தார்கள்.

ஆலய வழிபாடு, மூர்த்தி (விக்கிரஹ) வழிபாடுகளை ஏற்படுத்தி நமக்கு வழிகாட்டி உள்ளார்கள். இது நெடுங்காலமாக இருந்து வருகிறது.

அவ்வித ஆலயங்களை உண்டாக்கி முறைப்படுத்தி கட்டுப்பாடுகளை ஏற்படுத்தி ஆலயங்களை உருவாக்குவதற்கும் அதில் மூர்த்திகளை ஸ்தாபித்து ஒரே மனதாக வழிபடுவதற்கும் மனம் சாந்தி அடைவதற்கும் ஏற்றவிதமாக சில்பநூல்களை உண்டாக்கி உள்ளார்கள். அந்த நூல்களை உபயோகித்து கட்டியவைதான் நாம் காணும் அறிய பொக்கிஷங்களான கலைக் கோயில்கள். அதில் கண்கவர் சில்பங்களையும் நம் பண்டைய நாகரீகங்களையும் புனித தன்மையையும் காணப்படுகின்றது. ஒவ்வொன்றும் காரணத்துடன் அமைக்கப் பட்டுள்ளது. கோவிலையே ஒரு சரீரமாகவும் கெற்பக்ருஹம் என்றால் கருவறை என்று பெயர். அது இருட்டாகவும் அர்தமண்டபம் மஹாமண்டபம் பிராகார மண்டபம் கோபுரம் முதலியவை உருவ அங்கங்களாகவும் கோபுரம் பாதமாகவும் ஆக கோவில் எல்லா பாகங்களும் ஆண்டவனுடைய ங்கங்களாக பாவித்து அதில் எந்த இடத்திலும் புனிதத்தன்மை மாறாமல் ஒருமித்த பக்தியுடன் இருப்பதற் காக அமைக்கப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக சுமார் 28 சில்ப நூல்களுக்கு மேல் உள்ளது. மிக அற்புதமாக பூமியை நிர்ணயம் செய்வது முதல் விக்ரகத்தை பிரதிஷ்டை செய்வது வரை கூறப்பட்டுள்ளது. அதில் அனேக புதையல்கள் உள்ளன. இன்று விஞ்ஞானிகள் கண்டறிந்ததை முன்னோர்கள் அன்றே கண்டு வழிகாட்டியுள்ளார்கள். இன்று காம்பஸ் வைத்து திசை அறிவதை அவர்கள் திக்பரிச் சேதம் திசை அறிதல் எனும் அத்யாயத்தில் மிக சிறப்பாக கிழக்கு, மேற்கு,

தெற்கு, வடக்கை கண்டறிய வழி வகுத்துள்ளார்கள். இன்று பௌண்டேசன் அஸ்திவாரம் போடுகிறார்கள் பொறியாளர்கள். ஆனால் அஸ்திவாரம் குறித்து மிக அருமையாக கூறப்பட்டுள்ளது.

குறிப்பாக தஞ்சை பெரிய கோயில் முழுதும் கல்லால் ஆனது, சுமார் 210 அடி உயரம் செய்துள்ளார்கள் இன்றும் அஸ்திவாரத்தில் பழுது ஏற்படவில்லை சுமார் 1000 வருஷங்களுக்கு மேலாகிவிட்டது. அதுமாதிரி திருவண்ணாமலை கோபுரம் முதலியவைகளும் எடுத்துக்காட்டாக உள்ளது மற்றும் சில்ப நூல்களில் நகரங்களையும் கிராமங்களையும் எப்படி அமைப்பது என்பது பற்றியும் எந்த இடத்தில் எந்த எந்த தேவாலயங்கள் இருக்கவேண்டும் என்பது பற்றியும் எத்தனை வீதிகள் வேண்டும் என்பது பற்றியும் மலைமேல் உள்ள நகரம் சமுத்திரத்தை ஒட்டியுள்ள பட்டினங்கள் காடுகள் சூழ்ந்த பகுதியில் உள்ள கிராமங்கள் பட்டினங்கள் இவை குறித்து ஏற்பாடு செய்வதுமாய் செய்துள்ளார்கள். அனேக விதம் கூறப்பட்டுள்ளது. இராஜ வீதிகள் ஸ்வாமி திருவிழா தேர் வரும் வீதிகள் உப வீதிகள் பலவித தொழில் செய்வோர் இருக்கும் இடங்கள் நியாய ஸ்த்தலம் கல்வி பயிலும் இடங்கள் மற்றும் பாதுகாப்பு முதலியவை குறித்து மிகத் தெளிவாக இன்ற ஆச்சிரியப்படும்படி உள்ளது.

கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பதற்கிணங்க சிறிய ஊர்கள், கிராமங்களில் எப்படிப்பட்ட ஆலயம் இருக்கவேண்டும் பெரிய ஊர்கள் பட்டினங்களில் எப்படிப்பட்ட ஆலயங்கள் இருக்கவேண்டும் என்பது பற்றியும் கூறப்பட்டுள்ளது. அதுபோலவே ஆகமங்களிலும் ஆலயவழிபாடு செய்வதற்கு என்ன என்ன விதமாக செய்ய வேண்டும் எப்படி திருவிழா முதலிய வழிபாடுகள் செய்யவேண்டும் என்பது பற்றியும் மிகச் சிறப்பாக கூறப்படுவதே ஆகமங்களாகும். இவைகள் நமது நாட்டின் மிகப்பெரிய சொத்தாகும். இவைகள் பண்நெடுங்காலத்தில் இருந்தே வழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது. மத்ய காலத்தில் இவை குறைந்தும் இப்பொழுது மீண்டும் மக்களிடம் ஆர்வம் மிகுத்திருக்கிறது. வெளிநாட்டவரும் இதைப்பற்றி ஆராட்சி செய்ய ஆரம்பித்து பல ஆயிரம் மக்கள் நமது ஆலயங்களின் அமைப்பும் கலை நுட்பங்களையும் கண்டு ஆச்சர்யமடைகிறார்கள். இந்நூல்கள் பரம்பரையாக ஒருபகுதியினரிடம் இருந்தும் பிறருக்கு தெரியாமலும் இருந்து வந்திருக்கிறது. இதை எல்லோருக்கும் உபயோகப்படும் வண்ணம் இப்பொழுது ஏற்பாடு செய்திருக்கிறது.

முதலில் சில்ப கையேடு எனச் சிறிதாகவே போட்டு வெளியிட முயற்சித்தேன். ஆனால் பலவிசயங்களை எழுத எழுத ஒரு நூல்வடிவம் ஆகியிருக்கிறது. இந்து சமய அறநிலையத் துறையின் மூலம் எல்லா ஸ்தபதிகளையும் கூட்டி ஒரு கலந்துரையாடல் செய்தோம். அதில் பலபேர்கள் எங்களுக்கு சில்பசாஸ்த்திரம் முறையாக எல்லோரும் தெரிந்து கொள்ளும் படியாக சுருக்கமாகவும் விபர

மாகவும் ஒரு நூல் வெளியிட்டால் எங்களுக்கு உபயோகமாய் இருக்கும் என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்காக ஆரம்பித்ததுதான் இது கொஞ்சம் பெரிய புத்தகமாகவே தயாராகிவிட்டது. இது எல்லா சில்பிகளுக்கும் ஸ்தபதிகளுக்கும் நமது கோயில் நிர்வாகத்தினருக்கும் உதவியாக இருக்கும் என நினைக்கிறேன். இந்நூல் வெளியிட நமது இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் அவர்களும் அரசும் மிகுந்த ஆர்வமாக இருந்தார்கள். அதற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதுவதற்கு தஞ்சை சரஸ்வதி மஹால் லைப்ரரி வெளியிட்டுள்ள காஸ்யபம் முதலிய புத்தகங்கள், மற்றும் எங்கள் பரம்பரை ஓலையேட்டு சில்ப நூல்கள், ஆகமங்கள் மற்றும் எனது அனுபவங்கள் ஆகியவை உதவியாய் இருந்தது. இது ஒரு பகுதிதான் இதைத்தொடர்ந்து நிறைய வரைப்படங்களுடன் மறுபகுதியும் எழுத உள்ளேன். இக்கலையில் உள்ள எல்லோருக்கும் இந்நூல் உதவியாய் இருக்கும் என நம்புகிறேன்.

இப்படிக்கு

பத்மஸ்ரீ சில்பகலாமணி

**எம். முத்தையா ஸ்தபதி**

சென்னை.



# திரு. எம். முத்தையா ஸ்தபதி அவர்களின் குறிப்பு விவரங்கள்

| | | |
|---|---|---|
| பெயர் | : | பத்மஸ்ரீ சில்பகலாமணி<br>எம். முத்தையா ஸ்தபதி |
| தகப்பனார் பெயர் | : | ஸ்தபதி எம். முத்து ஆச்சாரி |
| பிறந்த தேதி, இடம் | : | *14.12.1941*, தேவக்கோட்டை அருகில் எழுவன்கோட்டை |

பத்மஸ்ரீ எம். முத்தையா ஸ்தபதி தொன்றுதொட்டு பரம்பரையாக கோயில்கள் கட்டுதல் மற்றும் கல் சிற்ப விக்ரகங்கள் செய்வதில் சிறந்து வந்திருக்கிறார்கள். விஸ்வகர்மா என்று அழைக்கப்படும் கலைக் குடும்பத்தில் பிறந்தவர். இவரது பாட்டனாரும் தந்தையாரும் சகோதரர்களும் இவரும் பல திருக்கோயில்கள் புதியதாக அமைத்தும் அனேக கல் விக்ரக சிற்பங்கள் செய்தும் வரலாறு படைத் துள்ளார்கள். இவர் தனது தொடக்கப் பள்ளிக் கல்வியை தேவகோட்டையை அடுத்து இராம்நகரில் முடித்து, அரசால் ஏற்படுத்தப்பட்ட மாமல்லபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் சேர்ந்து திரு. வைத்தியநாத ஸ்தபதியை குருவாகக் கொண்டு *1957* முதல் *1961* வரை திருக்கோயில் நிர்மானம் மற்றும் சிற்பக்கலை ஆகிய வற்றை பயின்றார். மேற்படி சிற்பக்கலை கல்லூரியில் பயின்ற பிறகு அவர் திருக்கோயில்கள் கட்டுதல் மற்றும் விக்ரகங்கள் செய்தல் போன்ற திருப்பணி களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். இவருடைய திறமைக்கு 1992ல் பத்மஸ்ரீ விருது இந்திய ஜனாதிபதி திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் மூலம் கிடைக்கப் பெற்றார். தற்சமயம் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையில் ஸ்தபதி ஆலோசக ராக 1990ல் இருந்து பணியாற்றி வருகிறார்.

பத்மஸ்ரீ சில்பகலாமணி எம். முத்தையா ஸ்தபதி, இவர் சிவகங்கை மாவட்டம், தேவகோட்டை சமீபம் எழுவங்கோட்டை என்னும் கிராமத்தில் பரம்பரையாக ஸ்தபதி குடும்பத்தில் பிறந்தவர். தேவகோட்டை இராம் நகரில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் பள்ளி படிப்பை முடித்து 1957ல் மகாபலிபுரத்தில் தமிழ்நாடு அரசால் ஆரம்பிக்கப்பட்ட சிற்பக்கலை பாடசாலையில் நான்கு வருடம் பயின்று சில்பகலையில் பட்டயம் பெற்றவர்.

இவர் இந்தியா மற்றும் அமேரிக்கா, லண்டன், தென் ஆப்பிரிகா, பேங்காக், இலங்கை, ஆஸ்திரேலியா போன்ற வெளிநாடுகளிலும் பல கோயில்கள் புதிதாக அமைத்தும், திருப்பணிகள் செய்தும், பல கல் விக்ரகங்கள் செய்தும் சாதனை படைத்துள்ளார்.

இவரை தொடர்ந்து இவருடைய மகன்கள் திரு. எம். முத்துக்குமார் மற்றும் திரு. எம். சீனிவாசன் ஆகிய இருவரும் இதே பணியில் ஈடுபட்டு வருகின்றனர்.

இவர் இந்தியாவில் அலகாபாத் 135 அடி உயர விமானம் உடைய திருபுவன கோயில், உத்தர சிதம்பரம் என அழைக்கப்படும் சதாராவில் உள்ள நடராஜர் கோயில் காலடியில் 150 அடி உயர ஆதி சங்கர மண்டபம், தமிழ்நாட்டில் ஸ்ரீவரதராஜர் திருக்கோயில் 130 அடி உயர இராஜகோபுரம், தென்காசியில் 175 அடி உயர இராஜகோபுரம், ஒரே கல்லால் ஆன 60 அடி உயர ஆதிசங்கர விக்ரகம் காஞ்சிபுரத்திலும், 60 அடி உயர கிருஷ்ணர் சிலை செய்து கல்கத்தா விலும், 32 அடி உயர ஆஞ்சநேயர் சிலை மும்பாய் மற்றும் நங்கநல்லூரிலும், 36 அடி உயர பஞ்சமுக ஆஞ்சநேயர் சிலை பாண்டிச்சேரியிலும், 18 அடி உயர விநாயகர் சிலை குண்டூரிலும் பிரதிஷ்டை செய்துள்ளது, சென்னையில் உள்ள பெசன்ட் நகரில் முழுக்க முழுக்க கருங்கல்லால் ஆன ஆறுபடைவீடு ஸ்ரீ முருகன் கோயிலும், பெங்களூரில் கருங்கல்லால் ஸ்ரீ பைரவர் கோயிலும் செய்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

தற்சமயம் 131 அடி உயர ஸ்ரீ வெங்கடேஸ்வரர் சிலை ஒரே கல்லால் காஞ்சி ஸ்ரீசங்கர மடத்தின் மூலம் செய்து வருகிறார்.

இவர் அமேரிக்காவில் ஹூஸ்டன் ஸ்ரீ மீனாட்சி கோயில், லாஸ் ஏன்ஜலஸில் சிவன் கோயில், சிகாகோவில் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் திருக்கோயில், சான்பிரான் சிஸ்கோவில் சிவா விஷ்ணு கோயில், நியூயார்க்கில் ஸ்ரீ கணபதி கோயில், வாஷிங்டனில் ஸ்ரீ முருகன் கோயில், மற்றும் பிட்ஸ்பர்க், நாஸ்வில், பாஸ்டன், அட்லாண்டா, லூயிவில்லி, மெம்பீஸ், டல்லாஸ், லான்சிங், ஒக்கலஹோமா, பொக்கிப்சி, வெல்மிங்டன், டாம்பா, மியாமி, டெலிவர் ஆகிய இடங்களில் இந்து கோயில்கள் கட்டியுள்ளார். மேலும் ஆஸ்திரேலியாவில் உள்ள சிட்னியில் ஸ்ரீ முருகன் கோயில், தாய்லாந்தில் உள்ள பேங்காக்கில் ஸ்ரீ மகாமாரியம்மன் திருக்கோயில், ஸ்ரீ லங்காவில் 20 அடி உயர ஆஞ்சநேயர் சிலை கருங்கல்லால் செய்து கோயிலும் கட்டியுள்ளார்.

தற்சமயம் நியூஜெர்ஸியில் கருங்கல்லால் ஸ்ரீ நடராஜர் கோயிலும், லண்டனில் கருங்கல்லால் ஸ்ரீ முருகன் கோயிலும் கட்டி வருகிறார்.

இவருடைய திறமைக்குப் பரிசாக 1976ல் ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயில் கும்பாபிஷேகத்தின் போது காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ பெரியவா மூலம் ''சில்பகலாமணி'' விருதும், 1992ல் இந்திய ஜனாதிபதி திரு. ஆர். வெங்கட்ராமன் மூலம் இந்திய அரசின் ''பத்மஸ்ரீ'' விருதும், 1985ல் காசி ராஜர் மூலம் அலகாபாத் திருபுவன கோயில் கும்பாபிஷேகத்தின்போது ''சில்பரத்னகாரா'' விருதும், அமேரிக்கா நியூயார்க் அத்யாயனா யூனிவர்சல் மிஷன் மூலம் ''மஹோன்நத சில்பகலா சிரோமணி'' விருதும், 2003ல் டாக்டர் பத்மா சுப்ரமணியம் அவர்களின் நிர்தோதயா நாட்டிய குழுவின் மூலம் ''கர்ண சில்ப வினோதா'' விருதும் கிடைக்கப் பெற்றார்.

தற்சமயம் தமிழ்நாடு அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையில் ஸ்தபதி ஆலோசகராக 1990ல் இருந்து பணியாற்றி வருகிறார்.

# பொருளடக்கம்

7. ஸ்ரீபெந்தம்
8. மஞ்சபந்தம்
9. ஸ்ரோணி பந்தம்
10. அம்போஜ கேசரம்
11. வப்ர பந்தம்
12. கலச பெந்தம்
13. ஸ்ரீகரகம்
14. சுந்தராம் புஜம்
15. நளின காந்தம்
16. ஸ்ரீ சௌந்தரீயம்
17. ஸகந்த காந்தம்
18. அம்புஜ காந்தம்

12. நாளப்பிரதிஷ்டை
13. பாதவர்கம்
14. கும்பமண்டியாதி
15. போதிகை லக்ஷணம்
16. வேதிகா லக்ஷணம்
17. பிரஸ்த்தர லக்ஷணம்
18. கண்டம்
19. சிகர லக்ஷணம்
20. நாகராதி விமானங்கள்
21. முகமண்டபம்
22. கூடலக்ஷணம்
23. மானசூத்ரம் - அளவு
24. பத்தி விதானம் மற்றும் எண்ணிக்கைகள்
25. ஒரு நிலம் - சாந்திகம், பௌஷ்டிகம், ஜயதம், அத்புதம், சார்வகாமிகம்
26. இரண்டு நிலம்
27. மூன்று நிலம்



ஸ்ரீ கணபதி விக்ரகம்



# சில்பசாஸ்த்திர தேவாலயவிதி



சில்பத்தை கையாண்டு வந்த மகான்களின பெயர்கள் விஸ்வகர்மா, விச்வேசன் விச்வஸாரனும் பிரகனும் விருதனும் மயனும் துவவஷ்டாவும் மனுவும் நளனும் மானவித்தும் மானகல்பனும், மிகுந்த கேள்வியறிவுடைய மானஸாரனும், பிரஷ்டாவும், மானபோதனும், விச்வ போதனும், நளனும், ஆதிஸாரனும் விசாரனும், விச்ச காச்யனும், வாஸ்து போதனும், மகாதந்திரனும், வாஸ்து வித்யாபதியும், பாராசரீயகனும், கால யூபனும், சைத்யனும், சித்திரகனும், ஆர்யனும், சாதகனும், ஸார ஸம்ஹிதனும், பானுவும், உலகை அறிந்த இந்திர னும், சில்பி சிரேஷ்டனான சௌரனும், இந்த 32 மஹான்களும் ரிஷி களாக கூறப்பட்டிருக்கின்றனர்.

பிருகு, அத்ரி, வசிஷ்ட்டர், விஸ்வகர்மா, மயன், நாரதர், நக்னஷித், விசாலக்ஷர், புரந்திரர், பிரம்மா, குமாரர், நந்தீசர், சௌனகர், பர்கர், வசுதேவர், அனிருத்தர், சுக்ரர், பிரஹஸ்பதி இந்த 18 பேர்களும் சில்ப சாஸ்த்திரம் எழுதியதாகவும் சொல்லப் படுகிறது.

மேதாவியான மயன் என்னும் முனிவர் ஸர்வஜ்ஞ னும், ஸகல ஜகத்திற்கும், ஈஸ்வரனுமான பரமேஸ்வரனை சிரத்தால் வணங்கி அவரைக் கேட்டு, அவரிடமிருந்து தேவர் கள், மனிதர்கள், பதார்த்தங்கள், எல்லாவற்றையும் ஸு்முக மாக கல்பிப்பபதைக் கூறுகின்ற சில்ப சாஸ்த்திரத்தை முறை யுடன் தெரிந்துகொண்டு அவைகளின் ஸ்வரூப லக்ஷணத்தைக் கூறுகிறார்.

முதலில் வஸ்து பிரகாரத்தையும் ( பிறகு) பூபரிக்ஷை, பூபரிகிரஹம், மானேபகரணம், சங்கு ஸ்தாபன மார்க்கம், பதம், ஸ்வர விந்யாஸம், பலிகர்ம விதி, கிராமாதி விந்யாஸம், நகராதி லக்ஷணம், பிரஸ்தர விதி, ஸாந்திகர்ம விதி, சிகரங்களின் லக்ஷணம், ப்ரகார லக்ஷணம், கோபுரங்களின் லக்ஷணம், மண்டபாதி விதி, சால லக்ஷணம், கிருஹ விந்யாஸ மார்க்கம், கிருஹ-







வேசனம், ராஜ வேம்ச விதானம், துவார விந்யாஸ லக்ஷணம், யான லக்ஷ்ணம், சயனலக்ஷணம், லிங்க லக்ஷணம், தேவ தேவிமான லக்ஷணம், அக்ஷீருண் மீலனம், இவைகள் எல்லா வற்றையும் சுருக்கமாக முறைப்படி கூறியிருக்கிறார்.

## சாஸ்த்திரங்களில் காணப்படுகின்ற சில்பசாஸ்த்ர நூல்கள்

ஈசானம், விஸ்வகர்ம்யம், மஹாவிஸ்வகர்மயம், பைரவம், சரஸ்வதீயம், வால்மீகம், பார்வதி லக்ஷமீயகம், பாரத்வயம், அகோரம், மயமதம், விருத்தமயமதம், பார்வகம், வாஸ்த்துவித்யா, பராசர்யம் மானசாரம், ப்ரயோக மஞ்சரி, கோபாலம், ப்ராம்ஹீயம், நாரதீயம் குலாலம், சித்ரமதம், கெளதம், சித்ரயாமளம் வஷிஷ்ட்டம், சித்ரபாகுல்யம், மனு ஹ¬ல்யம், மதிஸ்ம்ருதம், வேதவ்யாசமதம், பௌத்தம், நாரா யணீயகம், காவ்யம், சகளாதிகாரம், திவ்யகம் புண்டரீ காக்ஷம், விஸ்வாமித்திர சகஸ்ரம் முதலியவைகளாகும்.

## ஆகமங்களின் பெயர்கள்

காமிகம் யோகஜம் சிந்த்யம் காரணம் த்வஜிதம் ததா ।<br>
தீப்தம் சூக்ஷமம் சகஸ்ரம்ச அம்சுமான் சுப்ரபேதகம் ॥<br>
விஜயம் சைவ, நிச்வாசம் ஸ்வாயம் புவ மதாநலம் ।<br>
வீரம்ச ரௌரவம் சைவ மகுடம் விமலம் ததா ॥<br>
சந்த்ரஞாநம்ச பிம்பம் ச ப்ரோத்கீதம் லலிதம் ததா<br>
சித்தம், சந்தான சர்வோக்தம்பாரமேஸ்வரமேவசா ।<br>
கிரணம் வாதுளம் சைவா ப்யஷ்டவிம்சதிஸம்க்யகா: ॥



# சில்ப சாஸ்திரத்தில் முழக்கோல் லக்ஷணம்



## மானோபகரணம் - அளவுகோல்

கிராமங்களையும், தேவாலயங்களையும், மூர்த்திகளை யும், தேவாலயத்தில் குறிப்பாக, கெற்பக்ருஹம், முகமண்ட பம், மஹாமண்டபம், பிராகாரம், கோபுரங்கள், திருமதில் சுவர்கள் முதலிய சகலவற்றையும் அளந்து நிர்ணயம் செய்ய அளவுகோல். அங்குலம், யவை, முதலியவற்றின் மூலம் நம் முன்னோர்கள் அளந்து நிர்ணயம் செய்வதற்கான முழக்கோலை நிர்ணயம் செய்தார்கள். அதாவது இன்று ஆங்கிலத்தில், அங்குலம், அடி, கெஜம் முதலிய அளவுகள் இருப்பது போல் பழங்காலம் முதல் நமக்கு அளவுகோல் சொல்லப்பட்டுள்ளது. அதன்படிதான் தேவாலயங்கள், வீடுகள், கிராமங்கள், நகரங் களை அந்நாளில் அளந்து நிர்ணயம் செய்ய உபயோகப்பட்டது.

அங்குலம், முழம் எப்படி உண்டாயிற்று என்பதைப் பார்ப்போம்.

பரமாணு (கண்ணுக்குத் தெரியாத தூசி) 8 பாகம் கொண்டது 1 ரதரேணு. ரதரேணு (கண்ணுக்குத் தெரியும் தூசி) எட்டுக் கொண்டது கேசாக்ரம், (குழந்தை மயிர் நுனி).

மயிர் நுனி எட்டு கொண்டது ஒரு ஈர்.

ஈர் (தலையில் உள்ள சிறு ஈரு) எட்டு கொண்டது. 1 பேன்.

பேன் ( தலையில் உள்ளது) எட்டு கொண்டது. ஒரு யவை.

யவை (என்பது நெல் அகலம்) எட்டு கொண்டது ஒரு அங்குலம்.

இதைத்தான் நம் முன்னோர்கள் (மானாங்குலம்) அங்குலம் என நிர்ணயித்தார்கள். அது தற்சமயம் ஒரு அங்குலம் = 1', 3/8"





இங்கிலீஷ் இஞ்ச்சுக்கு சமமானது. அந்த மானாங்குலத்தில் 6 அங்குலம் = 1 தாலம் ஆகும். 12 அங்குலம் விதஸ்தி, 24 மானங் குலம் கொண்டது. ஒரு கிஷ்கு ஹஸ்தமாகும். இதையே முழம் என்று நம் முன்னோர்கள் சில்ப ஆகமங்களில் கூறுகிறார்கள். இந்த முழத்தால் மூர்த்தி தேவாலயம் முதலிய சகல அளவு களையும் அளந்து நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

அப்படியே 24 மானங்குலம் - 1 கிஷ்கு முழம்
25 மானங்குலம் - 1 பிராஜபத்யம் என்ற முழம்
26 மானங்குலம் - 1 தனுர் முஷ்டி
27 மானங்குலம் - 1 தனுர் கிராஹம்
28 மானங்குலம் - 1 பிராச்சியம்
29 மானங்குலம் - வைதேஹம்
30 மானங்குலம் - வைபுல்யம்
31 மானங்குலம் - ப்ரகீர்ணம்

அந்த முழக்கோல் 4 கொண்டது - 1 தண்டம்/

அது இன்று 1 கிஷ்கு முழம் (24 அங்குலம் கொண்டது) 2.9'' இங்கிலீஷ் அடி 1 மானாங்குலம் என்பது 1 3/8 இங்கிலீஷ் இஞ்ச் ஆகும். இதை கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

1 3/8 இங்கிலீஷ் இஞ்ச் - ஒரு மானாங்குலம்

2.9'' இங்கிலீஷ் அடி - 1 கிஷ்கு முழம் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

8 விதமான முழங்கள் அளவுகோல்கள் இருப்பினும் 24 அங்குலம் கொண்ட கிஷ்கு முழத்தால் எல்லாவற்றையும் அளக்கலாம் என சில்ப சாஸ்திரம் கூறுகிறது.

**இனி மாத்ராங்குலம் என்பது பற்றி அறிவோம்.**

கோவில் கட்டும் கர்த்தாவின் வலது கை மத்யம் விரலில் மூன்றும் பாகமாக உள்ளதில் மத்ய பாகத்தை நீளத்தாலும் அகலத்தாலும் சுற்றளவாலும் மூன்றும்விதமான அளவுகளுக்கு



மாத்ராங்குலம் எனப்படும். இந்த மூன்றுவித அளவுகளையும் ஒவ்வொன்றையும் 8 பாகம் செய்தால் அதுவும் 1 யவை ஆகும். யவையாலும், மாத்ராங்குலத்தாலும் ஆத்மார்த்த தேவாலயங்கள் மற்றும் மூர்த்திகளை செய்யலாம். ஆத்மார்த்தம் என்பது தனது வீட்டில் வைத்து பூஜை செய்யக்கூடிய சிறுகோவில்கள், மூர்த்திகள், கல், பஞ்சலோகம், மரம் ரத்தினங்களால் செய்து பூஜை செய்யப்படும். மேற்கூறப்பட்டது தான் மாத்ராங்குலம் எனப்படும்.

தேவர்களும் மஹரிஷிகளும் மனிதர்கள் வாழ்வதற்காக நகரங்களையும், கிராமங்களையும் அமைத்தும் கோவில்கள் அமைத்து விக்ரக வழிபாட்டிற்காகவும் சிறந்த நூல்களான சில்ப சாஸ்திரங்களை அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். அதில் பூமியை நல்ல பூமியாக நிர்ணயம் செய்வது முதல் கிராமங்களையும், நகரங்களையும் அமைத்து அதில் தேவாலயங்களை அமைத்தும் அதில் விக்ரக வழிபாட்டை செய்வதற்காகவும் மிக விரிவாக சில்ப சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது இச்சில்ப நூல்கள் 28 உள்ளன.



அதில் கூறிய விபரங்களை சுருக்கமாக நாம் தெரிந்து கொள்வோம். வருஷத்தில் தை மாதம் முதல் ஆனி மாதம் வரை. இந்த ஆறு மாதங்களும் உத்ராயணம் எனப்படும் ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை இந்த ஆறு மாதங்களும் தெக்ஷணாயனம் எனப்படும் உத்தராயணத்தில், தை, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி இந்த ஐந்து மாதங்கள், தேவாலயங்கள் முதலிய வேலை துவங்க நல்ல மாதங்கள். உத்தராயண மாதங்கள் சிறந்தது. இருப்பினும் தெக்ஷிணாயனத்திலும் ஆவணி, கார்த்திகை பரவாயில்லை. இருப்பினும் உத்தராயணம் என்பது புண்ய மாதங்கள். 6 ல் 5 மாதங்கள் சிறந்தது. இந்த நல்ல மாதங்களில் நல்ல நாள் திதி, நக்ஷத்திரம் சிறந்ததாக உள்ள சுபநாளில், அதாவது வெள்ளிக் கிழமை, புதன் கிழமை, திங்கள் கிழமை, வியாழன் கிழமை முதலிய நாட்களிலும் ரேவதி, புணர்பூசம், மகம், ஸ்வாதி, உத்திரம், சித்திரை, அனுஷம், திருவோணம், ஹஸ்தம், ரோஹினி, பூசம், அஸ்வதி,



மிருகசீர்ஷம் இந்த நட்சத்திரங்கள் கிரஹாரம்பம் செய்ய சிறந் தவைகளாகும்.

## பூபரிக்ஷா

தேர்ந்தெடுக்கப்பட்ட பூமியில் 1 முழம், 2'.9'' அகலம் 1 முழம் '2.9'' நீளம் 1 முழம் '2.9'' அடி ஆழம் உள்ளதாக பூமி யில் மண்ணை வெட்டி எடுக்க வேண்டும். அவ்விதம் எடுத்த மண்ணை மீண்டும் அக்குழியில் போட்டால் குழி நிறைந்தும் மீதம் மண் இருந்தால் அந்த பூமி உத்தமமான பூமியாகும். குழி நிரம்பி மண் மீதம் இல்லாது சமமாக நிறைந்திருந்தால் அது மத்யமான பூமியாகும். தோண்டிய மண்ணைக் குழியில் போட்டும் குழி நிரம்பாதிருந்தால் அந்த பூமி அதமமாகும் என அறிந்து கொள்ள வேண்டும்.

ஆகையால் உத்தமமான பூமியையே தேர்ந்தெடுத்து கிராமதிகள் அமைப்பதற்கு சிறந்ததென அறிந்து கொள்ள வேண்டும். அவ்விதம் தேர்ந்தெடுத்த பூமியில் இரண்டு காளை மாடுகளை கலப்பையில் பூட்டி கிழக்கு அல்லது வடக்கு முகம் நோக்கி உழுதல் வேண்டும். அதன்பின் அந்த உழுத நிலத்தில் தான்யங்களை விதைக்க வேண்டும். அதாவது எள், கடுகு, பயறு இவைகளை விதைத்து மூன்று நாளில் முளைத்தால் உத்தம் நிலமாகும். 4 நாளில் முளைத்தால் மத்யம் பூமியாகும். 5 நாளில் முளைத்தால் அதம பூமியாகும். இவ்விதம் தெரிந்து நல்லபூமியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

அந்த பூமியில் திசையறியும் விதம் 16 அங்குலம் உயரம் கொண்ட மரத்தில் அடியில் 16 அங்குலம் சுற்றளவு கொண்ட தாகவும் மேல் 1 அங்குலம் அகலம் உள்ளதாகவும் மரத்தால் செய்து அதற்கு சங்கு என்று பெயர்.சமம் செய்த பூமியில் சங்கு அகலத்தைப் போல இரண்டு மடங்கு அகலம் கொண்டதாக வட்டம் வரைந்து சங்குவை மையத்தில் வைத்து காலை வெயிலில் சங்கு நிழல் வட்டதில் படும் இடத்தில் குறித்துக் கொண்டு மாலை வெயிலில் மறுபக்கம் வட்டத்தில் விழும் இடத்தில் குறித்துக் கொண்டு அந்த இரண்டு கோட்டையும் நீண்டதாக வட்டத்தின் குறுக்கே வரைந்தால் அதுதான்



கிழக்கு மேற்கு, கிருத்திகை மாதத்தின் மத்யத்தில் சூரியன் நேர்கிழக்காகவும் மற்ற மாதங்களில் சாய்மானம் எவ்வளவு ஒதுக்கவேணும் என்று சொல்கிறது. அதன்படி யுக்தியினால் திசை நிர்ணயம் செய்ய வேண்டும். தற்காலத்தில் காம்பஸ் மூலம் கிழக்கு மேற்கு, வடக்கு தெற்கு அறிந்து கொள்ளலாம்.

வேண்டிய இடத்தில் வாஸ்து, ஹோமம் செய்து தேவா லயங்கள் கட்டுவதற்கு நிர்ணயம் செய்து வானம் வெட்டி, (பௌண்டேசன்) அஸ்திவாரம் போட்டு கோவில்களை ஆரம்பிக்க வேண்டும்.

கெற்பக்ருஹத்தின் மேல் அமைக்கப்படுவது விமான மாகும். இது 1 நிலம் முதற்கொண்டு 16 நிலங்கள் வரை விமானம் 16 விதம். முன்பக்கத்தில் நுழைவு வழியில் அமைக்கப் படுவது கோபுரமாகும். இதுவும் 16 நிலம் வரை அமைக்க சில்ப சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் கோபுரம் எது என்றும், விமானம் எது என்றும் தெரிந்து கொள்ள வேண்டும். கருவறையின் மேல் அமைப்பது விமானம் என்றும் வெளியில் நுழைவு வாசல் மேல் வருவது கோபுரம் என்றும் தெரிந்து கொள்ள வேண்டும். பிராசாதம் எனப்படும் கோவி லுக்கு பல பெயர்கள், சில்ப நூலில் சொல்லப்படுகிறது.

அதாவது பிராசாதம், சதனம், சத்மம், ஹர்ம்யம், தாமம், நிகேதனம், மந்திரம், பவனம், வாசம், கேஹம், திவ்ய விமானம், ஆஸ்பதம், ஆஸ்ரயம், ஆதாரம், மனோகரம், ஆராமம், ஆவ்ருதம், தைஷ்ணம் இவைகள் ஆலயங்களுக்கு பெயராகும்.

இப்பொழுது 1 நிலம் கருவரையின் மேல் செய்வதற் கான விமானம் பற்றி பார்ப்போம்.

1. அதிஷ்ட்டடாணம்
2. பாதவர்கம்
3. பிரஸ்த்தரம்
4. கண்டம்
5. சிகரம்
6. ஸ்தூபி







என ஆறு வர்க்கத்துடன் கூடியது 1 நிலை விமானம் இதில், உபபீடம் என்பது அதிஷ்ட்டானத்திற்கு உபரியாக வருகிறது. கோவிலின் பலத் திற்காகவும், அழகிற்காகவும் உபபீடத்தைச் செய்ய வேண்டும் என்று சில்ப நூல்கள் கூறுகின்றன.

அப்படிப்பட்ட உபபீடங்கள் அதிஷ்ட்டான உயரத்தால் சமம். 1/2, 5 பாகம் செய்து 3 பாகம்,1 1/4, 11/2,13/4, 2 பங்கு என எட்டுவிதமான உயரம் சொல்லப்பட்டுள்ளது.

## இனி உபபீடத்தின் பெயர்கள்

1. அஷ்ட்டாங்கம், 2. ஷடாங்கம், 3. பஞ்சாங்கம், 4. த்ரியங்கம், 5. பிரதிபத்ரம், 6. பிரதி சுந்தரம், 7. சௌபத்ரம், 8. கல்யாண காரிகை என எட்டுவிதமான உபபீடங்கள் சொல்லப்பட்டுள்ளன.

பொதுவாக, அதிஷ்ட்டான உயரத்தை, 6, 7, 8 பாகம் செய்து 1 பாகம் பாத அகலம் (குட்ய பாத அகலம் எனப்படு கிறது) அல்லது ஸ்தம்ப உயரத்தை 7, 8, 9, 10, 11, 12 பாகம் செய்து 1 பாகம் பாதத்தின் அகலம். இவைகளை எந்த இடத் தில் கொள்ள வேண்டும் என்று ஸ்தபதி யுக்தியாலே கொள்ள வேண்டும்.

**1. அதிஷ்ட்டானம்**

| | | |
|---|---|---|
| கம்பு | - | 1 |
| வாஜனம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| கம்பு | - | 1/2 |
| கண்டம் | - | 5 |
| கம்பு | - | 1/2 |
| பத்மம் | - | 1 |
| உபானம் | - | 2 |
| மொத்தம் | - | 12 |



ஷடாங்கம் உப பீடம் 12 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| கம்பு | - | 1 |
| பட்டியல் | - | 2 |
| கம்பு | - | 1/2 |
| கண்டம் | - | 5 |
| கம்பு | - | 1/2 |
| உபானம் | - | 3 |
| | | 12 |

பஞ்சாங்கம் உப பீடம் 12 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பட்டியல் | - | 3 |
| கம்பு | - | 1/2 |
| கண்டம் | - | 5 |
| கம்பு | - | 1/2 |
| உபானம் | - | 3 |
| | | 12 |

த்ரியாங்கம் உப பீடம் 12 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பட்டியல் | - | 3 1/2 |
| கண்டம் | - | 5 |
| உபானம் | - | 3 1/2 |
| | | 12 |

அடுத்து பிரதி பத்ரம், உபபீட உயரத்தை 27 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பாதம் | - | 2 |
| பத்மம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| களம் | - | 12 |
| கம்பம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| கபோதகம் | - | 3 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரினி | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜானம் | - | 1 |
| மொத்தம் | - | 27 |







பிரதி சுந்தரம் 27 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பாதம் | - | 2 |
| பத்மம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| அத்தரி | - | 1 |
| ப்ரதி | - | 2 |
| வாதுமை | - | 1 |
| கண்டம் | - | 8 |
| கம்பம் | - | 1 |
| தாமரை | - | 1 |
| கபோதகம் | - | 3 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரி | - | 1 |
| ப்ரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| மொத்தம் | - | 27 |

உபபீட உயரத்தை 21 பாகம் செய்து சௌபத்தரம்

| | | |
|---|---|---|
| உபானம் | - | 2 |
| பத்மம் | - | 2 |
| கம்பு | - | 1/2 |
| பத்மம் | - | 1/2 |
| பட்டிகை | - | 2 |
| பத்மம் | - | 1/2 |
| கம்பு | - | 1/2 |
| கண்டம் | - | 8 |
| கம்பு | - | 1/2 |
| பத்மம் | - | 1/2 |
| கபோதகம் | - | 3 |
| கம்பு | - | 1 |
| மொத்தம் | - | 21 |

த்ரியாங்க உபபீடம்
12 கூறுகள் செய்து

பஞ்சாங்க உபபீடம்
12 கூறு்கள் செய்து



ஷடாங்க உபபீடம்
12 கூறுகள் செய்து




அஷ்ட்டாங்க உபபீடம்
12 கூறுகள் செய்து



ப்ரதிபத்ர உபபீடம்
27 பாகம் செய்து




ப்ரதிசுந்தர உபபீடம்
27 பாகம் செய்து



சௌபத்ர உபபீடம்
21 பாகம் செய்து




கல்யாண காரிகை உபபீடம்
23 பாகம் செய்து





*கல்யாண காரிகை 25 பாகம் செய்து*

| | | |
|---|---|---|
| உபானம் | - | 2 |
| பத்மம் | - | 3 |
| கம்பு | - | 1 |
| பத்மம் | - | 2 |
| பட்டியல் | - | 2 |
| பத்மம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| கண்டம் | - | 7 |
| கம்பு | - | 1 |
| பத்மம் | - | 1 |
| பட்டியல் | - | 2 |
| பத்மம் | - | 1 |
| கம்பு | - | 1 |
| **மொத்தம்** | - | **25** |

ஆக 8 விதம் உபபீடம் சொல்லப்பட்டுள்ளது.

அதிஷ்ட்டானம் 28 விதம் உள்ளது; அதிஷ்ட்டானத்தில் பாத பெந்தம் என்றும் பிரதி பெந்தம் என்றும் இருவிதம் உள்ளது. பாத பெந்தம் அதிஷ்டானத்தில் பஞ்சவர்க்கத்தில் வாசல் வைக்கலாம். பிரதி பெந்தத்தில் பிரதி மேல்மட்டத் தில் தான் வாசல் வைக்க வேண்டும்.



## அதிஷ்ட்டானம் பெயர்கள்

தராதலம், அதிஷ்ட்டானம், ஆதாரம், தரணி, புவனம், பிருத்வி, பூமி என்று அதிஷ்ட்டானத்திற்கு பெயர்களாகும்.

இது பஞ்சவர்க்கங்களை உடையது.

1. உபானம் 2.ஜகதி, 3.குமுதம், 4.கண்டம், 5.பட்டியல். இந்த ஐந்து வர்க்கங்களிலும் வாசல் வைக்கலாம். இவ்வித அதிஷ்ட்டானம் பாதபெந்தம் எனப்படும்.





அதிஷ்ட்டான வகைகளில் 'பிரதி பெந்தம்'' என்று உள்ளது. இவ்வித அதிஷ்ட்டானத்தில் அதிஷ்ட்டான மேல் மட்டம் அதாவது பிரதியின் மேல் மட்டத்தில் தான் வாசல் வைக்கவேண்டும் என்று சில்ப நூல்களில் கூறப்பட்டுள்ளது. இதற்கு மாறுதலாக வைத்தால் பலவித துன்பங்கள் நேரிடும் என்பது சாஸ்த்ரம்.

ஆகையால் இந்த மாதிரி அதிஷ்ட்டானங்களை இராஜ கோபுரங்களுக்கு செய்யக்கூடாது. ஏனென்றால் இராஜகோபுரம் உபபீடத்தையும் சேர்த்து வாசல் வருவதால் இந்த பிரதி பந்த அதிஷ்ட்டான பேதங்களைச் செய்யக்கூடாது. இந்த அதிஷ்ட் டானங்களை மஹா பிராசாதம் என்கின்ற பெரிய கோவில் களில் உபயோகப்படுத்தலாம்.

ஆகையால் பாத பெந்த பேதம் என்றும் பிரதி பெந்த பேதம் என்றும் இருவகை உள்ளதை தெரிந்து கொள்ள வேண்டியது முக்கியம்.

அதாவது பாத பெந்த பேதங்களில் அதிஷ்ட்டானத்தை துண்டித்து 5 இடங்களில் வாசல் வைக்கலாம். பிரதி பெந்த பேத அதிஷ்ட்டானங்களில் அவ்விதம் அமைக்கமுடியாது. ஒரே மேல் மட்டத்தில்தான் வைக்கவேண்டும் என உறுதியாக தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த அதிஷ்ட்டானக் களத்திகள் கெற்பக்ருஹம் கால் புறவாய் எனப்படும். சுவற்றில் இருந்து களத்தி கொள்ள வேண்டும்.

அதிஷ்ட்டானத்தில் பிரதி பெந்த பேதம் இருந்தால் அதில் குமுதகம் விருத்தமாக அமைய வேண்டும். அதாவது வட்ட வடிவமான குமுதமாகும். பாத பெந்த அதிஷ்ட்டானத் தில் குமுதம் 8 பட்டையாக அமைய வேண்டும்.

அதே மாதிரி பிரதி பெந்த பேத அதிஷ்ட்டானம் தான் கலக்க வேண்டும்.



இதற்கு மாறுதலாக செய்யக்கூடாது என்று சில்ப நூல்கள் வலியுறுத்தியுள்ளன.



### பிரதி பெந்தம் (ப்ரதி பெந்த பேதம்)

அதிஷ்ட்டான உயரத்தை 19 கூறு செய்து

| | | |
|---|---|---|
| உபானம் | - | 1 |
| ஜகதி | - | 7 |
| குமுதம் | - | 6 |
| ஆலிங்க | - | 1 |
| அந்தரி | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| **மொத்தம்** | - | **19** |

பாத பெந்தம் அதிஷ்ட்டானம் (பாத பெந்த பேதம்) அதிஷ்ட்டான உயரத்தை 25 கூறுகள் செய்து

| | | |
|---|---|---|
| உபானம் | - | 1 |
| ஜகதி | - | 8 |
| குமுதம் | - | 7 |
| கம்பம் | - | 1 |
| கண்டம் | - | 3 |
| கம்பம் | - | 1 |
| பட்டியல் | - | 3 |
| கம்பம் | - | 1 |
| **மொத்தம்** | - | **25** |

### ப்ரவிருதி பெந்தம் (பிரதி பெந்தபேதம்)

மொத்தம் உயரத்தை 21 கூறு செய்து

| | | |
|---|---|---|
| பாதகம் | - | 1 |
| அம்புஜம் | - | 11/2 |
| கம்பம் | - | 1/2 |





| | | |
|---|---|---|
| ஜகதி | - | 7 |
| குமுதம் | - | 6 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரி | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| மொத்தம் | - | 21 |

அம்போஜகேசரம் ( பாத பெந்த பேதம்)

26 கூறுகள் செய்து

| | | |
|---|---|---|
| உபானம் | - | 1 |
| தளம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| ஜகதி | - | 6 |
| பத்மம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| அப்ஜம் | - | 1 |
| குமுதம் | - | 3 |
| பத்மம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| கண்டம் | - | 2 |
| கம்பு | - | 1 |
| தளம் | - | 1 |
| மஹாபட்டி | - | 2 |
| தளம் | - | 1 |
| கம்பு | - | 1 |
| மொத்தம் | - | 26 |

புஷ்ப புஷ்கல அதிஷ்ட்டானம் ( பாத பெந்த பேதம்)

உயரத்தை 19 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| உபானம் | - | 1 |
| பத்மம் | - | 3 |



| | | |
|---|---|---|
| கம்பம் | - | 1/2 |
| ஜகதி | - | 4 |
| பத்மம் | - | 1/2 |
| தளம் | - | 1/2 |
| பத்மம் | - | 1/2 |
| பட்டம் | - | 3 |
| பத்மம் | - | 1/2 |
| கம்பம் | - | 1/2 |
| கண்டம் | - | 1 1/2 |
| கம்பம் | - | 1/2 |
| பத்மம் | - | 1/2 |
| பட்டிகை | - | 1 1/2 |
| பத்மம் | - | 1/2 |
| கம்பு | - | 1/2 |
| மொத்தம் | - | 19 |



ஸ்ரீபெந்த (பிரதி பெந்த பேதம்)

அதிஷ்ட்டானம் உயரத்தை 32 பாகம் செய்து,

| | | |
|---|---|---|
| போபானம் | - | 2 |
| உபானம் | - | 2 |
| கமலம் | - | 7 |
| கண்டம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| குமுதம் | - | 4 |
| தளம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| கண்டம் | - | 3 |
| கம்பம் | - | 1 |





| | | |
|---|---|---|
| தளம் | - | 1 |
| கபோதகம் | - | 3 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரி | - | 1 |
| பிரதி | - | 2 |
| விஜனம் | - | 1 |
| ஆக | - | 32 கூறு இது பிரதிபந்த பேதம் |

மஞ்சபந்தம் பிரதிபாதபந்தம் ( பாத பெந்த பேதம்)

| | | |
|---|---|---|
| உபானம் | - | 1 |
| ஜகதி | - | 6 |
| குமுதம் | - | 5 |
| கம்பம் | - | 1 |
| தளம் | - | 3 |
| கம்பம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| கபோதகம் | - | 3 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரம் | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| | | 26 |

பாத பெந்தம் 26 பாகம் செய்து ஸ்ரோணி பெந்தம் ( பாத பெந்த பேதம்)

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 1 |
| தளம் | - | 2 |
| கம்பு | - | 1 |
| ஜகதி | - | 6 |
| குடம் | - | 4 |
| கம்பம் | - | 1 |
| பத்மம் | - | 2 |
| மேல்கம்பு | - | 1 |



| | | |
|---|---|---|
| களம் | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| கமலம் | - | 1 1/2 |
| கம்பம் | - | 1 1/2 |

18 பாகம் செய்து அப்ஜபந்தம் (பிரதி பாத பேதம் )

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 1 1/2 |
| கம்பம் | - | 1/2 |
| பந்தகம் | - | 5 |
| களம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| குமுதம் | - | 3 |
| பத்மம் | - | 1 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரி | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| | | 18 |

22 பாகம் செய்து வப்ரபந்தம் ( பாத பெந்த பேதம்)

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 2 |
| அப்ஜம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| ஜகதி | - | 5 |
| குமுதம் | - | 4 |
| பத்மம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| கண்டம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| தளம் | - | 1 |
| மஹாபட்டி | - | 2 |
| கம்பம் | - | 1 |
| | | 22 |







24 பாகம் செய்து கலச பெந்தம்

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 1 |
| அப்ஜம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| கண்டம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| பட்டி | - | 3 |
| கம்பம் | - | 1 |
| தளம் | - | 2 |
| கண்டம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| கும்பம் | - | 3 |
| பத்மம் | - | 1 |
| ஆலிங்கம் | - | 1 |
| அந்தரி | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| | | 24 |

16 பாகம் ஸ்ரீகரம்

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 2 |
| பத்மம் | - | 2 |
| அப்ஜம் | - | 1 |
| ஜகதி | - | 6 |
| பத்மம் | - | 1 |
| க்ண்டம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| கலசம் | - | 1 |
| கமலம் | - | 1 |
| | | 16 |








**24 பாகம் செய்ய சுந்தரம் புஜம்**

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 2 |
| உபாதகம் | - | 1 |
| தளம் | - | 6 |
| கண்டம் | - | 1 |
| அப்ஜம் | - | 1 |
| கண்டம் | - | 3 |
| தளம் | - | 1 |
| விருத்தகம்பம் | - | 1 |
| கண்டம் | - | 3 |
| தளம் | - | 1 |
| பட்டிகை | - | 2 |
| தளம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| | | 24 |

**28 பாகம் செய்து நளின காந்தம்**

| | | |
|---|---|---|
| பாதகம் | - | 2 |
| தளம் | - | 4 |
| களம் | - | 1 |
| அம்புஜம் | - | 2 |
| பட்டிகை | - | 2 |
| பாதகம் | - | 1 |
| ஜகதி | - | 4 |
| பத்மம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| பத்மம் | - | 1 |
| குமுதம் | - | 3 |
| பத்மம் | - | 1 |







| | | |
|---|---|---|
| கம்பம் | - | 1 |
| த்ரிபட்டம் | - | 1 |
| விருதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| | | 28 |

23 பாகம் செய்து ஸ்ரீசௌந்தரீயம்

| | | |
|---|---|---|
| பாதுகம் | - | 1 1/2 |
| உபபாதகம் | - | 1 1/2 |
| கீழ்பத்மம் | - | 2 |
| கண்டம் | - | 1 |
| உபபாதகம் | - | 1 |
| குமுதகம் | - | 3 |
| பத்மம் | - | 1 |
| உபபாதகம் | - | 1 |
| கண்டம் | - | 2 |
| பட்டிகை | - | 1 |
| பத்மம் | - | 1 |
| ஆலிங்கம் | - | 1 |
| தரிபட்டம் | - | 3 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |
| | | 23 |

24 பாகம் செய்து ஸ்கந்த காந்தம்

| | | |
|---|---|---|
| உபபாதகம் | - | 1 |
| தளம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| ஜகதி | - | 5 |
| குமுதம் | - | 4 |
| பத்மம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| ஊர்த்வபத்மம் | - | 1 |



| | | |
|---|---|---|
| வாஜனம் | - | 2 |
| பத்மம் | - | 1 |
| ஆலிங்கம் | - | 1 |
| த்ரிபட்டம் | - | 1 |
| பிரதி | - | 2 |
| வாஜனம் | - | 1 |

அதிஷ்ட்டான உயரத்தை 23 பாகம் செய்து அம்புஜகாந்தம்

| | | |
|---|---|---|
| உபபாதகம் | - | 1 |
| அம்புஜம் | - | 6 |
| கண்டம் | - | 1 |
| ஊர்த்தவம் | - | 1 |
| கடம் | - | 4 |
| பத்மம் | - | 1 |
| கம்பம் | - | 1 |
| கந்தரம் | - | 2 |
| கம்பம் | - | 1 |
| ஊர்த்தவம் | - | 1 |
| சபேதகம் | - | 3 |
| ஆலிங்கம் | - | 1 |
| ஆக | - | 23 |



பரதிபெந்த அதிஷ்ட்டானம்
19 பாகம் செய்து




ப்ரவிருதிபந்த அதிஷ்ட்டானம்
21 பாகம் செய்து



## பாதபந்த அதிஷ்ட்டானம்
## 25 பாகம் செய்து



அம்போஜகேசர அதிஷ்ட்டானம்
26 பாகம் செய்து





அனந்த ஸ்தானத்தில் வஸ்ரத்தை வைக்கவேண்டும். ஸூக்ஷ்ம மத்தில் முத்தை வைக்கவேண்டும்.

சிலோத்தமததில் இந்த்ர நீலத்தை வைக்கவேண்டும். ஏக நேத்ரத்தில் ஸ்படிகத்தை வைக்கவேண்டும். ஏகருத்ரனில் சங்கத்தை வைக்கவேண்டும்.

திருமூர்த்தித்தில் புஷ்ப நாகத்தை வைக்கவேண்டும். ஸ்ரீ கண்டத்தில் சூரியகாந்தத்தை வைக்கவேண்டும். சிகண்டத்தில் வைடூர்யத்தை வைக்க வேண்டும்.

புத்திமானாக இருப்பவன் ஸுவர்ணத்தினாலே உலகத்தை செய்து அகாரலத்தில் வைக்கவேண்டும்.

ஆரகூடத்தில் அந்த துவாரத்தை செய்து ருகாரத்தில் வைக்கவேண்டும். புத்திமானாக இருப்பவன் வெண்கலத்தினாலே பினாகத்தைச் செய்து லுகாரத்தில் வைக்கவேணும். ஈயத்தினாலே பரசு (கோடாலி) செய்து ஏகாரத்தில் வைக்க வேண்டும்.



த்ரபுவினால் ( துரா பித்தளை) மானைச் செய்து ஒகாரத்தில் வைக்கவேண்டும். இரும்பினாலே முச்சூலத்தைச் செய்து அம்காரத்தில் வைக்கவேண்டும். தங்கத்தினாலே விருஷபத்தைச் செய்து கூடாகூரத்தில் வைக்கவேணும். சமயயை (ஜாதிக்காய்) ஆகாரத்தில் வைக்கவேணும். மனோசிலையை ஈகாரத்தில் வைக்கவேண்டும். ஜாதிலிங்கத்தை ஊகாரத்தில் வைக்க வேண்டும். கைரிகத்தை ருகாரத்தில் வைக்கவேணும். சௌராஷ்டிரத்தை லூகாரத்தில் வைக்கவேணும் அஞ்சனத்தை (அஞ்சனத்தில்) ஐகாரத்தில் வைக்கவேணும். கோரோசனையை ஔங்காரத்தில் வைக்கவேணும். நீலாகாரத்தை (நீல நிறமான தாதுப் பொருள்) விஸர்க்கத்தில் வைக்க வேண்டும். அந்த அந்த வஸ்துவை அந்த அந்த பீஜத்தை நினைத்துக்கொண்டு கிரமமாக வைக்க வேண்டும்.





யவை நீவாரம் சம்பாநெல் ப்ரியங்கு (தானிய விசேஷம்) எள், கடுகு, பயறு ஏழுவிதைகளையும் கற்பாஜனத்தில் நிரப்ப வேணும்.

அதை முறையுடன் மூடி மூடியானது கற்பாஜனத்தின் வாயில் நன்கு பொருந்தி அழுத்தமாக இருக்கும்படி செய்ய வேணும்.

பிராஸாதத்தின் வடபாகத்தில் முன்பக்கத்தில், ஐந்து ஹஸ்தம், ஆறு ஹஸ்தம், ஏழு ஹஸ்தம் அளவில் 16 தூண்களுடன் கூடிய பிரபையை (யாகசாலையை) வெகு அழுத்தமாக கல்பிக்க வேணும்.

அதன் ஊர்த்துவபாகத்தை விதானத்தினாலே மறைக்க வேண்டும் அலைகளினாலே ஸ்தம்ப வேஷ்டங்களினாலே அலங்காரம் செய்யவேணும். அது துவார தோரணத்துடனிருக்க வேணும். தர்பமாலை முதலியவைகளினாலே அலங்காரம் செய்யப்பட்டிருக்க வேணும்.

மண்டபத்தில் மூன்றில் ஒருபாகம் இருக்கும்படி மண்டப மத்தியில் வேதியை கல்பிக்கவேணும். அவைகள் முறையே கிழக்கு முதலிய திக்குகளில் சதுரவடிவமாகவும் தனுஷ் வடிவ மாகவும் வட்ட வடிவமாகவும் பத்ம வடிவமாகவும் இருக்க வேண்டும். குண்டமானது மூன்று மேகலைகளுடனும் நாபி, யோனி இவைகளுடன் கூடியதாகவும் இருக்கவேணும்.

குண்டதலம், வேதிதலம் இவைகளை கண்ணாடியின் மத்யத்தை போலிருக்கும்படி செய்யவேணும். அதை இவ்வித மாக செய்யச் செய்து பசுவின் சாணத்தினால் மெழுக வேண்டும். பிறகு அதைத்துடைத்து பிஷ்ட்ட சூர்ணங்களினாலே (அரிசிமா வர்ணபொடிகள் இவைகளினாலே) அலங்காரம் செய்து புண்ணியா வாசனம் செய்து அந்த ஜலத்தினாலே புரோக்ஷணம் செய்யவேண்டும். நான்கு தூணி நெல்லை ஸ்தண்டிலத்தில் கொட்டிப்பரப்பி மேடையைக் கல்பிக்க வேண்டும் அதற்கு மேலே எள்ளு அரிசி பொரி தர்பை புஷ்பம் இவைகளைப்



பரப்ப வேண்டும். அந்த கற்பாஜனத்தை மேலே நூல் சுத்தி புதிய வஸ்த்திரத்தினால் சுத்தவேண்டும். அதை ஸ்தண்டிலத்தின் மத்தியில் கூடாக்ஷரத்தை சொல்லிக்கொண்டு வைக்கவேணும். அதை சுற்றிலும் கிழக்கு முதலிய எட்டு திக்குகளிலும் நூல் சுத்தப்பட்டும் மூடப்பட்டும் ரத்தினங்கள் போடப்பட்டும் வஸ்த்தரம் சாத்தப்பட்டும் சந்தனம் முதலியவைகளினாலே அலங்காரம் செய்யப்பட்டதுமான எட்டு கும்பங்களை வைக்க வேண்டும்.



மத்தியில் உள்ள கற்ப பாத்திரத்தில் விஸ்வேச்வரனை அவருடைய மந்திரத்தினாலே ஆவாஹநம் செய்ய வேண்டும்.

சந்தோதகம் பசும்பால் முதலியவைகளினாலே ஸ்நாநம் செய்து வைத்து சந்தனம் புஷ்பம் முதலியவைகளினாலே பூஜை செய்யவேண்டும். பிறகு குண்டங்களுக்கு பஞ்ச சமஸ்காரம் செய்து ஹோமத்தைத் துவக்க வேண்டும். அக்னியாதானாதிகம் முதலிய அக்னி கார்யங்களை விதியுடன் செய்ய வேண்டும். பிறகு சமிது, நெய், அன்னம், பொரி, எள்ளு, அரிசி, கடுகு இவை களை நமோந்தமான ஹ்ருதயாதி மந்திரங்களினாலும், ஈசான மந்திரத்தினாலும் தனித்தனியே 108 தடவை ஹோமம் செய்யவேண்டும். ஒவ்வொரு திரவிய ஹோமமும் முடிந்தவுடன் வியாஹ்ருதிகளினாலே ஹோமம் செய்ய வே்ண்டும். பிறகு மூலமந்திரத்தினாலே 100 தடவை ஹோமம் செய்ய வேண்டும். அதன்பிறகு ஜயாதி ஹோமம் ராஷ்ட்ரப்ருத ஹோமம் அப்பியாதன ஹோமம் இவைகளைச் செய்ய வேண்டும். அன்று இரவு தூங்காமல் விழித்துக் கொண்டிருக்க வேண்டும்.

விடியும்பொழுது நல்ல முகூர்த்தம் நல்ல நக்ஷத்திரம் நல்ல லக்னம் நல்ல திதி நல்ல வாரம் இவைகளுடன் கூடிய காலத்தில் சிவத்விஜகுலத்தில் பிறந்தவனும் சிவதீக்ஷை பெற்றவனுமான ஆச்சார்யன் ஸ்னானம் செய்து வெண்மையான ஆடையணிந்துகொண்டு ஸகலீரணம் செய்துகொண்டு வெண்மையான உத்தரியத்தை தரித்துக்கொண்டு வெண்மையான மாலை சந்தணங்களை அணிந்துகொண்டு அங்கு ஆச்சார்யர்களை வஸ்த்ரம் ஸுவர்ணத்தினாலே செய்யப்பட்ட மோதிரம் இவைகளினாலே பூஜிக்க வேண்டும். பிறகு யஜமானன் ஆச்சார்யன் சில்பி, இவர்கள் கற்பன்யாசம் செய்ய வேண்டிய





இடத்திற்கு சென்று சுவற்றை எட்டுப் பாகங்களாகச் செய்ய வேண்டும். அவைகளில் நான்கு பாகங்களை வெளிப்பக்கத்தில் ஒதுக்க வேண்டும் மூன்று பாகங்களை உள்கையால் விலக்கி மீதமுள்ள மத் ய பாகத்தில் கற்பாஜனத்தை வைக்க வேண்டும்.

மடு ( நீர் தேக்கம்) 1, நதி 2, வயல் 3, புத்து 4, கலப்பை நுனி 5, நண்டுவளை 6, யானையின் தந்தம் 7, காளையின் கொம்பு 8. இந்த 8 இடங்களில் இருந்து கொண்டுவரப்பட்ட மண்ணை ஆச்சார்யன் நமஃ என்று சொல்லிக் கிழங்குகளை வைக்கவேண்டும். அதன் நடுவில் தாமரைக் கிழங்கை வைக்க வேண்டும். கிழக்கு திக்கில் ஆம்பல் (அல்லி கிழங்கையும்) தெற்கில் நீலோத்பலக் கிழங்கையும் மேற்கில் செங்கழி நீர்க் கிழங்கையுமம் வடக்கில் விளாமிச்சைக் கிழங்கையும் வைக்க வேண்டும். அதற்கு மேலே விதைகளை வைக்க வேண்டும். கிழக்கில் சம்பா நெல்லை வைக்க வேண்டும். தெற்கில் வ்ரிஹி (துவரை) தானியத்தை வைக்கவேண்டும். மெற்கில் கோத்ரவ (வரகு) தானியத்தை வைக்க வேண்டும். வடக்கில் மாஷ (உளுந்து) தானியத்தை வைக்க வேண்டும். தென்கிழக்கில் பயறும் தென்மேற்கில் தினையையும் வடமேற்கே பிரியங் குரம் என்னும் தானியத்தையும் ஈசான்யத்தில் கொள்ளையும் வைப்பான். இவைகள் ஹ்ருதய மந்திரத்தினாலே வைக்க வேண்டும்.

பிறகு ஸகலவாத்ய கோஷங்களுடனும் நாட்யங்களுட னும் பாட்டுக்களுடனும் ஜயசப்தங்களுடனும் வேத கோஷங் களுடனும் பிராஸத பீஜத்தைச் சொல்லிக்கொண்டு கற்பா ஜனத்தை ஸ்தாபனம் செய்யவேண்டும்.

அதற்கு மேலே கருங்கல் அல்லது செங்கல்லை வைத்து சுதையினாலே நன்கு திடமாக (உறுதியாக) இருக்கும்படி செய்ய வேண்டும்.

சந்தனம் புஷ்பம் முதலியவைகளினாலே அந்த கற்பா ஜனத்தை பூஜை செய்து பிறகு அதற்கு மேலே பிராசத்தைக் கற்பிக்க வேண்டும்.



# ஆயாதிலக்ஷணம்

நாம் வசிக்கும் வீடுகள் முதல் தேவாலயங்கள் வரை மற்றும் திருவுருவங்களையும் ரதம் வாஹனம், ஊர், தடாகம் மற்றும் சகல வஸ்த்துக்களையும் சுபமான அளவுகளின்படி வஸ்த்துவின் அளவுக்கு உள்ள நக்ஷத்திரம் ராஜா, கர்த்தா முதலிய செய்விப்பவர்களின் நக்ஷத்திரம் முதலியவை சரிபார்த்து ஆயாதி சுபமாக அமையும்படி செய்விக்க வேண்டும். அதில் 16 பொருத் தமும் கூடிய அளவு எண்கள் கீழே தரப் பட்டுள்ளது. அதன்படி தராபலன் பார்த்து சுபஆயாதி கொள்ளவேண்டும்.

இது முக்கியம். முன்னோர்கள் காலத்திலிருந்தே கடைப் பிடித்து வந்துள்ள இந்த அளவுகளே. இவை முழமாகவும் இருக் கலாம். அங்குலமாகவும் இருக்கலாம். யவையாகவும் இருக் கலாம்.



| | | | |
|---|---|---|---|
| *17* | அஸ்வதி | - | சிம்மம் யோனி |
| *21* | திருவாதிரை | - | யானை யோனி |
| *27* | ரேவதி | - | கொடி யோனி |
| *37* | உத்திரட்டாதி | - | யானை யோனி |
| *55* | பூசம் | - | விருஷபம் யோனி |
| *127* | அனுஷம் | - | விருஷபம் யோனி |
| *129* | திருவாதிரை | - | சிம்மம் யோனி |
| *239* | திருவோணம் | - | விருஷபம் யோனி |
| *243* | ரேவதி | - | கொடியோனி |
| *253* | உத்திரட்டாதி | - | யானை யோனி |
| *307* | உத்திரட்டாதி | - | கொடி யோனி |
| *347* | திருவோணம் | - | கொடி யோனி |
| *351* | ரேவதி | - | விருஷபம் யோனி |
| *453* | பூசம் | - | சிம்மம் யோனி |





| | | | |
|---|---|---|---|
| 505 | அனுஷம் | - | சிம்மம் யோனி |
| 507 | திருவாதிரை | - | கொடி யோனி |
| 509 | திருவோணம் | - | யானை யோனி |
| 523 | உத்திரட்டாதி | - | கொடி யோனி |
| 595 | பூசம் | - | கொடி யோனி |
| 617 | திருவோணம் | - | சிம்மம் யோனி |
| 621 | ரேவதி | - | யானை யோனி |
| 685 | உத்திரட்டாதி | - | யானை யோனி |
| 729 | ரேவதி | - | சிம்மம் யோனி |
| 779 | திருவோணம் | - | கொடி யோனி |
| 783 | ரேவதி | - | விருஷபம் யோனி |
| 883 | அனுஷம் | - | கொடி யோனி |
| 885 | திருவாதிரை | - | யானை யோனி |
| 887 | திருவோணம் | - | விருஷபம் யோனி |
| 973 | பூசம் | - | யானை யோனி |
| 977 | ஹஸ்தம் | - | சிம்மம் யோனி |
| 981 | கேட்டை | - | யானை யோன |
| 999 | ரேவதி | - | விருஷபம் யோனி |
| 1009 | உத்திரட்டாதி | - | சிம்மம் யோனி |
| 1101 | திருவாதிரை | - | யானை யோனி |
| 1107 | ரேவதி | - | துவஜம் யோனி |
| 1155 | திருவாதிரை | - | கொடி யோனி |
| 1157 | திருவாதிரை | - | யானை யோனி |
| 1161 | ரேவதி | - | சிம்மம் யோனி |
| 1249 | பரணி | - | சிம்மம் யோனி |
| 1259 | அஸ்வதி | - | கொடி யோனி |
| 1387 | உத்திரட்டாதி | - | கொடி யோனி |
| 1475 | பூசம் | - | சிம்மம் யோனி |
| 1479 | திருவாதிரை | - | விருஷபம் யோனி |



| | | | |
|---|---|---|---|
| 1485 | ரேவதி | - | யானை யோனி |
| 1529 | அஸ்வதி | - | சிம்மம் யோனி |
| 1533 | திருவாதிரை | - | யானை யோனி |
| 1539 | ரேவதி | - | கொடி யோனி |
| 1637 | அஸ்வதி | - | யானை யோனி |
| 1639 | அனுஷம் | - | விருஷபம் யோனி |
| 1657 | உத்திரட்டாதி | - | சிம்மம் யோனி |
| 1729 | பூசம் | - | சிம்மம் யோனி |
| 1737 | கேட்டை | - | சிம்மம் யோனி |
| 1755 | ரேவதி | - | கொடி யோனி |
| 1765 | உத்திரட்டாதி | - | யானை யோனி |
| 1857 | திருவாதிரை | - | சிம்மம் யோனி |
| 1859 | திருவோணம் | - | கொடி யோனி |
| 1907 | அஸ்வதி | - | கொடி யோனி |
| 1917 | ரேவதி | - | யானை யோனி |
| 2017 | அனுஷம் | - | சிம்மம் யோனி |







# கோபுர லக்ஷணம்

கோவில்களில் உள்ள பிரகாரச் சுவர்களின் மத்தியில் கோபுரம் அமைக்கவேண்டும்.

அந்தர் மண்டபம் சுவற்றின் முன்பு துவாரசோபை என்ற கோபுரத்தையும் அந்தர் ஹாரையில் துவாரசாலை என்ற கோபுரத்தையும் மத்ய ஹாரையில் துவாரப் பிராசாதம் என்ற கோபுரத்தையும் மாயாதை என்ற பிராகாரத்தில் 'த்வரா ஹர்மயம்'' என்ற கோபுரத்தையும், மஹாமர்யாதை என்ற பிரகாரத்தில் த்வார கோபுரம் என்ற கோபுரத்தையும், செய்ய வேண்டும். ஆகவே, முதலில் இருந்து ஐந்து கோபுரங்களை ஐந்து பிராகாரங்களிலும் செய்ய வேண்டும்.

1. த்வாரசோபை
2. த்வாரசாலை
3. த்வாரபிரசாதம்
4. த்வாரஹர்ம்யம்
5. த்வாரகோபுரம்

என ஐந்து கோபுரங்களாகும்.

1. த்வார சோபை - 1 தலம், 2 தலம், 3 தலங்களுடன் கூடிய தாக செய்யவேண்டும்.
2. த்வார சாலை - 2 தலம், 3 தலம், 4 தலம் வரை செய்ய லாம்.
3. த்வார பிரசாதம் - 3 தலம், 4 தலம், 5 தலம் வரை செய்ய லாம்
4. த்வார ஹர்ம்யம் - 4 தலம், 5 தலம் அல்லது தலங்களுடன் இருப்பது.
5. த்வார கோபுரம் - 5 தலம் ,6 தலம் அல்லது 7 தலங்களுடன் இருப்பதாகும். அல்லது எல்லா மதில்களிலும் 1 தலம், 2 தலம், 3 தலங்களை அமைப்பதாகும்.



அதிஷ்ட்டானமானது உபபீடத்துடனிருக்க வேண்டும். மூலப்பிரசாத விஸ்த்தாரத்தை ஏழுபாகம், எட்டு பாகம், ஒன்பது பாகம் பதினொரு பாகம் செய்து அவைகளில் ஒரு பாகத்தைக் குறைத்து கொள்ள வேணும். இவைகள் முறையே த்வார சோபை முதல் த்வார கோபுரம் வரை விஸ்த்தாரமாகும்.

இவ்விதமாக விகல்ப ஹர்மயம் ஆபாச ஹர்மயம் இவைகளின் விஸ்த்தாரம் கூறப்பட்டுள்ளது. ஆலயத்தின் மூலஸ்த்தானத்தின் விஸ்த்தாரத்தில் நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு அம்சங்களில் ஒரு அம்சத்தை குறைத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் செய்யப்பட்டது சந்தமெனும் ஆலயத்தின் சோபாதிகளின் விஸ்த்தாரமாகும்.

மூலாலய விஸ்த்தாரத்தில் 3ல் 1 பாகம், 1/2 பாகம், கூடுதல் 1 1/2 பாகம், 3ல் 2 பாகம், 4ல் 3 பாகம், 5ல் 4 பாகம் என்று முறையே பிரதமாதி ஸாலங்களில் சோபாதி கோபுரங்களில் விஸ்த்தரத்தைக் கல்பித்துக் கொள்ள வேண்டும்.

இனி மான வசத்தினால் (முழு அளவால்) சொல்லப் படுகிறது.

2 முழம் முதல் 16 முழம் வரை ஒவ்வொரு ஹஸ்தமாக கூட்டிவர சோபாதி கோபுராந்தமானது ஒவ்வொன்றும் மூன்று விதமாகும் இந்த மானமானது விகல்பமானம் ஆபாச ஹர்ம்யம் சந்தஹர்ம்யம் இவைகளில் காணப்படுவதாகும்.

மூன்று ஹஸ்த்தம் முதல் 17 ஹஸ்தம் வரையில் ஒவ்வொரு ஹஸ்த்தம் வீதம் கூட்டி வர சோபாதிகளின் மானமானது ஒவ்வொன்றும் மூன்று மூன்று விதமாகும்.

நான்கு ஹஸ்த்தம் முதல் 18 ஹஸ்தம் வரையில் ஒவ் வொரு ஹஸ்தமாகக் கூட்டி வர மானமானது ஒவ்வொன்றும் மூன்று மூன்று விதமாகும். இவைகள் முறையே, சோபாதிகள் விஸ்த்தரமாகும். இது ஜாதி ஹர்ம்யத்திற்கு விதிக்கப்பட்டுள்ளது.

விஸ்த்தாரத்தை ஹஸ்தமானத்தால் கொள்வது முறையே க்ஷுத்ர(சிறிய) ஹர்ம்யங்களுக்கு ஏற்றதாகும். அதற்கு சொல்லி இருப்பதை போல் கல்பிக்க வேண்டும். வேறு விதமாக செய்தல் நல்லது அல்ல.



மூன்று 3, நான்கு 4, ஐந்து 5, ஆறு 6, ஏழு 7, எட்டு 8, ஒன்பது 9, பத்து 10, பதினொன்று 11 ஆகிய ஹஸ்தமானத் தால் முறையே மூன்று 3, மூன்று 3 மானங்கள், அதமமானம், மத்யமம், உத்தமம் என்பவைகளாகும்.

இவை சகல விதமான ஹர்ம்யங்களிலும் மனம் போல் கல்பித்துக் கொள்வதாகும்.

இன்னொரு விதம்

5 முழம் முதல் இரண்டு இரண்டு முழம் கூட்டி 13 முழம் வரை ''த்வார சோபா'' அளவு ஐந்து விதம்.

25 முழம் முதல் இரண்டு இரண்டு முழம் கூட்டி 33 முழம் வரை ''த்வார பிராசாத'' அளவு ஐந்து விதம்.

35 முழம் முதல் இரண்டு இரண்டு முழம் கூட்டி 43 முழம் வரை ''த்வார ஹர்யம்'' அளவாகும்.

45 முழம் முதல் இரண்டு இரண்டு முழம் கூட்டி 53 முழம் வரை'' த்வார கோபுர'' அளவு ஐந்து விதமம்.

இவ்வாறு விஸ்தாரம் கூறப்பட்டுள்ளது.

விஸ்த்தாரத்திற்கு (அகலத்திற்கு) ஆயாமல் (நீளம்) கொள்ளும் விதம்.

துவார சோபாதிகளின் விஸ்த்தாரத்தைப் போல் 1 1/4 பங்கு, 1 1/2 பங்கு, 1 3/4 பங்கு, 2 பங்கு, 3ல் 1 பங்கு, 3ல் 2 பங்கு, கூட்டி சோபாதிகளின் ஆயாமம் ( நீளம்) ஆகும்.

ஹஸ்தமானத்தால் கொள்வதானால் அதை ஆயாதி களின் சுபமான பலனைக் கொடுக்கக் கூடியதாக மானத்துடன் இருக்கும்படியாக செய்துகொள்ள வேண்டும்.

இப்பொழுது கூறப்பட்ட அளவு சுவர் அளவாகும். அதில் இருந்து சாலை முதலியவைகள் நிவ்ரம் (களத்து) பத்மானத் தால் மூன்றில் 1, 4ல் 1, 5ல் 3, இது வெளிக் களத்தியாகும்.



# கோபுரத்தின் வாசல்



1 1/2 முதல் 5 முழம் வரை ஆறு (6) அங்குலம் கூட்டி வர கூத்ர ஹர்ம்யத்வார அகலாமாகும். 3 முழம் 7 முழம் வரை 6 அங்குலம் கூட்டி வர ஒவ்வொரு அளவும் கோபுரவாசல் அள வாகும்.

வாசல் விஸ்த்தாரம் 7 பாகமானால் 10 பாகம், விஸ்த் தாரத்தைப் போல், 1 1/2 பங்கு, 1 3/4 பங்கு, 2 பங்கு, 2 1/4 பங்கு என்று த்வார விஸ்தாரம் கொள்ளலாம்.

'லிங்கமானது த்வாரமத்யமாகும்''

துவாரம் உயரத்தை 4, 5, 6, 7, 8, 9, 11 பாகங்களாக செய்து 1 பாகம் உபபீடமம் உயரம் கொள்ளலாம். அதுபோக மீதம் உள்ள உயரத்தை 3 பாகங்கள் செய்து 1 பாகம் அதிஷ்ட் டானம் மீதம் 2 பாகம் ஸ்த்தம்பவர்கம் கொள்ள வேணும்.

உபரனம் முதல் உத்தரம் அடிமட்டம் வரை உள்ளதே த்வாரமாகும்.

கோபுரங்களில் பாத பெந்த அதிஷ்ட்டானத்தேயே செய்ய வேணும். பிரதிபெந்தம் செய்யக் கூடாது.







# கோபுர கண்யம் உயரம்

## 1 நிலம் உத்தரம் முதல் ஸ்தூபி வரை 6 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பிரஸ்த்தரம் | - | 11/4 |
| கண்டம் | - | 1 |
| சாலை | - | 23/4 |
| ஸ்துபி | - | 1 |
| ஆக | - | 6 |

## இரண்டு நில உயரத்தை 9 செய்து

| | | |
|---|---|---|
| பிரஸ்த்தரம் | - | 11/4 |
| கர்ணகூடம் | - | 2 |
| மஞ்சம் | - | 1 |
| கழுத்து(கண்டம்) | - | 1 |
| சிகரம் | - | 21/2 |
| ஸ்துபி | - | 11/4 |
| ஆக | - | 9 |

## மூன்று நிலம் உயரம் 12 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பிரஸ்த்தரம் | - | 11/2 |
| கர்ணகூடம் | - | 21/2 |
| பிரஸ்த்தரம் | - | 1 |
| கால் | - | 2 |
| மஞ்சம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| சிகரம் | - | 2 |
| ஸ்துபி | - | 1 |
| ஆக | - | 12 |





## நான்கு நில கோபுரம் 18 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| மஞ்சம் | - | 13/4 |
| பாதம் | - | 3 |
| பிரஸ்த்தரம் | - | 11/2 |
| பாதம் | - | 21/2 |
| பிரஸ்த்தரம் | - | 11/4 |
| பாதம் | - | 2 |
| பிரஸ்த்தரம் | - | 1 |
| கண்டம் | - | 11/2 |
| சிகரம் | - | 21/2 |
| ஸ்துபி | - | 1 |
| ஆக | - | 18 |

## ஐந்து நில கோபுரமம் 23 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| பிரஸ்த்தரம் | - | 2 |
| கடல் (கர்ணகூடம்) | - | 31/2 |
| மஞ்சம் | - | 13/4 |
| பாதம் | - | 3 |
| பிரஸ்த்தரம் | - | 11/2 |
| கர்ணகூடம் | - | 21/2 |
| மஞ்சம் | - | 11/4 |
| கால் | - | 2 |
| பிரஸ்த்தரம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| சிரசு | - | 21/2 |
| ஸ்துபி | - | 1 |
| ஆக | - | 23 |

## ஆறு நில கோபுரம்

உத்தரம் முதல் சிகை வரை உள்ள மானத்தை 29 பாகங் களாக செய்து கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| பிரஸ்த்தரம் | - | 2 |
| பாதம் | - | 1 -3/4 |




ஐந்து தள கோபுரம் முன் தோற்றம்




ஐந்து தள கோபுரம் பக்கத் தோற்றம்

| | |
|---|---|
| ஸ்தூபி | 1 |
| சிகரம் | 2½ |
| கண்டம் | 1 |
| பிரஸ்த்தரம் | 1 |
| கர்ணகூடம் | 2 |
| பிரஸ்த்தரம் | 1¼ |
| கர்ணகூடம் | 2½ |
| பிரஸ்த்தரம் | 1½ |
| கர்ணகூடம் | 3 |
| பிரஸ்த்தரம் | 1-3/4 |
| கர்ணகூடம் | 3½ |
| பிரஸ்த்தரம் | 2 |
| மொத்தம் | 23 |

கல்காரம் மொத்த உயரம் கால்புறவாய் அகலத்தில் 1 பங்கு

| | |
|---|---|
| ஸ்தம்பம் | 2 |
| அதிஷ்டானம் | 1 |
| உபபீடம் | 2 |



ஐந்து தள கோபுரம் முன் தோற்றம்

| | |
|---|---|
| ஸ்தூபி | 1 |
| சிகரம் | 2½ |
| கண்டம் | 1 |
| பிரஸ்த்தரம் | 1 |
| கர்ணகூடம் | 2 |
| பிரஸ்த்தரம் | 1¼ |
| கர்ணகூடம் | 2½ |
| பிரஸ்த்தரம் | 1½ |
| கர்ணகூடம் | 3 |
| பிரஸ்த்தரம் | 1-3/4 |
| கர்ணகூடம் | 3½ |
| பிரஸ்த்தரம் | 2 |
| மொத்தம் | 23 |

| | |
|---|---|
| ஸ்தம்பம் | 2 |
| அதிஷ்டானம் | 1 |
| உபபீடம் | 2 |

கல்காரம்
மொத்த உயரம்
கால்புறவாய்
அகலத்தில்
1 பங்கு



ஐந்து தள கோபுரம் பக்கத் தோற்றம்




முன் தோற்றம்
ஐந்து நில கோபுரம்
(மற்றொரு விதம்)



ஐந்து நிலை கோபுரம்
முன் தோற்றம்



| | | |
|---|---|---|
| பாதம் | - | 31/2 |
| பிரஸ்த்தரம் | - | 1 -3/4 |
| பாதம் | - | 3 -1/2 |
| பிரஸ்த்தரம் | - | 1 -3/4 |
| பாதம் | - | 3 |
| பிரஸ்த்தரம் | - | 1 -1/2 |
| பாதம் | - | 2 -1/2 |
| பிரஸ்த்தரம் | - | 1 -1/4 |
| சரணம் | - | 2 |
| மஞ்சம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| சிகரம் | - | 2 -1/2 |
| ஸ்தூபி | - | 11-/4 |
| ஆக | - | 29 |



## ஏழு நில கோபுரம்

உத்தரம் முதல் சிகை வரை உள்ள மானத்தை 36 பாகங்களாக செய்து கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| மஞ்சமம் | - | 2 -1/4 |
| பாதம் - 4 | - | 1/2 |
| பிரஸ்த்தரம் | - | 2 -1/4 |
| பாதம் | - | 4 |
| பிரஸ்த்த்தரம் | - | 2 |
| பாதம் | - | 3 -1/2 |
| மஞ்சம் | - | 1 -3/4 |
| பாதம் | - | 3 |
| பிரஸ்த்தரம் | - | 1 -1/2 |
| கால்வரி | - | 2 -1/2 |
| பிரஸ்த்தரம் | - | 1 -1/4 |
| சரணம் | - | 2 |
| பிரஸ்த்தரம் | - | 1 |
| கண்டம் | - | 1 |
| சிகரம் | - | 2 -3/4 |
| ஸ்தூபி | - | 3/4 |
| ஆக | - | 36 |



**FRONT ELEVATION**

ஏழுநிலை கோபுரம் முன் தோற்றம்




ஏழுநிலைக் கோபுரம் பக்கத் தோற்றம்





# உத்தம தசதாலம் முதல் ஒரு தாலம் வரை பிம்பங்களின் அளவுகள்

இது மிக முக்கியம். நாம் செய்யும் மூர்த்திகள பாதம் முதல் கேசம் வரை உள்ள உயரத்தை பாகங்களாகப் பிரித்து அதில் வரும் 1 பாகத்திற்கு தேகலாப்தாங்குலம் எனப்படும். இவ்விதமாக எந்த மூர்த்திக்கு எத்தனை பாகம் செய்ய வேண்டும் என்று நிர்ணயம் செய்யவேண்டும் என்று விவர மாகக் கூறப்படுகிறது. அதை ஞாபகம் வைத்து எந்த மூர்த்தி செய்ய வேண்டுமோ அதற்கான பாகக் கணக்கை தெரிந்து கொள்ளவேண்டும்.

அதாவது

தாலம் என்பது 12 என்றும்

தசதாலம் என்பது 10' X 12 = 120 ஆகும். இதில் 4 பாகம் கூட்டினால் 120 + 4 = 124 124 பாகம் செய்து கணக்கிட்டு = பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூர்த்திகளை செய்ய வேண்டும்.

116 பாகம் செய்து பாதாதிகேசந்தத்தை அளவிட்டு அமைப்பது சந்திரன், சூரியன், அஸ்வினி, தேவர்கள், சாஸ்தா (ஐயனார்) இந்திரன், சண்டிகேஸ்வரர், பைரவர், மஹரிசிகள், தேவர்கள் அவர்கள் தேவிமார்கள் இவர்களை கணக்கிட்டு செய்யவேணும்.

உத்தம நவதாலம் என்பது 12 x 9 = 108 + 4 = 112 பாக மாகும். இந்த பாகம் செய்து வித்யாதரர்கள், பிருஹஸ்பதி, சுக்கிரர், லோக பாலகர்கள், அஷ்ட வசுக்கள், அஷ்டதிக் பாலகர் கள், அஸ்திரங்களின் மூர்த்திகள், சிவ அஸ்திர தேவர் சுதர்சனம்



மற்றும் உள்ள தேவர்கள், அவர்கள் மனைவிமார்கள் இவர் களைச் செய்ய வேணும்.

மத்யம நவதாலம் அதாவது 12 X 9 = 108

108 பாகம் செய்வது இதில் அஷ்ட மூர்த்திகள், மருத் கணங்கள், யக்ஷர்கள், அசுரகணங்கள் இவர்களைச் செய்ய வேணும். அத்ம நவதாலம் என்பது 12 X 9 = 108 - 4 = 104 ஆக 104 செய்து கந்தவர்கள், பித்ருக்கள் இவர்களை செய்ய வேணும்.

அஷ்டத்தாலம் 12 X 8 = 96 பாகங்களாக மானிடரைச் செய்ய வேணும்.

ஏழுதாலம் (சப்ததாலம்) 12 X 7 = 84 இதில் பைசாசங் களை செய்ய வேணும்.

கோணாலான வடிவம் உள்ளவர்களை ஆறுதாலம் எனப்படும். 12 X 6 = 72 பாகம் செய்து செய்ய வேணும்.

உத்தம பஞ்சதாலம் அதாவது 12 X 5 = 60 + 4 = 64

64 பாகம் செய்து - கணபதி, கந்தன், வாமனர் இவர் களைச் செய்ய வேணும்.

பூதங்களை, மத்யம பஞ்சதாலம் 60 பாகம் செய்வது, அதம பஞ்சதாலம் 56 இவற்றால் பூதகணங்களையும் அமைக் கலாம்.

சதுஸ்தாலம் எனப்படும் 4 தாளத்தில் 4 X 12 = 48 சிறுவர்கள், பூதகணங்களை அமைக்கலாம்.

மூன்று தாலம் 12 X 3 = 36 இதில் யக்ஷர்கள் கின்னர்களை செய்யவேணும்.

கணங்கள், இரண்டு தாளத்தாலே, ஒரு தாளத்தாலே கூர்மத்தை அமைக்க வேணும். கூர்மமம் என்றால் ஆமை வடிவம்.







இவ்வாறு பல்வேறு மூர்த்திகளுக்கான, அங்க அளவுகளை செய்ய சில்ப நூலில் மிகச் சிறப்பாக சொல்லப்பட்டுள்ளது. அவ்விதம் செய்வதுதான் சிறந்தது. சிறுமூர்த்திகளை கண் அளவு கொண்டு செய்யக்கூடும். பெரிய மூர்த்திகள் கண் அளவுக்கு அடங்காது. அவைகளையெல்லாம் இந்த தள மானத்தால் செய்தால் முறையாகவும் அளவு குறையாமலும் அழகுடனும் அமையுமாம் என்பது என் கருத்து.

உத்தம தசதாலம் எனப்படும் 124 பாகத்தில் சிவன் விக்கரஹமோ, விஷ்ணு விக்ரஹமோ, பிரம்ம விக்ரஹமோ செய்வதாயின் பாதம் முதல் உஷ்ணீசம் வரை 124 பாகம் செய்யவேணும்.

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 1.3 |
| கேசாந்தம் | - | 3.0 |
| அக்ஷிசூத்ரம் | - | 4.3 |
| மூக்கு நுனிவரை | - | 4.3 |
| முட்டுவாய் வரை | - | 4.3 |
| முகம் கீழ் தசை | - | 0.4 |
| கழுத்து | - | 4.0 |
| மார்பு | - | 13.4 |
| தொப்புள் | - | 13.4 |
| மேட்ரம் | - | 13.0 அர்த்த சூத்ரம் என்று பெயர் |
| துடை | - | 27.0 |
| முட்டி | - | 4.0 |
| முழங்கால் | - | 27.0 |
| பாதம் | - | 4.0 |
| **மொத்தம்** | - | **124** |

ஆக, உத்தம தசதாலத்தில் செய்ய வேண்டிய விக்ரகங்களை இதன்படி பாகம் செய்து செய்ய வேணும். இனி உருவங்களின் அங்க அவயங்கள் அகலம் சொல்லப்படுகிறது.

| | | |
|---|---|---|
| முக அகலம் | - | 13.4 அங்குலம் |
| கழுத்து அகலம் | - | 9.00 |

பரஹஸ்தம் 67-4

தோள் 40-4

முகம் 13.4



| | |
|---|---|
| லலாடம் | 4-3 |
| முகம் | 13-1 |
| முகம் கீழ்தசை | 0-4 |
| கழுத்து | 4-0 |
| மார்பு | 13-4 |
| நாபி | 13-4 |
| மேட்ரம் | 13-0 |
| துடை | 27-0 |
| முட்டி | 4-0 |
| முழங்கால் | 27-0 |
| பாதம் | 4-0 |
| மொத்தம் | 124-0 |




ஸ்ரீகிருஷ்ணன்

60 அடி உயரத்தில் கல்லினால் செய்யப்பட்ட விக்ரகம் கல்கத்தாவில் உள்ளது.



| | | |
|---|---|---|
| அடிக்கழுத்து | - | *10.0* |
| தோள் அகலம் | - | *41.4* |
| கக்ஷம் | - | *22.4* |
| புஜம் அகலம் அடியில் | - | *9.4* |
| ஸ்தனப் பிரதேசத்தின் அகலம் | - | *21.0* |
| விலா பக்கம் | - | *19.0* |
| அதற்கு கீழ் இடுப்பு வயிறு இடை | - | *16.4* |
| அடிவயிறு | - | *19.0* |
| இடுப்பின் அகலம் | - | *18.00* |
| கீழ் இடுப்பு அகலம் | - | *20.4* |
| துடை | - | *13.6* |
| நடுத்துடையின் அகலம் | - | *12.2* |
| முழங்கால் | - | *9.6* |
| முழங்கால் அடிப்பாகம் | - | *8.6* |
| நளகை | - | *4.6* |

ஆக இவ்விதமாக சொல்லப்பட்டுள்ளது.

மத்யம தசதாலம் எனப்படும். ஸ்ரீமானம் = 120 பாகங்கள் செய்து

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | *1.0* |
| கேசாந்தம் | - | *3.0* |
| அக்ஷ சூத்ரம் | - | *4.6* |
| புடாந்தம் | - | *4.4* |
| முட்டுவாய் வரை | - | *3.6* |
| கழுத்து உயரம் | - | *4.0* |
| ஹிருதய் வரை | - | *13.0* |
| நாபி (தொப்புள் வரை) | - | *13.0* |
| நாபியில் இருந்து மேட்ர மூலம் | - | *13.0* |
| துடை | - | *26.0* |
| முட்டி | - | *4.0* |
| முழங்கால் | - | *26.0* |
| பாத உயரம் | - | *4.0* |
| ஆக | - | *120* |







குதிகால் முதல் பாதம் நுனி வரை 16.0 அங்குலம்

| | | |
|---|---|---|
| பாதம் முன் அகலம் | - | 6.0 அங்குலம் |
| பாதம் நடுப் பாகம் | - | 5.0 |
| குதிகால் அகலம் | - | 4.0 |
| கண்டைக்கால் அகலம் | - | 6.0 |
| முழங்கால் அகலம் | - | 7.0 |
| அடித்துடை அகலம் | - | 12.0 |
| கடி பொந்தம் (இடுப்பு) | - | 24.0 |
| அடிவயிறு | - | 20.1 |
| இடுப்பு அகலம் | - | 11.0 |
| ஸ்தானத்திற்கு கீழ் அகலம் | - | 13.4 |
| ஸ்தானத்தின் உயரம் | - | 4.4 |
| இரு ஸ்தானத்திற்கும் இடைவெளி | - | 1.0 |
| இரு ஸ்தானங்களின் மத்ய இடைவெளி | - | 17.0 |
| தோள் அகலம் | - | 31.0 |
| மேல் கை - அடிக்கை நீளம் | - | 26.0 |
| முழங்கை | - | 2.0 |
| முன் கை நீளம் | - | 18.0 |
| மணிக்கட்டில் இருந்து உள்ளங்கை நீளம் | - | 7.0 |
| அங்கிருந்து நடுவிரல் வரை | - | 6.0 |
| மணிக்கட்டு அகலம் | - | 3.0 |
| முழங்கை அகலம் | - | 5.0 |
| முன் கை அகலம் | - | 6.0 |
| அடிக்கை அகலம் | - | 7.0 |

அடிக்கையிலிருந்து மணிக்கட்டு வரை மூங்கில் போன்ற வடிவத்துடன் அமைய வேண்டும்.

| | | |
|---|---|---|
| கழுத்து நுனி | - | 7.0 |
| அடிக்கழுத்து அகலம் | - | 8.0 |
| முகம் அகலம் | - | 11.0 |

கோழிமுட்டை போன்ற வடிவத்துடன் முகத்தை அமைக்க வேணும்.

# தேவி மத்யமதசதாலம்



120 பாகங்கள் செய்து

| | |
|---|---|
| லலாடம் | 4 |
| முகம் | 13 |
| கழுத்து | 4 |
| மார்பு | 13 |
| நாபி | 13 |
| மேட்ரம் | 13 |
| துடை | 26 |
| முட்டி | 4 |
| முழங்கால் | 26 |
| பாதம் | 4 |
| மொத்தம் | 120 |



மத்யம தசதாளத்தினால் அதாவது 120 பாகம் செய்து செய்யக்கூடிய விபரம் கூறப்பட்டது. இப்பொழுது அதன்படி தேகலக்ஷணம் சொல்லப்படுகிறது.

கௌரியானவள் இரண்டு கைகளும் சாந்தமான ஆகிருதியும் கரண்ட மகுடமாவது கிரீடமகுமாவது கேசபந்த மகுடத்துடனும்.

அதன் உயரம் முறையே 18 அங்குலம், 21 அங்குலம், 24 அங்குலம் உயரம் இருக்க வேணும். மகுடத்தின் அகலத்தை 7, 8 பாகம் செய்து 1 பாகம் மேலே குறைத்தும் மகுடம் அமைய வேணும். கரண்ட மகுடம் 3,5,7, 9 என்று அடுக்குகளில் அமை வேணும். நான்கு பக்கத்திலும் பூரிமங்களுடனும் பார்வதி யானவள் - ஹாரம், உபக்ரீவம், முத்துமாதல இவை களால் அலங்கரிக்க வேணும். காதுகள் குண்டலங்களுடனும் குண்டல மானது வட்ட வடிவமாக அமையவேணும். கடகம், கடி சூத்ரம், ஹாரம், உபக்ரீவம், பாஹீபூரிமம் சன்னவீரம் இவை களுடன் பூணூலுடனும் கேயூரம் சன்னவீரம் முதலியவை அணிந்து பச்சை நிறமாக உள்ளவள்.



வலது கையில் நீலோத்பலம் இருக்க வேணும். இடது கை தொங்க விட்டிருக்க வேணும். அம்பாளை ஆபங்கம் அல்லது சமபங்கத்துடன் அமைக்கவேணும். தேவியின் வலது கால் ஸுஸ்திதமாகவும், இடதுகால் குஞ்சிதமாகவும், அதாவது கொஞ்சம் வளைந்து உள்ளதாகும்.

பங்கம் என்றால் வளைவு என்று பொருள். அம்பாள் வளைந்து பங்கமாக இருக்கிறபடியால் நதமானம் வளைந்த நிற்பதால் உண்டாகும் உயரக் குறைவாகும்.

அதாவது நாம் அம்பாள் உயரத்தை 120 பாகம் செய்து அங்கங்களை அளவிடுவோம் அல்லவா. அந்த 120 உயரத்தில் ஏற்பட்ட தேகலப்தாங்குலத்தால் ஆபங்கத்துக்கு 3 அங்குலம் குறைத்தும் சமபங்கத்திற்கு 4 அங்குலம் குறைத்தும் அமைய வேண்டும். (அதிபங்கம் = வேறு மூர்த்திகளுக்கு உடையதாகும் அதிகமாக வளைந்தது)





இப்பொழுது அம்பாள் நின்றதாக உள்ளதற்கு நின்ற விக்கரகத்தில் சூத்திரம் நூல்விட்டு எந்த இடங்கள் வளைந்தும் உள்ளன என்பது பற்றி சூத்திரம் நடு நெற்றியில் இருந்து இடது நேத்ராந்தம் இடது நாசா புடாந்தகம் இடது தாடை ஸ்தனங் களின் மத்யம் நாபியில் (தொப்புள்) வலது பக்கம் இடது துடை யின் வலது பக்கம் வலது குதிகாலின் இடதுபக்கம் இவைகளில் மத்ய சூத்திரம் தொங்கவிடப்பட வேணும். பாதாங்குஷ்டம் மத்ய ஒதுக்கம் 16 அங்குலமாகும். அதில் 4ல் 1 பாகம் குதிகால் மத்ய ஒதுக்கம். இது ஆபங்கம் எனப்படும்.

## சமபங்க லக்ஷணம்

நடு நெற்றி, நுனிமூக்கு, புறங்கால்களின் மத்ய பாகம் இவைகளில் மத்ய சூத்ரத்தை தொங்கவிட வேணும். பிரம்ம சூத்திரத்தில் இருந்து வலது பக்கத்தில் ஸ்தனங்களின் மத்ய பாகம் 3 அங்குலமாகும். சூத்திரமத்தியில் இருந்து இடது பக்கத் தில் நாபி வரையில் ஒதுக்கம் 4 அங்குலமாகும். சூத்திரத்தில் இருந்து வலது பக்கம் நாபி வரை ஒதுக்கம் 2 அங்குலமாகும். சூத்திரத்தில் இருந்து இடது பக்கத்தில் யோனி மூலம் மத்யம் வரையில் ஒதுக்கம் 4 அங்குலமாகும். சூத்திரத்தில் இருந்து வலது பக்கத்தில் முழங்கால் ஒதுக்கம் 3 அங்குலமாகும். இவ்விதம் சமபங்க அமையவேணும்.

அதமதசதாலம் அல்லது (கன்யசு தசதாலம் என்று கூறலாம்) உயரத்தை 116 பாகங்கள் செய்து சந்திரன், சூரியன், அஸ்வினி, தேவர்கள், இரிஷிகள், குகன், ஐயனார், இந்திரன், சண்டிகேஸ்வரர், க்ஷேத்திர பாலகர் இவர்களை 116 பாகம் செய்து செய்யவேணும்.

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 1.0 |
| கேசாந்தம் | - | 3.0 |
| முகம் | - | 12.4 |
| கழுத்து | - | 4.0 |
| மார்பு | - | 12.4 |
| நாபி வரை | - | 12.4 |
| மேட்ரமூலம் | - | 12.4 |



| | | |
|---|---|---|
| துடை | - | 25.0 |
| முட்டி | - | 4.0 |
| முழங்கால் | - | 25.0 |
| பாதம் | - | 4.0 |
| ஆக | - | 116 |

## அங்க அளவுகள்

அடிக்கழுத்து 8 அங்குலம் நுனிக்கழுத்து 7 1/2 அகல மாகும். தோள் அகலம் 37.0 மார்பு புறம் 25'.0'' அகலமாகும். அடிக்கை நீளம் - 25'.0'' முன் கை நீளம் 19'.0'' அகலமாகும். அங்கிருந்து விரல் வரை 12'.4''. அந்த நீளத்தில் சரிபாதி உள்ளங்கை நீளமாகும்.

| | | |
|---|---|---|
| கக்ஷங்கள் அகலம் | - | 22.0 |
| ஹிருதய இடத்தின் அகலம் | - | 18.0 |
| வயிற்றின் விஸ்தாரம் | - | 17.0 |

உத்தம நவதாலம் 12 X 9 = 108 + 4 = 112

வசுக்கள், அஷ்ட்ட மூர்த்திகள், வித்யேசரர்கள், லோக பாலகர்கள் மற்ற தேவதைகள் இவர்களை உத்தம நவதாலத் தால் செய்ய வேண்டும்.

பேரத்தின் உயரத்தை 112 பாகங்களாகப் பிரித்து

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 1.0 |
| கேசாந்தம் | - | 3.0 |
| அக்ஷிசூத்திரம் | - | 4.0 |
| புடாந்தம் | - | 4.0 |
| ஹன்வந்தம் முட்டுவாய் வரை | - | 4.0 |
| கழுத்து | - | 4.0 |
| ஹிருதயம் வரை | - | 12.0 |
| நாபி வரை | - | 12.0 |
| மேட்ரம் | - | 12.0 |
| துடை | - | 24.0 |



| | | |
|---|---|---|
| முட்டி | - | 4.0 |
| முழங்கால் | - | 24.0 |
| பாதம் | - | 4.0 |
| ஆக | - | 112 |

## மத்யம நவதாலம்

இனி மத்யம நவதாலம் யக்ஷர்கள், அப்சரஸ்கள், அஸ்தர மூர்த்திகள், மருந்துக்கள், பிரதிமையி உயரத்தில் 108 பாகங்கள் செய்து

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 1.0 |
| கேசாந்தம் | - | 2.6 |
| நேத்ர சூத்திரம் | - | 3.7 |
| புடாந்தம் | - | 3.7 |
| ஹன்வந்தம் | - | 3.7 |
| கழுத்து உயரம் | - | 3.6 |
| ஹிருதயம் வரை | - | 11.5 |
| நாபி வரை | - | 11.5 |
| மேட்ரம் | - | 11.5 |
| துடையின் உயரம் | - | 23.2 |
| முட்டி | - | 3.6 |
| முழங்கால் | - | 23.2 |
| பாதம் | - | 3.6 |
| ஆக | - | 108 |

## அதமநவதாலம்

வித்யாதரகணங்கள், அசுரர்கள், பித்ருகள், சித்தர்கள், கந்தர்வர்கள் இவர்களை அதம நவதாலத்தில் செய்ய வேண்டும். அதம நவதாலத்தில் உயரத்தை 104 பாகங்களாக கொள்ள வேண்டும். அந்த பாகங்களின்

| | | |
|---|---|---|
| உஷ்ணீச உயரம் | - | 0.4 |
| கேசாந்தம் | - | 3.0 |
| நேத்ர சூத்திரம் | - | 3.6 |



| | | |
|---|---|---|
| புடாந்தம் | - | 3.6 |
| ஹஸ்வந்தம் | - | 3.6 |
| கழுத்து | - | 3.4 |
| ஹிருதயம் | - | 11.2 |
| நாபி | - | 11.2 |
| மேட்ரம் | - | 11.2 |
| துடை | - | 22.4 |
| முட்டி | - | 3.4 |
| முழங்கால் | - | 22.4 |
| பாதம் | - | 3.4 |
| ஆக | - | 104 |



அஷ்ட தால லக்ஷ்ணம் அஷ்ட தாலத்தின் உயரத்தை 100 செய்து

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 1.0 |
| கேசாந்தம் | - | 2.4 |
| முகம் | - | 10.6 |
| கழுத்து | - | 3.4 |
| ஹிருதயம் | - | 10.6 |
| நாபி | - | 10.6 |
| மேட்ரம் | - | 10.6 |
| துடை | - | 21.4 |
| முட்டி | - | 3.4 |
| முழங்கால் | - | 21.4 |
| பாதம் | - | 3.4 |
| ஆக | - | 100 |





# ஸப்ததால லக்ஷணம்

பைசாச பிம்பங்களின் உயரம் 88 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 0.4 |
| கேசாந்தம் | - | 1.0 |
| நேத்ராந்தம் | - | 2.4 |
| புடாந்தம் | - | 3.4 |
| ஹந்வந்தம் | - | 3.4 |
| கழுத்து | - | 4.0 |
| ஸ்தநாந்தம் | - | 7.0 |
| நாபி | - | 11.0 |
| மேட்ரம் | - | 11.0 |
| துடை | - | 20.0 |
| முட்டி | - | 2.0 |
| முழங்கால் | - | 20.0 |
| பாதம் | - | 2.0 |
| ஆக | - | 88.0 |

ஷட்தாளம் எனப்படும் ஆறுதாலம் பாதாதி கேசம் 76 பாகம் செய்து

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | - | 0.4 |
| கேசாந்தம் | - | 1.0 |
| ஹன்வந்தம் | - | 8.4 |
| கழுத்து | - | 3.4 |
| ஹிருதயம் வரை | - | 8.4 |
| நாபி | - | 8.4 |
| மேட்ரம் | - | 8.4 |
| துடை | - | 17.0 |
| முழங்கால் முட்டி | - | 1.4 |
| முழங்கால் | - | 17.0 |
| பாதம் | - | 1.4 |
| ஆக | - | 76 |



## உத்தம பஞ்சதாலம்

அதாவது 5 x 12 = 60 + 4 = 64

அதாவது 64 பாகம் பாதாதி கேசாந்தம் செய்ய வேண்டும். பஞ்சதாலம் என்பது பொதுவாக கணபதி செய்வதற்கான அளவு களை சிறப்பாக சிற்ப சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மஸ்தகம் | - | 2.0 | மஸ்தகம் | - | 3.0 |
| நேத்ராந்தம் | - | 4.0 | | | |
| முகம் | - | 8.0 | முகம் | - | 12.0 |
| கழுத்து | - | 4.0 | கழுத்து | - | 2.0 |
| ஹிருதயம் | - | 10.0 | ஹிருதயம் | - | 11.0 |
| நாபி | - | 9.0 | நாபி | - | 12.0 |
| மேட்ரம் | - | 9.0 | மேட்ரம் | - | 6.0 |
| துடைகள் | - | 6.0 | துடைகள் | - | 6.0 |
| முட்டி | - | 3.0 | முட்டி | - | 3.0 |
| முழங்கால் | - | 6.0 | முழங்கால் | - | 6.0 |
| பாதம் | - | 3.0 | பாதம் | - | 3.0 |
| | | 64.0 | | | 64.0 |

இதன் அளவுகள் மிக விபரமாக கூறப்பட்டுள்ளது. முகம், மார்பு, தோள், துடை முதலிய அளவுகள் எல்லாம் மிக விரிவாக கூறப்பட்டுள்ளது. முக்கியமாக கணபதி எல்லோரும் அடிக்கடி செய்வதாலும் அதை மட்டும் கொஞ்சம் விரிவாக சொல்லுகிறேன். தேக லப்தாங்குலத்தில் மேல் கை (அடிக்கை) நீளம் 13 அங்குலம் முன் கை நீளம் 9 அங்குலம் உள்ளங்கை நீளம் 4 அங்குலம் நடுவிரல் 3 அங்குலம் ஆக ஹஸ்தம் 7 அங் குலம் பாதம் நீளம் 7 அங்குலமாகும்.

பாஹுமூலத்தின் அகலம் 8 அங்குலம்

மணிக்கட்டின் அகலம் 2 1/2 அங்குலம்

முன் கையில் அகலமும் அடுத்த பகுதி கை அங்குலம் 61/2 நடுமுகம் 10 அங்குலமம் துதிக்கையின் அகலம் 6 அங்குல



# கணபதி நின்றரூபம்



| | |
|---|---|
| லலாடம் | 3 |
| முகம் | 12 |
| கண்டம் | 2 |
| மார்பு | 12 |
| நாபி | 11 |
| மேட்ரம் | 6 |
| துடை | 6 |
| முட்டி | 3 |
| முழங்கால் | 6 |
| பாதம் | 3 |
| மொத்தம் | 64 |



மாகும். நீளம் 22 அங்குலமாகும். இடது தந்தத்தின் நீளம் 4 அங்குலமாகும். வலதுபக்கம் தந்தம் ஒடிந்த மாதிரி இருக்க வேண்டும். தோள் அங்குலம் 32 அங்குலம் கக்ஷங்களின் அகலம் 19 அங்குலமம், ஸ்தன சூசுகங்களின் இரண்டுக்கும் இடைவெளி 10 அங்குலம் ஸ்தனத்தின் கீழ் இடைவெளி 15 அங்குலம் ஆகும். நடுவயிறு 22 அங்குலமாகும். நடுக்கை 3 1/2 அங்குலம் ஆகும். பாத அகலம் 6 1/2 அங்குல மாகும். இவ்விதமாக சுருக்க மாக சொல்லப்பட்டுள்ளது.



பொதுவாக கணபதி வலது கையில் ஒடிந்த தந்தமும் மேல் கையில் அங்குசமும் இடது மேல் கை பாசமும் இடது கீழ் கை மோதகமும் யானை முகத்துடன் நின்றதாகவோ அல்லது ஆபங்கம் சமமபங்கம் ஏதாவது ஒன்றாகியும் உட்கார்ந்த நிலை யிலும் இடதுகால் படுக்கையாகவும், வலது கால் குந்த வைத்த நிலையிலுமம் கரண்ட மகுடத்துடனும் சகல ஆபரணங்களு டனும் இருக்க வேண்டும்.

இனி

நான்கு தாலத்தைக் கூறுகிறேன். உத்தமம் சதஸ் தாலம் என்பது 12 x 4 = 48 + 4 = 52

| | |
|---|---|
| சிரோமானம் | 1-0 |
| கேசாந்தம் | 1-0 |
| நேத்ராந்தமம் | 2-0 |
| நாசாந்தமம் | 2-0 |
| ஹனுவந்தம் | 3-0 |
| கழுத்து | 3-0 |
| மார்பு | 9-0 |
| மேட்ரம் | 5-0 |
| துடை | 11-0 |
| ஜானு | 2-0 |
| முழங்கால் | 11-0 |
| பாதம் | 2-0 |
| மொத்தம் | 52-0 |





மூன்று தாலம், இரண்டு தாலம், 1 தாலம் அவ்வளவு முக்யம் அல்ல யுக்தியால் செய்யலாம்.



## இனி மூர்த்தி லக்ஷணத்தில்

கணபதியில் பொதுவாக 16 கணபதி உள்ளது.

1. பால கணபதி
2. தருண கணபதி
3. பக்தி கணபதி
4. வீர கணபதி
5. சக்தி கணபதி
6. த்வஜ கணபதி
7. பிங்கள கணபதி
8. உச்சிஷ்ட கணபதி
9. விக்ன கணபதி
10. க்ஷிப்ர கணபதி
11. ஹேரம்ப கணபதி
12. லக்ஷ்மி கணபதி
13. மஹா கணபதி
14. விஜய கணபதி
15. நிருத்த கணபதி
16. ஊர்த்வ கணபதி

## சுப்ரமண்யர் 16 விதம்

1. சக்திதர ஸ்வாமி
2. ஸ்கந்தர் ஸ்வாமி (பழனி) தண்டாயுதபாணி
3. தேவ சேனாபதி
4. சுப்ரமண்யர்
5. கெஜனாஹன ஸ்வாமி
6. சரணவபவர்
7. கார்த்திகேய ஸ்வாமி
8. குமார ஸ்வாமி
9. ஷண்முக ஸ்வாமி
10. தாரகாந்த ஸ்வாமி
11. தேனானி ஸ்வாமி



12. ப்ரும்ம சாஸ்த்ரு ஸ்வாமி
13. வள்ளி கல்யாண சுந்தர ஸ்வாமி
14. பால ஸ்வாமி
15. க்ரௌஞ்சபேதன ஸ்வாமி
16. சிகிவாஹந ஸ்வாமி

## சிவன் 18 விதம்

1. சுகாசன மூர்த்தி
2. சோமாஸ்கந்த மூர்த்தி
3. சந்திரசேகர மூர்த்தி
4. விருஷப வாஹன மூர்த்தி
5. நடராஜ மூர்த்தி
6. கங்காதர மூர்த்தி
7. திரிபுராந்தக மூர்த்தி
8. கல்யாணசுந்தர மூர்த்தி
9. அர்த்தநாரீஸ்வர மூர்த்தி
10. கெஜசூரசம்ஹார மூர்த்தி
11. பாசுபத மூர்த்தி
12. கங்காள மூர்த்தி
13. ஹரிஹர மூர்த்தி
14. பிக்ஷாடன மூர்த்தி
15. சம்டேச அனுக்ரஹ மூர்த்தி
16. தக்ஷிணா மூர்த்தி
17. காலசம்ஹார மூர்த்தி
18. லிங்கோத்பவ மூர்த்தி

### மற்றும் சிவமூர்த்தங்கள்

| | |
|---|---|
| சதாசிவம் | மஹாசதாசிவம் |
| ஈசானமூர்த்தி | தத்புருஷமூர்த்த |
| அகோரமூர்த்தி | வாமதேவ மூர்த்தி |
| சத்யோஜாதமூர்த்தி | மஹேசர் |
| ருத்ரமூர்த்தி | 4 கை ருத்ரமூர்த்தி |
| 16 கை ருத்ரமூர்த்தி | ஏகபாத மூர்த்தி |
| ஆஹிர்புக்னமூர்த்தி | விருபாக்ஷ மூர்த்தி |



# கல்யாண சுந்தரமூர்த்தி





## ஸப்ததால லக்ஷணம்



ரேவதா மூர்த்தி
பகுருநஜ் மூர்த்தி
சுரேஸ்வரர் மூர்த்தி
அபராஜித மூர்த்தி
கிரனாக்ஷன் மூர்த்தி
வித்யேஸ்வரன் மூர்த்தி
த்ரிமூர்த்தி
ஸ்ரீகரன் மூர்த்தி
ஸ்ரீகரன் மூர்த்தி
சிகண்டி மூர்த்தி
சர்வஹ மூர்த்தி

ஹரன் மூர்த்தி
தசரயம்பகர் மூர்த்தி
ஜபந்த மூர்த்தி
ம்ருதயுஞ்சயன் மூர்த்தி
ஸ்ரீகண்டன் மூர்த்தி
அனந்த மூர்த்தி
ஹ ‾க்ஷ்மன் மூர்த்தி
சிவோத்தமன் மூர்த்தி
சிவோத்தமன் மூர்த்தி
பீமஹ மூர்த்தி
பவன் மூர்த்தி

நந்தி
சண்டேசன்
பிரம்மா
இந்திரன்
அக்னி
யமன்
நைருதி
வருணன்
வாயு
குபேரன்
ஈசானன்

நடராஜரில் 9 தாண்டவங்கள்





# ஸுகாஸந மூர்த்தி லக்ஷணம்

இனி ஸுகாஸநமூர்த்தியின் லக்ஷணத்தை விசே ஷித்துக் கூறுகிறேன். இந்த மூர்த்தியானது, உட்கார்ந்த வடிவமுடைய தாகும். ராஜஸ ஸ்வபாவமுடையதாகும். பத்திர பீடத்திற்கும் கூறியதே ஆஸநமாகும். இடது காலை பீடத்தின் மீது படுக்கை யாக வைத்தும், வலது காலை தொங்கவிட்டும் இருக்க வேண்டும். ஊர்துவகாயமானது 4 1/2 அங்குலம் கூடுதலாக இருப்பதாகும். இந்த 4 1/2 அங்குல அளவானது உட்கார்ந்த வடிவமான மூர்த்தியின் ஸ்பிக் பீண்டத்தின் (பிருஷ்டபாகத் தின்) விசேஷமானதாகும். முழங்கால்களின் வெளிப்பக்கம் வரையிலுள்ள ஒதுக்கம், இரு முழங்கால்களின் கோடி வரையி லுள்ள ஒதுக்கம், பரஹஸ்தங்களின் மணிக்கட்டுகளின் மத்தியி லிருந்து நடுவிலுள்ள ஒதுக்கம், இவைகள் ஸம அளவாக இருக்க வேண்டும்.

ஆஸநம் வரையில் தொங்கும் 9 ஸுத்திரங்கள் கூறப் பட்டிருக்கின்றன, அவைகளில் பூர்வஸுத்திரத்தைக் கூறுகிறேன்.

மௌளி மத்தியிலிருந்து நாஸாக்கிரம் ஸ்தனங்களின் மத்தியம் (ஹிருதயமத்தியம்) நாபிமத்தியம், இடது கணுக்கால் முட்டியின் மத்தியம், இந்த இடங்களில் மத்திய ஸுத்திரத்தைத் தொங்கவிடவேண்டும்.ம மத்திய ஸுத்திரத்திலிருந்து வலது ஜாநுவந்தமாக ஒதுக்கம் 31,30 அல்லது 29 அங்குலமிருப்ப தாகும். மத்திய ஸுத்திரத்திலிருந்து அதன் (வலது காலின்) நள காந்தம் வரையில் ஒதுக்கம் 12 அங்குலமாகும்; 13 அல்லது 10 அங்குலமும் இருக்கலாம். பீடத்திலிருந்து பீடத்திலுள்ள மத்திய ஸுத்திரத்திலிருந்து அந்த (இடது) குதிகாலின் ஒதுக்கம் 2 அல்லது 3 அங்குலமாகும். மத்திய ஸுத்திரத்திலிருந்து அந்தக் கையின் (அபயஹஸ்தத்தின் மத்தியரேகை வரையில்) ஒதுக்கம் 14 அங்குலமாகும். 15 அங்குல ஒதுக்கமுடைய அங்குல கிரம மானது தொப்புள் வரையில் இருக்க வேண்டும். ஸுத்திரத்தி லிருந்து கடக ஹஸ்தத்தின் (வரதஹஸ்தத்தின்) மணிக்கட்டு



நடுவரையில் ஒதுக்கம் 15 அங்குலமாகும். துடையிலிருந்து (இடது) மணிக் கட்டுவரையில் ஒதுக்கம் 2 அல்லது 3 (2 X 3 = 6) அங்குலங்களாகும். அந்த (இடது) கையானது, கடகஹஸ்தம் அல்லது ஸிம்ஹகர்ணமாக இருக்க வேண்டும் என்று விதிக்கப் பட்டிருக்கிறது. சுட்டுவிரல் முதல் சிறுவிரல் வரையில் விரல் கள்யாவும் வளைந்திருக்க வேண்டும். பெருவிரல் சிறிது வளைந் திருக்கவேண்டும். இவ்விதமாக இருப்பதற்கு கடகஹஸ்தம் என்று பெயர்.

நடுவிரலானது உள்ளங்கை நடுவரையில் வளைந்தும், அணிவிரல் அரைப்பங்கு வளைவாகவும், மற்ற விரல்கள் முன் போலவே சிறிது வளைவாகவும் இருப்பதற்கு ஸிம்ஹ கர்ணம் என்று பெயர். பரகரங்களின் கர்தரியஸ்தமானது (வெளிக் கைகளிலுள்ள கர்தரிமுத்திரையின் உச்சியானது) ஹிக்கஸூத்திர ஸமமாக (கழுத்து மட்டமாக) இருக்க வேண்டும். அக்கைகளின் அணிவிரலும், பெருவிரலும், உள்ளங்கையில் பொருந்தி இருக்க வேண்டும். சிறுவிரலானது சிறிது வளைந்திருக்க வேண்டும். மற்ற இருவிரல்களும் நேராக உயர்ந்திருக்க வேண்டும். இவ் விதமான கர்தரிஹஸ்தத்தை, லக்ஷணத்துடன் அழகாக அமைக்க வேண்டும்.

முழங்கையானது 5, 6 அல்லது 7 அங்குல ஒதுக்கத்திலிருக்க வேண்டும். பூர்வஸூத்திரமானது, குக்ஷமத்தயம் நாஸாக்ரம் இவைகளைத் தொட்டிருக்கவேண்டும். மேட்ர மூலத்திலிருந்து இடது கணுக்கால் முட்டியின் நடுவானது 6, 7 அல்லது 5 அங்குலமாகும். நாபி மத்தியத்திலிருந்து இடதுகாலின் நளகை யின் நுனியானது 14, 13, அல்லது 12 அங்குலமாகும். மௌளியக் கிரத்திலிருந்து மத்தியஸூத்திரம் வரையில் ஒதுக்கமானது 14, 13, 12 அங்குலமாகும். மௌளியக்கிரத்திலிருந்து மத்திய ஸூத்திரம் வரையில் ஒதுக்க மானது 14, 13 1/2 அல்லது 13 அங்குலமாகும்.

ஸுகாஸநமூர்த்தியானது, நேராக உயர்ந்து பவழம் போன்ற நிறமும் 3 கண்களும் அழகிய முகமும் நிறைந்த ராஜஸ







குணமும் புலித்தோலாடையும் வெண்பட்டாடையும் தரித்திருப் பதாகும். பரஹஸ்தங்கள் இரண்டும் உள்பக்கம் நோக்கியாவது வெளிப்பக்கம் நோக்கியாவது இருப்பதாகும் (பர ஹஸ்தங் களில்) வலது கரத்தில் பரசவும் (கோடாரி), இடது கரத்தில் மானும் இருக்க வேண்டும். மற்ற இருகரங்களில் வலது கரம் அபயஹஸ்தமாகும். இடது கரமானது கடகஹஸ்தம் அல்லது ஸிம்ஹகர்ணமாகவும் இருக்க வேண்டும். இடது காதில் விசே ஷித்து சங்கத்திரத்தை கல்பிக்க வேண்டும்.

வட்டமான (கர்ண) பத்திரத்தின் விஸ்தாரமானது 3, 4 அல்லது 5 அங்குலமாகும். கர்ணநாளத்தின் கனமும் பத்திர விஸ்தாரமும் 3 அங்குலம், 3 யாவையாகும். பத்திரத்தின் கன மானது இவ்விதமாகக் கூறப்பட்டிருக்கிறது.

வலது காதில் மகர குண்டலம் வியாள (ஸர்ப) குண்டலம் அல்லதுமு ஸிம்ஹ குண்டலம் இருக்க வேண்டும். குண்டலத்தின் உயரமும் அகலமும் 3, 4 அல்லது 5 அங்குல மிருக்க வேண்டும். அந்த குண்டலத்தை யுக்தியினாலே செய்து காதிலிருந்து தோளுக்கு மேலே தொங்கும்படி கல்பிக்க வேண்டும்.

காதுகளில் வட்டவடிவமான குண்டலத்தைக் கல்பிக்க வேண்டும். விருத்த குண்டலத்தின் விஸ்தாரமானது 18 யவை யாகும். அதன் உயரமானது 4 அங்குலமாகும். அதை கும்பம் (அல்லது) தாமரை மொட்டு போன்றாவது வேறு விதமாக அழகாக இருக்கும்படியாவது கல்பிக்கவேண்டும். ஸுகாஸந மூர்த்தியானது ஜடாமகுடம் தரித்திருக்க வேண்டும் மகுடத் தின் உயரமானது 24 அங்குலமாகும். 21 அல்லது 18 அங்குல உயரமும் இருக்கலாம். மகுடத்தின் உயரமானது கேசாந்தத்தி லிருந்தும் அது வலாட பட்டத்துடன்கூடியதாகும்.

மகுடத்தின் விஸ்தாரமானது முகவிஸ்தாரத்திற்கு ஏற்ற தாக இருக்க வேண்டும். அதன் உச்சியானது அடிப்பக்கத்தி லுள்ள அகலத்தில் 7ல் 1 பங்கு 8ல் 1 பங்கு அல்லது 9ல் 1 பங்கு குறைவாக இருக்க வேண்டும். அந்த மகுடமானது (நான்கு



பக்கங்களிலும்) நான்கு பூரிமங்களுடனிருக்க வேண்டும் (பூரிமம் - இலைகளின் வடிவமான அலங்காரம்) பூரிமமானது மகுடத்தின் உயரத்தில் 12ல் 1 பங்கு இருக்கவேண்டும் கிரிடத்தில் வலது பக்கத்தில் நாகவடிவமும் ஊமத்தம்பூவும் அமைக்க வேண்டும். இடது பக்கத்தில் அர்த்த சந்திர வடிவத்தைக் கல்பிக்க வேண்டும் அல்லது வலது பக்கத்தில் சந்திரகலையையும் இடது பக்கத்தில் நாகம், ஊமத்தம்பு இவைகளையும் கல்பிப்பதுமாகும். கடிஸூத் திரமானது மூன்றுக்கு அதிகமான சுத்துகளுடையதான கயிற்றின் வடிவமுடையதாகும் அதன் கனம் 1 யவையாகும். இந்த கடி ஸூத்திரமானது கடிஸந்திக்கு மேலே இணைக்கப்பட்டிருக்க வேண்டும். (அதன் நடுவில்) கீர்த்திமாநநத்தைக் கல்பிக்க வேண்டும். (கீர்த்தி மாநநம் - சிங்கத்தின் முகம்போன்ற வடிவ முள்ள முகப்பு) அந்த கீர்த்திமாநமானது 5, 6 அல்லது 7 அங் குலம் உயரமும் அதே அகலமுடையதாகும். இது மேட்ரத்திற்கு மேலே கல்பிக்கவேண்டும். ஊருதாமாவனது கடிஸூத்திரதி லிருந்து துடையின் 3ல் 1 பாகம் வரையில் அமைக்கப்பட வேண்டும். (ஊருதாம - கடிஸூத்திரத்திலிருந்து துடை வரை யில் தொங்கும் குஞ்சம் போன்ற அலங்காரம்) ஊருதாம வானது நடுவில் ரத்நங்களுடன் கூடிய முத்துமாலையின் வடிவ மாக இருக்க வேண்டும் இவ்விதமாக கடிஸூத்திரம் கூறப்பட் டிருக்கிறது. கடக வலயத்துடனிருக்க வேண்டும்.



ஏ அந்தணனே பிரகோஷ்டத்தில் (முன்கையின் அடிப் பத்தில் கடகவலயம் அணிவிக்கவேண்டும் அந்த வலயமானது சிருவிரலின் கனமுள்ளதாகவும் மிருதுவாக (அழகாக)வும் இருக்க வேண்டும் 2 அல்லது 3 யவை கனமுள்ளதாக இருப்பது மாகும். பிரகோஷ்டத்தில் (முன் கை நுனியில் மணிக்கட்டுக்கு மேலே) பராஜிதமென்னும் வளையை இரட்டையாக (இரண்டு வளையளாக) அமைக்க வேண்டும். அது அழகாகவும் ரத்நங்கள் புதுபித்தும் இருக்க வேண்டும் முழங்கையில் (முழங்கைக்கு மேலே) கேயூரத்தை (கேயூரம் - முழங்கைக்கு மேலே அணியக் கூடிய வலயம் போன்ற ஆபரணம்) அமைக்க வேண்டும். கேயூர மானது ஒரே விதமாகவாவது 8 இதழ்களுடன் கூடிய தாமரை மலர் போன்ற வடிவத்தினாலே செய்யப்பட்டிருப்பினும் அதில் பலவித ரத்நங்களும் பதிப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். அந்த





கேயூரமானது பாஹுஓமத்தியதில் பத்திர பூரிமத்துடனிருக்க வேண்டும் பத்திர பூரிமத்தின் நாளமானது (நாளம் - காம்பு) கேயூரத்திற்கு ஏற்ற கன முடையதாக இருக்க வேண்டும். அந்த பூரிமத்திலிருந்து அதோ நாளமானது (கீழேயுள்ள காம்பானது) 2 அல்லது 3 யவை இருப்பதாகும். பத்திர பூரிமத்தின் விஸ்தார மானது 3, 4 அல்லது 5 அங்குலமாகும் அதன் உயரமானது அதன் அகலத்தில் சரிபாதியளவு அல்லது 3/4 பங்கு அளவு அல்லது இருமடங்காகும் இரண்டு பங்கு உயரமிருந்தால் அதற்கு பாஹு‌வலயம் என்று பெயர்.

நடுவிரல் நீங்கிய மற்ற விரல்கள் மோதிரமணிந்திருக்க வேண்டும். மோதிரங்கள் விரங்களின் அடிக்கனுவிலிருக்க வேண்டும். அவைகளில் ரத்நங்கள் பதிந்திருக்க வேண்டும். உதரபந்தத்தின் அகலமானது 1, 2, 3 அல்லது 4 அங்குலமிருக்க வேண்டும் உதரபந்தமானது (உதரபந்தனத்தின் கனமானது) 1 யவை அல்லது 2 யவை இருப்பதாகும்.

ஸு‌காஸநமூர்த்தியானது பலவிதமான அணிகளை யணிந்து பற்பல ரத்நங்களாலே அலங்கரிக்கப்பட்டிருக்க வேண்டும் உதரபந்தமானது நாபிக்கு மேலே 3 அங்குலம் தள்ளி அணியப்பட்டிருக்க வேண்டும்.

கால்களில் நடுவிரல் நீங்கலாக மற்றவிரல்கள் மோதிரத் துடன் கூடியவைகளாகும் மோதிரங்களின் மத்தியத்தின் கன மானது 3 அல்லது 2 யவைகளாகும். ஏ பிராமமணனே இரு கால் களும் மணிக்கட்டுக் கீழ் பாதஜாலங்களுடன் கூடியவை களாகும் (பாலஜாலம் - பாதஸரம்) பாதபந்த ஸு‌த்ரமானது 2 யவை கனமுள்ளதாகும். (பாதபந்தஸு‌த்ரம் - மணிச் சலங்கை களுடன் கூடிய கயிறு) அந்த ஸு‌த்திரத்திலுள்ள சலங்கைகளின் காம்பினது 3 அல்லது 4 யவை அளவுடையதாகும் இந்த 5 யவைகளில் 3 யவை சலங்கையின் நாளமாகும். மீதமுள்ளது (2 யவை) ஜாலகத்தின் உயரமாகும். அதன் உயரமும் அகலமும் யவையளவும் ஸம அளவாகும். அது நீங்கியது அதைவிட



குறைந்த கணமுள்ளதாகவும் அதைவிட அமுங்கியும் (தாழ்ந் ததும்) இருப்பதாகும். (கீழே கூறப்பட்டவைகளால்) எது எது எவ்விதமாக இருக்க வேண்டுமோ அவ்விதமே இருப்பதாகும். இது உள்ளே கற்களுடன் நெருக்கமாக சாசைச் சுற்றி இருந்தால் காடவிருதம் எனப்படும். உள்ளே ஸஷானமில்லாமல் கனமாக இருந்தால் காடஷப்ரம் எனப்படும். (கைகளிலிருக்கும்) மழ, மான் இவைகளின் உயரமானது 12 அங்குலமாகும். மான், மழ இரண்டையும் யுக்தியோடு அழகாக இருக்கும்படியமைக்க வேண்டும் 8 யவை கனமுள்ளதாக யஜ்ஞோபவீதத்தைக் கல்பிக்க வேண்டும் யஞ்ஞோபவீதமானது இரண்டு (மூன்று) ஸுத்திரங்களுடன் அதற்கேற்ற கணத்துடன் (அல்லது வயிற்றள வுக்கு) இருக்க வேண்டும். தோளின் மேலே வஸ்திரமிருக்க வேண்டும். அந்த வஸ்திரமானது தொப்புளுக்குக் கீழே 1 அங் குலம் இருக்க வேண்டும். யஜ்ஞோபவிதஸுத்திரமானது நாடி யின் வலது பக்கத்திலிருக்க வேண்டும். இடது பக்கம் (தோளி லிருந்து) மற்றோரு யஜ்ஞஸுத்திரத்தைத் தொங்கவிட வேண்டும்.



யஜ்ஞோபவிதமானது ஊருஸுத்திரத்திற்கு மேலே ஸ்தநதிற்கு மேலே 8 அங்குலம் வரையிலிருப்பதாகும் இனி சந்நவீரத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக.

இரண்டு தோள் உளிலிருந்தும் இரண்டு பக்கங்களிலும் 7 அங்குலத்திற்கு யஜ்ஞோகபவீதத்தை போல வரிசையாக அமைந்திருப்பது (இதன் நடுவில் பதக்கம் முதலியவைகளைக் கல்பிக்கவேண்டுமென்று கூறப்படுகிறது. இது ஒரு விதமான கணிகலமாகும்.

(கழுத்திலிருந்து) தோள்ப்பட்டைக்கு கீழே 6 அங்குலம் வரையில் 4 அங்குல (4 யவை) அகலமும் 3 யவை கணமுடை யது, மற்றொரு அணிகலமாகும் இதற்கு கண்டஹாரம் என்று பெயர். இதிலும் ஸுவர்ணம் ரத்நங்களால் அலங்காரம் செய்ய வேண்டும்.





ஹிக்காஸூத்திரத்திற்கு மேலே (உள்கழுத்தை அடுத்து) உபகிரவத்தைக் கல்பிக்க வேண்டும். ருத்திராக்ஷம் ரத்தங்கள், ஸூவர்ண ஸூத்திரம் இவைகளாலே செய்யப்படும் இந்த ஆப ரணத்திற்கு உபகிரவம் என்று பெயர். இதில் பற்பல புஷ்பங் களையும் அலங்காரமாகக் கல்பிக்கலாம்.

(கீழே கூறப்பட்ட மூன்று விதமான ஆபரணங்களுக்கும் சேர்ந்து பொதுவாக சந்நவீரம் என்று பெயர். கழுத்திலிருந்து உதரபந்தமாக (ஷரஸூத்திரமம் வரையில்) அக்ஷமாலையைத் தொங்கவிட வேண்டும். இதற்கு ஹருதய மாலை என்று பெயர். இனி ஸ்கந்தமாலையைக் கூறுகிறேன். மாலையாகத் தோள்பட்டையிலிருக்கும் ஆபரணத்திற்கு ஸ்கந்த மாலை என்று பெயர் இது பலவித விருக்ஷ்ங்களாலே (பற்பல ரத்நங் களாலே) அலங்கரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

இவ்விதமாக ஸூகாஸந்மூர்த்தியை ஸர்வாங்கஸூந்தர ராக அமைக்க வேண்டும். மற்றவைகளை யுக்தியுடன் கற்பித்துக் கொள்ள வேண்டும்.



உ

# நடராஜா நிருத்த மூர்த்தி லக்ஷணம்



நடராஜ மூர்த்தியை உத்தம தசதாலத்தால் அதாவது 124 பாகங்கள் செய்து செய்யவேண்டும். நடராஜா நடனம் ஆடுவதால், கால் வளைத்தும் உடம்பு வளைத்தும் ஆடுவதால் நின்ற உயரத்தில் சமபாத ஸ்தானமாக நின்றதற்கும் வலைந்து நின்றதற்கும் உயரம் குறையும். அதாவது 12, 11, 100 பாகங்கள் (பனிரெண்டு, பதினொன்று, பத்து) ஆக மூன்று விதமாக நதமானம் சொல்லப்படுகிறது. அதற்கு தகந்த பாவங்களில் நடராஜர் அமையும்: உயர அளவில் தேகலப்தாங்குலத்தில் 12 அங்குலம் குறைத்து செய்தால் கொஞ்சம் குன்றிய விதமாக நடராஜர் காண்பார். 11 அங்குலம் குறைத்து செய்தால் மத்ய மாக காட்சிதரும். 10 அங்குலம் குறைத்துச் செய்தால் நிமிர்ந்து ஆடும் விதமாக அமையும். இவ்விதமான நடராஜ மூர்த்திகள் நமது நாட்டில் பழ இடங்களில் சோழர் காலத்தில் செய்யப் பட்ட விலைமதிக்க முடியாத அற்புதமான சிலைகளைப் பார்க்கிறோம். அப்படிப்பட்ட மூர்த்திகளை அளவுடன் செய் வதற்கு கீழ்கண்ட விபரங்கள் சில்ப நூலில் சொல்லப்பட்டுள் ளது. அதை காண்போம்.

நடராஜமூர்த்திக்கு பூர்வ சூத்ரமானது பிரபா மண்டல மத்யத்தில் இருந்து உஷ்ணீசத்திற்கு வலது பக்கம் லலாட மத்யத் தின் வலது பக்கத்தில் 1 அங்குலம் வலது கண்ணின் கோடி நாசாபுடத்தின் வலது பக்கம் முகவாய்கட்டையின் வலது பக்கம், கணம் மத்யம் நாபி மத்யம் இடது துடையின் மத்யம் ஸ்திதபாதத்தின் கணுக்கால் நடு, இந்த இடங்களில் விழ வேண்டும். நெற்றிமத்யம் 4 1/2 அங்குலம் ஒதுக்கம் கணுக்கால் மத்ய சூத்ரம் ஒதுக்கம் 12 அங்குலம், மத்ய சூத்ரத்தில் இருந்து கண்ட மத்யம் 7 1/2 அங்குலம் அல்லது 9 1/2 அங்குலமாகும். பூர்வ சூத்ரமானது. மேல் வயிற்றை தொடவேண்டும். அந்த சூத்ரத்தில் இருந்து டோல ஹஸ்தம் வரையில் 16 1/2 அங்குல







மாகும். அந்த சூத்ரத்தில் இருந்து இடது கையின் நுணியானது 4 அங்குலம். அந்த சூத்ரத்தில் இருந்து அக்னியை தரித்திருக்கும் கராக்ரம் வரையில் 38 அங்குலம் அல்லது 40 அல்லது 43 அங் குலம் வரையிருக்கலாம். அந்த அக்னி ஹஸ்தத்தின் நடுவிரல் நுனி கழுத்து மட்டமாக தூக்கியிருக்க வேண்டும். அக்னி பாத்திர மானது உள்ளங்கை நடுவிரலாவது விரல்கள் மூலமாவது தூக்கி யிருக்கும்படி செய்ய வேணும் பாத்திரமாவது பாத்திரமின்றி அக்னி மட்டுமாவது இருக்கலாம். அந்த அக்னி அகலம் ஐந்து அங்குலம் உயரம், 7, 8, 9 இந்த அளவுகளில் இருக்கலாம். அந்த அக்னியின் சுடர்கள், 3, 5, 7 இவ்விதமாக இருக்கலாம். மனதிற்கு தகுந்த படி கல்பிக்கலாம். இச்சுடர் நடுச்சுடர் வலமாக இருக்கும் படி செய்ய வேண்டும். வலது பக்கத்தில் பூர்வ சூத்ரத்தில் இருந்து தோள் வரை 20 அங்குலமாகும் அங்கிருந்து உடுக்கையுடன் கூடிய வலது மணிக்கட்டு வெளிப்பக்கம் 28 அல்லது 30 அங் குலம் வரை இருக்க வேண்டும். 40 அங்குலம் வரை கூட இருக் கலாம். அந்த மணிக்கட்டு உச்சியானது கழுத்து மட்டமாக இருக்க வேண்டும். உடுக்கையை பிடித்த ஹஸ்த சூசி விரலானது காது வரை உயர்ந்திருக்க வேண்டும் சுட்டுவிரல் நுனியானது சூசி முகமாக இருக்க வேண்டும். உடுக்கை நடு விரலுக்கு மேல் அமைந்திருக்க வேணும். உடுக்கையின் நீளம் 8 அங்குலம் அகலம் 5 அங்குலமாகும் உடுக்கை மத்தியில் 3 அங்குலம் உடுக்கை பசுத்தோலில் வாருகளுடன் அழகாக அமைய வேண் டும். கர்ணத்தில் இருந்து டமருகம் பிடித்த சூசி விரல் வரை 40, 45 அங்குலம் இருக்க வேண்டும்.

வலது பக்கத்தில் பூர்வ ஹஸ்தமானது அபய ஹஸ்த மாக இருக்க வேணும். பூர்வ சூத்திரத்தில் இருந்து அபய ஹஸ்தத் தின் மத்யமானது 24 அங்குலமாகும். அந்தக் கையின் நடுவிரல் நுனியானது ஹிக்கா சூத்ரத்திற்கு சமமாக இருக்க வேண்டும். மத்ய சூத்திரத்தில் இருந்து அந்தக்கையின் முழங்கை வரை யிலுள்ள ஒதுக்கம் 42 அங்குலம் அபயக் கையின் முன்கையில் சர்ப வலயத்திதைக் கல்பிக்க வேணும். அந்த சர்பத்தின் நீள மானது நடுமுன் கையின், சுத்தளவைப் போல் 1 1/4 பங்கு இருக்க வேணும். படமானது 12 அங்குலம் உயர்ந்திருக்க வேணும்



7 அங்குலம் அகலம் இருக்க வேணும் கணம் 1 அங்குலம் இருக்க வேணும். இது புஜங்க வலயம் எனப்படும்.



மத்ய சூத்ரத்தில் இருந்து கக்ஷம் 12 அங்குலம் மத்ய சூத்திரத்தில் இருந்து இடது பக்கத்தில் மத்ய வயிரானது 9 அங்குலம் பிண்டசூத்ரமானது 18 அங்குலம் மத்ய சூத்ரத்தில் இருந்து குஞ்சித ஜாநு அந்தரம் 10 அங்குலம் 9 அங்குலம் 8 அங்குலம் இவ்விதமாக கொள்ள வேணும் முன் சொன்ன நதமானம் 12, 11, 10 நின்ற கால் முழங்காலில் முட்டியில் இருந்து இடது முழங்கள் முட்டி வரை களத்தி 15, 14 இவ்விதமாக கொள்ள வேணும் இடைவெளி இருக்க வேணும் ஸ்த்தித பாதத்தின் நடுவில் இருந்து நளகையில் இருந்து இடது கால் இடைவெளி 44 அங்குலமாகும். 7, 8, 6, 5, 4 அம்சம் இதற்கு நதமானம் கல்பிக்க படவேணும். நின்ற முழங்காலில் இருந்து தூக்ய முழங்கால் 32 அங்குலமாகும். 33 வரை இருக்கலாம். ஊன்றிய குதிகள் இருந்து தூக்கிய பாதம் வரை இந்த அளவு தூக்கிய காலின் முழங்கால் உச்சியானது. நாபிமட்டம் இருக்க வேணும். டோல ஹஸ்தத்தின் முழங்கை வரை மத்ய சூத்ரத்தில் இருந்து 10 அங்குலம் 11 அங்குலம் ஆகும். டோல ஷஸ்தத்தின் மணிக்கட்டில் இருந்து இடது முழங்கால் வரை 10 அங்குலமம், 9 அங்குலம் டோல ஹஸ்தத்தின் விரல்கள் தொங்கிய விதம் விசேஷமமாக செய்ய வேணும். இடது முழங்கால் மத்ய சூத்ரம் 9, 11 செய்ய வேணும். டோல ஹஸ்தம் முதல் அபய ஹஸ்த இடைவெளி 10 அங்குலம் மீதம் உள்ளவைகள் அழகுடன் செய்து கொள்ளலாம்.

கேசாந்தத்தில் இருந்து பகபக்ஷம் (கொக்கு இறகு) உயரம் 18, 17, 16 அங்குலமாகும். அதன் அகலமானது உயரத்தில் பாதி, அல்லது 3/4 பங்கு இருப்பதால் விரிந்த ஜடைகள் 5, 6, 7, 9, 11 இவ்விதமாக இருக்க வேணும் ஜடையின் நீளமானது 32 அங்குலம்முதல் 61 அங்குலம் வரை ஒவ்வொரு அங்குலமாக நீண்டிருப்பதாகும். தொங்கும் ஜடையின் நீளமானது இவ்விதமாக கூறப்பட்டுள்ளது. கேசாந்தத்திற்கு மேலே உள்ள ஜடைகள் சிறுவிரல் கனம் உள்ளவைகளாக அமைய வேணும்.





நடராஜ மூர்த்தியானது விஷேச சித்து ஜடையில் புஷ்ப மாலை, சர்பம், எருக்கம் பூ, ஊமத்தம் பூ, மண்டை ஒடு கூடிய ரத்தினாபரணம் இவைகளாலேயே அலங்காரம் செய்யப்பட்ட ஜடாமகுடத்தையுடையதாகும். கழுத்தில் ஹாரங்களும் மாலை களும் அணிந்திருக்க வேணும் திருநீறு அணிந்து சிரித்த முகமும் யக்ஞோபவீதமும் ஹாரமும் தரித்திருப்பதாகும், ஸ்வாமியின் நடுவயறு வரை பாஹு வஸ்தரம் தொங்கியிருக்க வேணும். வயிற்றின் குறுக்கே உதரபெந்தம் கட்டப்பட்டு பிரபாமண்டலம் வரை தொட்டிருக்கவேணும். துடையில் புலித்தோலாடை அணிந்திருக்கவேணும். டோல ஹஸ்த பாஹுவில் இருந்து புலித்தோலாடை வஸ்தரம் 12, 13 இரு பாதங்களிலும் பாத சரமணிந்திருக்க வேணும். சகல ஆபரணங்களும் அலங்கரிக்கப் பெற்று கைவிரல்கள் கால் விரல்கள் எல்லாவற்றிற்கும் ரத்தினங் கள் பதித்த ஸ்வர்ண மோதிரங்கள் அணியப் பெற்று இருக்க வேணும். வலது கால் குஞ்சிதமாகவும் அபஸ்மாரனின் மீது வைக்கப்பட்டும் இருக்க வேணும். பரமேஸ்வரன் பாததலத்தை குறுக்காக வைத்துக் கொண்டு நிருத்தம் செய்து கொண்டிருப் பவராவர். இடது காலை தூக்கி வலது பக்கத்தில் குறுக்கே நீட்டிக் கொண்டிருப்பவராவார். டோல ஹஸ்த்தமானது முற்றி லும் அபஸ்மாரன் இதோ எனது காலின் கீழே இருக்கிறான் என்று சுட்டிக்காட்டுவதாகவும் அபஸ்மாரனுடைய உயரமானது. 3, 4 அல்லது 5 அங்குல மாகும். அபஸ்மாரனுடைய சரீரத்தில் உஷ்ணீசம் 1 அங்குலம். கேசாந்தம் 1 அங்குலம், முகம் 8 அங் குலம் கண்டம் 11/2 அங்குலம் ஹ்ருதயாந்தம் 9 அங்குலம். நாபியந்தம் 9 அங்குலம் மேட்ராந்தம் 6 அங்குலம். துடை 7 அங் குலம் முழங்கால் 2 அங்குலம் கண்டைக்கால் 7 அங்குலம் பாதம் 2 அங்குலம். கையின் நீளம் 14 அங்குலம். கையின் நடுவிரலானது கழுத்து மட்டமாகும். மற்றவைகளை யுக்தியுடன் செய்ய வேணும். அபஸ்மாரனை அதோமுகமாக படுத்திருக்கும் படி கல்பிக்க வேணும். பரமேஸ்வரனுடைய வலது பக்கத்தில் அபஸ்மார னுடைய தலையை வைக்க வேணும். இடது பக்கத் தில் இரண்டு கால்களும் உதரப்பட்டிருக்க வேணும். அபஸ்மார னுடைய உயரமானது 10, 9, 8 அங்குலமாகும். அவனுடைய இடது கையில் சர்பமும் வலது கையில் கத்தியும் இருக்க வேண்டும். அபஸ்மாரன் பயிர் பச்சை நிறமுடையவனாவான்.



பத்ம பீடத்தின் உயரமானது 16 அங்குலமாகும். அதன் விஸ்தாரமானது உயரத்தைப்போல நான்கு பங்கு நீளமாகும். அகலம் 1 1/4, 1 1/2, 2 மடங்கு உள்ளதாகும். மேல் பத்மம் கீழ் பத்மம் பிண்டிகை சில்ப நூல்களில் கூறியிருப்பது போல் செய்ய வேணும். பத்மா ஸநத்தை பிரபாவளியுடன் செய்ய வேண்டும்.

## பிரபாமண்டல லக்ஷணம்

சூர்யமண்டலம் மாதிரி அல்லது குக்குட வடிவம் மாதிரி பிரபா மண்டலத்தைச் செய்ய வேணும். அதன் கீழே மகர வாயில் இருந்து வாத்து போல் செய்தும் . தீச்சுடர் சுற்றியும் அலங்காரமாக இருப்பதும் அச்சுடர் 27, அல்லது 33 இப்படிச் செய்வர். விரித்த ஜடை, உதர பாதம் அக்னி ஹஸ்தம் இவை கள் பிரபா மண்டலத்துடன் இணையாது இருப்பது இலை களும் பூக்களும் நிறைந்து அழகுபடுத்த வேண்டும்.







# விஷ்ணு

யோக ஸ்தானக மூர்த்தி
போக ஸ்தானக மூர்த்தி
வீர ஸ்தானக மூர்த்தி
ஆபிசாரிக ஸ்தானக மூர்த்தி
யோக ஆசன மூர்த்தி
போக ஆசன மூர்த்தி
வீர ஆசன மூர்த்தி
ஆபிசாரிக ஆசன மூர்த்தி

யோக சயன மூர்த்தி
போய சயன மூர்த்தி
வீரசயன மூர்த்தி
ஆபிசாரிக சயன மூர்த்தி

உத்தம சயன மூர்த்தி
மத்யம்ம சயன மூர்த்தி
அதம சயன மூர்த்தி

## தசாவதாரம்

| | |
|---|---|
| மத்ஸ்ய மூர்த்தி | |
| கூர்ம மூர்த்தி | |
| வராக மூர்த்தி | அதில் பலவிதம் |
| நரசிம்ம மூர்த்தி | அதில் பலவிதம் |
| வாமன மூர்த்தி | |
| த்ரிவக்ரம மூர்த்தி | |
| ராகவ மூர்த்தி | |
| பலபத்ர மூர்த்தி | |
| கிருஷ்ணன் | மதனகோபாலன், பார்த்தசாரதி |
| கல்கி தத்தாத்ரய | |
| ஹரிஹர பிதாமஹ | புருஷ |
| கபில | யக்ஞ மூர்த்தி |
| வ்யாசர் | தன்வந்த்ரி |

## விஷ்ணு



லக்ஷ்மி நாராயணர்
வைகுண்டர்
அனந்தர்
த்விஜ்ரூபன்
24 மூர்த்திகள்
விஷ்ணு
கருடன்
சுதர்ஸனன்
சூரியன்
சந்திரன்
செவ்வாய்
புதன்
குரு
சுக்ரன்
சனி
ராகு
தேவி
பிடாரி
விஷ்ணு துர்கா
சண்டிகேஸ்வரி
சரஸ்வதி
யமுனை
சந்தான லக்ஷ்மி
தனலக்ஷ்மி
விஜயலக்ஷ்மி
வீரலக்ஷ்மி
போகசக்தி

சாஸ்தா (ஐயனார்)
பூர்ணா
புஷ்கலா
மீனாட்சி
ப்ரத்யங்கிரா

ஹயக்ரிவம்
த்ரை லோக்ய மோஷனர்
விஸ்வரூபன்
யோகேஸ்வரன்

துர்கா
பிரும்ம துர்கா
பத்ரகாளி
திரிபுர சுந்தரி
கங்கை
ஆதிலக்ஷ்மி
கெஜலக்ஷ்மி
தானிய லக்ஷ்மி
ஐஸ்வர்ய லக்ஷ்மி
சீதலா தேவி







ப்ராமஹி
மாஹேஸ்வரி
கௌமாரி
வைஷ்ணவி
வாராஹி
இந்திராணி
சாமுண்டி

முதலான சக்திகளும் இன்னும் அநேக திருவுருவங்களும் சில்பத்திலும் ஆகமங்களிலும் சொல்லப்பட்டுள்ளது அவைகளை ரூபத்யானப் பிரகாரம். வரைபடம் வரைந்து த்யான சுலோகங்களுடன் பிரசுரிக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம்.



# சிவலிங்க லக்ஷணம்



இனி சிவலிங்கத்தின் லக்ஷணத்தை விசேஷித்துக் கூறு கிறேன். ஆக்கமும் அழிவுமாகிய ஸம்ஸாரமானது, லயத்தை அடையும் பொழுது, பூதஜாலங்கள்யாவும் ஸ்ருஷ்டி காலத் தில் எவ்வாறு தோன்றினவோ, அவ்வாறே லயத்தை அடை கின்றன. சிவலிங்கமானது அவைகளைப் படைக்கும் தன்மை வாய்ந்ததாகையால் அதற்கு லிங்கம் என்று பெயர்.

நிஷ்கலமாயும், சாந்தமாயும், மனதிற்கும் வாக்குக்கும் அப்பாற்பட்டதும், ஆத்மாவுக்கும் அப்பாற்பட்டதுமான அதுவே, ஸம்ஸார சக்ரத்தில் உழலும் ஸகலபூதஜாலங்களுக் கும் முக்தியைக் கொடுக்கும் தன்மைவாய்ந்ததாம். அதுவே, எல்லாவற்றிலும் வியாபித்து, அவைகளுள் மறைந்து, ஸகல உலகங்களுக்கும் நாயகனாக விளங்குகிறது. அதனிடமிருந்து ஸ்ருஷ்டி காலத்தில் சாந்தி தத்துவமுண்டாயிற்று. அந்த சாந்தி தத்துவத்திலிருந்து சக்தி தத்துவம் தோன்றிற்று. அதிலிருந்து நாதம் தோன்றிற்று. நாதத்திலிருந்து பிந்து தோன்றிற்று. அந்த நாதமே ஸத் என்று கூறப்படுகிறது. அதிலிருந்து ஈசுவரன் தோன்றினான். ஈசுவரனிடத்திலிருந்து மஹேசுவரன் தோன்றி னான். மஹேசுவரனிடத்திலிருந்து விஷ்ணு தத்துவும் உண்டா யிற்று. (விஷ்ணு தோன்றினார்) விஷ்ணுவிடமிருந்து, 3-30-300-3000 என்று முறையே விசேஷித்து, தேவர்களும் இருடி களும் தானவர்களும் ரஸத்தின் வழியே உண்டாகும்ம் பற்பல ஜீவராசிகளும் (அஸுரர்களும்) உண்டானார்கள். ஹே அந்த ணனே! உலகத்தின் உற்பத்தியானது இவ்வாறு கூறப்பட்டுள் ளது. இவைகளில் முதலில் கூறப்பட்ட லிங்கம், சாந்தி, சக்தி என்ற மூன்றும் ஸகலம் எனப்படும் நாதம் பிந்து இரண்டும் மிஸ்ரம் எனப்படும் நாதமே லிங்கவடிவம் என்றும் பிந்துவே அதன் பீடமென்றும் கூறப்பட்டிருக்கிறது. லிங்கமானது சிவஸ்வ ரூபமாகும் பீடமானது சக்திஸ்வரூபமாகவும் லிங்கமும் பீடமும் சேர்ந்து ஒன்றாக இருப்பதுபோல் சிவமும் சக்தியும் சேர்ந்து ஒன்றாகவே விளங்குகிறது.





ஸத்பாவமானது உலகத்தின் தீமைகளைப் போக்கி ஸகல பிராணிகளுக்கும் நன்மையை கொடுப்பதற்காக தேவாதிகளான ஸகல ஜீவராசிகளும் நன்மையையடைவதற்காகவும், தியானம், பூஜை முதலியவைகளை செய்ய வேண்டியதற்காகவும் லிங்கம் யோநி என்ற பாகுபாட்டுடன் விளங்கலாயிற்று. சகலரும், எல்லா ஜீவராசிகளும் தர்மம் அர்த்தம் காமம் மோஹம் எல்லாம் அடையும் பொருட்டு லிங்கலக்ஷணம் சொல்லப்படுகின்றது.

லிங்கமானது சலம், அசலம், சலாசலம் என்று மூன்று வகையாகும். அந்த லிங்கத்தை முறையே விசேஷித்து யோனியை (பீடத்தை) ரத்தினத்தினால் ஆவது தங்கம் முதலிய லோகங்களினால் ஆவது செய்யலாம். லிங்கம் ஆனது எந்த த்ரவ்யத்தினால் செய்யப்படுகிறதோ அந்த திரவியமல்லாத வேறு திரவியத்தினாலும் யோனியை (பீடத்தை) செய்யலாம். ஆனால் அது லக்ஷணத்துடன் இருக்கவேண்டும். லிங்கத்தில் சிரோவர்த்தனம் குடை போன்றபாகம் நீக்கி சிவலிங்கம் லக்ஷமாவது. லிங்க உயரத்தை 7 பாகம் செய்து 4 பாகம் பீடத்தினினால் படிவதாகும் மீதம் வெளியே தெரிவதாகும்.

இஷ்டமான எந்த இடத்திற்கும் எடுத்துச் செல்லக் கூடியதாகவும் இஷ்டமான இடத்தில் வைக்கவும் தகுதிவாய்ந்த லிங்கம் சலலிங்கம் எனப்படும்.

தேவாலயத்தில் காணப்படுவதும் இருக்கும் இடத்தில் இருந்ததும் அசைக்க முடியாதபடி ஸ்த்திரமாக பிரதிஷ்டை செய்யப்பட்டதுமான லிங்கமானது அசலலிங்கம் எனப்படும்.

உரிய இடத்தில் ஸ்திரமாக இருப்பதுபோல் காணப்படுவதும் பீடத்தில் வைக்கவும் அதனின்றும் தனித்து எடுக்கவும் கூடியதுமான லிங்கமானது சலாசல லிங்கம் எனப்படும்.

தானாகவே லிங்காகாரத்தை அடைந்து சூத்திரத்துடன் கூடியதாய் காணப்படும் லிங்கத்தை பாணலிங்கம் என்று கூறுகிறார்கள்.

அசலலிங்கங்கள் புதிய கல் எடுத்துச் செய்யவேண்டும். கல் எடுக்கும் விதம் சிலாசங்கர லக்ஷணம் எனப்படும் அது விரிவாக கூறப்பட்டுள்ளது.



# லிங்கம் அளவு



கற்பக்ருஹத்தின் உள் அளவில் 5ல் 3 பாகம் இருக்கும் லிங்கமானது உத்தமலிங்கமாகும். அதில் சரிபாதி அளவு இருப்பது மத்யமலிங்கமாகும் இந்த இரண்டு அளவுகளில் மத்தியில் உள்ள அளவை அதாவது சரிபாதியில் இருந்து முழு அளவு வரையிலுள்ள மத்ய அளவை 9 பாகங்களாகச் செய்ய வேண்டும் அவைகளில் ஒவ்வொரு அளவும் தனித்தனியே 9 வித லிங்க மானமாகும் இந்த ஒன்பது லிங்கமானங்களில் அதிக அளவுள்ள 3ம் அதமமாகும் இவ்விதமாக கற்பக்ருஹத்தின் அளவினால் கிடைக்கும் லிங்கத்தின் உயரமானது 9 விதமாகும்.

லிங்கமானது (லிங்கஉயரமானது) கற்பக்ருஹ த்வாரத்திற்கு (உயரத்திற்கு) சமமாக இருப்பது உத்தமம் அதில் 3ல் 2 பங்கு உயரமுள்ளது அதமமாகும் இவ்விரண்டு அளவுகளின் மத்தியிலுள்ள அளவை 8 பாகங்களாக செய்ய த்வாரமாநத்தால் கிடைக்கும் லிங்கமானது 9 விதமாகும்.

ஸ்தம்பத்தின் முழு அளவை 9 பாகங்களாகச் செய்ய அதன் ஒவ்வொரு பாகமும் தனித்தனியே லிங்கத்தின் மானமாகும் எனவே ஸ்த்தம்பாமானத்தால் கிடைக்கும் லிங்கமானது 9 விதமாகும் இவைகளில் மூன்று மூன்று கூறுகள். முறையே உத்தம, மத்யம, அதமங்களாகும். கற்பக்கிரஹத்தின் ஆதி பூமி யான உள்பக்கத்தில் தூண்மட்டத்திற்கு சமமான பகுதிக்கே ஸ்தம்பம் என்று பெயர்.

அதிஷ்ட்டானத்தின் உயரத்தில் ஸ்த்தம்பமானத்தைப் போல் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

1 ஹஸ்தம் முதல் 9 ஹஸ்தம் வரையில் ஹஸ்த்தத்தில் 8ல் ஒரு பங்கு வீதம் கூட்டிவர ஹஸ்தமானத்தால் கிடைக்கும் லிங்கமானது 65 விதமாகும்.

5 ஹஸ்தத்திற்கு அதிகமாயிருக்கும் கற்பக்ருஹத்தில் லிங்கமானத்தை ஹஸ்தமானத்தால் கணக்கிட வேண்டும்





கற்பக்ருஹமானது 5 ஹஸ்தத்திற்கு உள்பட்டதாக இருந்தால் ஹஸ்தமானத்தால் லிங்கமானத்தைக் கணக்கிடக்கூடாது.



ஆலயமானது விகல்ப ஹர்ம்யமாக இருந்தாலும் ஆபாச ஹர்ம்யமாக இருந்தாலும் அப்பொழுது 1 முதல் 3 ஹஸ்தம் வரையில் லிங்கமானத்தைக் கொள்ள வேணும்.

ஆலயமானது சந்தவிமானமாக இருந்தால் 3 முதல் 6 ஹஸ்தம் வரையில் லிங்கமானத்தைக் கொள்ளவேணும் அதுவே ஜாதிவிமானமாக இருந்தால் 6 முதல் 9 ஹஸ்தம் வரையில் லிங்கமானத்தைக் கொள்ளவேணும். இவ்விதமாக ஹஸ்த்த வசத்தாலே கூறப்பட்டிருக்கிறது.

இனி தாலமானத்தைக் கூறுகிறேன். ஒரு தலம் முதல் ஒவ்வொரு தாலமாகக் கூட்டிவர தாலபேதத்தினாலே லிங்கமானம் 9 விதமாகும் இது ஜாதி ஹர்ம்யம் இல்லாத இடத்திற்கே கூறப்பட்டதாகும்.

13 அங்குலம் முதல் 109 அங்குலம் வரை 2, 2 அங்குலமாகக் கூட்டி வர லிங்கமானம் 49 விதமாகும் இது மானாங்குலத்தால் கூறப்பட்டதாகும்.

சிவாம்சம், விஷ்ணு அம்சம், பிரம்ஹாம்சம் என்ற மூன்று பிரிவுகளுடன் கூடிய லிங்கத்தை 1 முழு உயரத்திற்குக் குறைவாகச் செய்யக்கூடாது. 1 முழத்திற்கு குறைவாக உள்ள லிங்கம் யாவும் வட்டவடிவமாக இருக்க வேண்டும்.

லிங்கஉயரத்தில் 9ல் 4 பாகத்தை பீடத்துடன் பொருத்த வேண்டும். அதன் மீதமுள்ள 5 பாகமானது மேலே சிவாம்சமாக தெரியவேண்டும். இவ்விதமான லிங்கத்தை விகல்ப ஆபாச கிருஹங்களில் பிரதிஷ்டை செய்யலாம்.

சிவாம்சம், விஷ்ணு அம்சம், பிரம்ஹாம்சம் என்ற மூன்று பிரிவுகளுடன் கூடிய லிங்கத்தை 1 முழு உயரத்திற்குக் குறைவாகச் செய்யக்கூடாது. 1 முழத்திற்கு குறைவாக உள்ள லிங்கம் யாவும் வட்டவடிவமாக இருக்க வேண்டும்.

## லிங்கம் அளவு



லிங்க உயரத்தில் 9ல் 4 பாகத்தை பீடத்துள் பொருத்த வேண்டும். அதன் மீதமுள்ள 5 பாகமானது மேலே சிவாம்ச மாக தெரியவேண்டும். இவ்விதமான லிங்கத்தை விகல்ப ஆபாச கிருஹங்களில் பிரதிஷ்டை செய்யலாம்.

லிங்கத்திற்குக் கூறிய 5 பாகத்தை, பீடத்தினுள் வைத்து, பாக்கியுள்ள 4 பாகத்தை, மேலே சிவாம்சமாகத் தெரியும் படி செய்யப்பட்டிருந்தால், அந்த லிங்கத்தை விகல்பகிருஹத் திலோ, ஆபாஸகிருஹத்திலோ வைக்காமல், மற்ற ஜாதி கிருஹம், சந்தகிருஹத்தில் வைக்கவேண்டும். சிலையினாலே செய்யப்படும் லிங்கத்தை 13 அங்குலத்தில் செய்யக்கூடாது.

லிங்கமானது இவ்விதம் அநேகவிதமாகக் கூறப்பட்டிருக் கிறது. இனி நாகலிங்கம், திராவிட லிங்கம், வேஸரலிங்கம் இவைகளின் லக்ஷணத்தைக் கூறுகிறேன்.

லிங்கத்தின் உயரத்தில் 4ல் 1 பங்கு அகலமுடைய லிங்க மானது அதமமாகும். உயரத்தில் 3ல் 1 பங்கு அகலமுடையது ஸ்ரேஷ்டமாகும். (ஸ்ரேஷ்டம் - சிறந்தது அல்லது உத்தமம்) கீழே கூறப்பட்ட இரண்டுவித அளவுகளின் நடுவிலுள்ள அளவை, 8 பாகங்களாகச் செய்ய, லிங்கத்தின் அகலம் 9 விதமாகும்.



உயரத்தில் 16ல் 5 பாகம் அகலமுள்ளது, சாந்திக லிங்க மாகும். (சாந்திகம் - தீமைகளை நீக்கக்கூடியது). உயரத்தில் 16ல் 4 பாகம் அகலமுள்ளது, பௌஷ்டிக லிங்கமாகும். (பௌஷ் டிகம் - ஆரோக்யத்தைக் கொடுக்கக் கூடியது). 16ல் 3 பங்கு அகலமுள்ளது, ஜயத்தைக் கொடுப்பதாகும்.

ஆபிசார கர்மாவில் 2 பாகம் அகலமுள்ளதாகும். இவ் விதமாக, லிங்கத்தின் அகலம் 4 விதமாகும். நாகரலிங்கமானது இவ்விதமாக 3 (14) வித அகலமுடையதாகும்.

லிங்கத்தின் உயரத்தில் 18 பாகங்களில் முறையே 6 பாகம், 5 பாகம், 4 பாகம், 3 பாகம், விஸ்தாரமுடைய 4 விதலிங்கங் களும் திராவிட லிங்கங்களாகும். இவைகள் முறையே, சாந்திகம் முதலிய லிங்கங்களாகும்.







லிங்கத்தின் உயரத்தில் 20ல் 8 பாகம், 7 பாகம், 6 பாகம், 5 பாகம், விஸ்தாரமுள்ளதாகச் செய்யப்பட்ட லிங்கமானது, வேஸரலிங்கமாகும். இவைகள் முறையே சாந்திலிங்கம், பௌஷ்டிகலிங்கம், ஜயதலிங்கம், (ஆபிசாரம்) என்ற லிங்கங் களுமாம். இவ்விதமாக வேஸரலிங்கம் 4 விதமாகும்.

ஹர்மியம், லிங்கம், பிண்டிகை, இந்நான்கும் ஒரே ஜோதிச் சிலையினால் செய்யப்படவேண்டும். இவைகளில், வேறு ஜாதிச் சிலையைக் கலக்கலாகாது. இவ்விதமாகச் செய்யப் பட்ட லிங்கமானது, ஸகலவிதமான நன்மைகளையும் விருத்தி செய்வதாகும். வேறு ஜாதிச் சிலையின் ஸம்பந்தமிருந்தால், அது அரசனுக்கு துக்கத்தையும் பயத்தையும் உண்டுபண்ணும்.

ஆகையால், ஸகலவிதமான முயற்சிகளாலும், சிலை களில் ஜாத்யந்தரஸங்கரம் (ஸங்கரும் - சேர்க்கை) ஏற்படாத படி, லிங்க நிர்மாணம் செய்யவேண்டும் இவ்விதம் நாகராதி லிங்கங்களின் லக்ஷணம் கூறப்பட்டது.

லிங்கத்தின் உயரத்தை 3 பாகம் செய்து, அதில் 1 பாகம் (அடியில்) சதுரச்ரமாகவும், மத்தியிலுள்ள 1 பாகம் அஷ்டாச்ர மாகவும் மேலேயுள்ள 1 பாகம் விருத்தாகாரமாகவும் இருப்பது. ஸமலிங்கமெனப்படும். இது பிராம்ஹணாதி ஜாதியினருக்கு விருத்தியைக் கொடுக்கும்.

லிங்கத்தின் உயரத்தை 24 பங்குகளாகச் செய்து கொண்டு, அந்தப் பங்குகளில் 7 பாகம் சதுரச்ரமாகவும், 8 பாகம் அஷ் டாச்ரமாகவும்ம, 9 பாகம் விருத்தாகாரமாகவும் கொள்ளுவது, வர்த மான லிங்கமாகும்.

இவ்விதமாகவே, லிங்கத்தின் உயரத்தில் 6 பாகம் சதுர சரம், 7 பாகம் அஷ்டாச்ரம், 8 பாகம் விருத்தமாகக் கொள்ளுவ தும், வர்தமான லிங்கமாகும்.

லிங்கத்தின் உயரத்தில் 5 பாகம் சதுரச்ரம், 6 பாகம் அஷ்டாச்ரம், 8 பாகம் விருத்தமாகக் கொள்ளுவதும், வர்தமான லிங்கமாகும்.

## லிங்கம் அளவு



லிங்கத்தின் உயரத்தில் 4 பாகம் சதுரச்ரம், 5 பாகம் அஷ்டாச்ரம், 6 பாகம் விருத்தமாகக் கொள்ளுவதும், வர்தமான லிங்கமாகும். இவ்விதமாக, வர்தமான லிங்கம் 4 விதமாகும்.

லிங்கத்தின் உயரத்தை 10 பாகங்களாகச் செய்துகொண்டு, அவைகளில் 3 பாகம் சதுரச்ரமாகவும், 3 பாகம் அஷ்டாச்ர மாகவும், 4 பாகம் விருத்தமாகவும் கொண்டால் அது, சிவாதிக லிங்கமாகும். இதை வேறுவிதமாகவும் கொள்ளலாம்.

சதுரச்ரம், அஷ்டாச்ரம், விருத்தம், இவைகளை முறையே 4, 4, 5 பாகங்களாகவும், 5, 5, 6 பாகங்களாகவும், அல்லது 6, 6, 7 பாகங்களாகவும் கொள்ளலாம். எனவே, சைவாதிக லிங்கமானது, கீழே கூறப்பட்ட விதிகளின்படி நான்கு விதங்களாகும்.

லிங்கத்தின் உயரத்தை 9 பாகங்களாகச் செய்து, அந்த பாகங்களில், சதுரச்ரம் 2 பாகம், அஷ்டாச்ரம் 3 பாகம், விருத்தம் 4 பாகமிருப்பது, ஸ்வஸ்திக லிங்கமென்று கூறப்பட்டிருக்கிறது. இனி, ஸர்வதோபத்ர லிங்கத்தைக் கூறுகிறேன்.

அடியிலிருந்து நுனி வரையில் 3 பாகங்களும் விருத்தாசாரமாகவே இருப்பதாகும். அதன் உயரத்தில் 3ல் 1 பாகம் பூமிக்குள் பதிந்தும், 3ல் 1 பாகம் யோநியில் (ஆவுடையார்) பொருத்தப்பட்டும், 3ல் 1 பாகம் பூஜாம்சமாகவும் (வெளியில் லிங்காகாரமாகத் தெரிந்துகொண்டும்) இருப்பது, ஸர்வதோபத்ர லிங்கம் எனப்படும்.

ஸார்வதேசிக லிங்கமானது, எல்லா பாகங்களும் விருத்தாகாரமாக இருப்பதாகும். இதன் உயரத்தை, முறையே, 5-4-3 பாகங்களாகச் செய்ய வேண்டும். (அவைகளில் 5 பாகம் அடியிலிருப்பதாகும். மத்தியிலுள்ள 4 பாகத்தை) பீடத்தில் வைக்க வேண்டும். பாக்கியுள்ள (3) பாகமானது பூஜாம்சமாகும். (சிவாம்சமாகும்) இவ்விதமாகவே, ஸார்வதேசிக லிங்கத்தைக் கல்பிக்க வேண்டும்.







ஸமலிங்கத்தில், அதன் உயரத்தை 9 பாகமாகச் செய்து, 3 பாகங்களை ஸமபாகமாகக் கொள்ளவேண்டும். அதன் வட்ட வடிவத்தின் (சிவாம்சமான மேல்பாகத்தின்) சுத்தளவானது, 9ல் 7 பாகம் இருக்க வேண்டும். கீழ்பாகத்தின் சுத்தளவானது, 9ல் 8 பாகம் இருக்கவேண்டும். இந்த த்ரைராசிக விதியானது எல்லா ஜாதியினருக்கு உகந்ததாகும். சிறந்ததுமாகும்.

அடிமுதல் நுனிவரையில் சதுரச்ரமாக இருப்பது தாரா லிங்கமாகும்.

ஸமலிங்கத்தில், மூலபாகம் சதுரச்ரமாகவும், மற்ற இரண்டு பாகங்களும் அஷ்டாச்ரமாக இருப்பதும் தாரா லிங்க மாகும்.

கீழேயுள்ள பாகம் சதுரச்ரமாகவும், மத்திய பாகம் அஷ்டாச்ரமாகவும், மபூஜாபாகம் (மேல்பாகம்) ஷோடசாச்ர மாக இருப்பதும் தாராலிங்கமாகும். இவ்விதம் தாராலிங்கம் 3விதமாகும்.

இத்தகைய தாராலிங்கத்தின் அச்ரமானது, (அச்ரம் - பட்டை) லிங்கத்தின் சிரஸ்ஸு வரையிலிருப்பதாகும். 1/2 அல்லது 1 யவை உயர்ந்திருப்பதுமாகும்.

ஸமலிங்கமானது தாராலிங்கமாக இருந்தால், அது, ஸகல பிராணிகளுக்கும் நன்மையையுண்டு பண்ணும்.

முகலிங்கமானது, விசேஷித்து, தாராலிங்கத்தைப் போன்றதேயாம்.

சிவாம்சாதிக லிங்கத்தில், முகலிங்கம் கல்பிக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. அந்த லிங்கத்தின் பூஜா பாகத்தை 3 பாகங்களாகச் செய்து, அதன் மேல் பாகத்தில் முகம் இருக்க வேண்டும். அந்த மேல் பாகத்தை 10 பாகங்களாகச் செய்து, அவைகளில், 5 பாகம் சிரஸ்ஸாகவும், 4 பாகம் முக மாகவும், 1 பாகம் கழுத்தாகவும் இருக்க வேண்டும். அதில்,



2 காதுகள், 2 கண்கள், உதடு, இவைகள் ஸகல லக்ஷணங்களுடன் அமைந்திருக்க வேண்டும். அதன் கீழ்பாகமானது, லிங்காகாரமாக இருக்க வேண்டும். அதில் ஸரிபாதியளவு பீடத்துடனிருக்க வேண்டும். (இங்கு ஸரிபாதி என்பதற்கு பூஜாம்சத்தில் ஸரிபாதி என்றாவது, பூஜாம்சம் நீங்கிய பாகத்தில் ஸரிபாதி என்றாவது பொருள் கொள்ளவேண்டும். எனவே, லிங்கத்தின் முழு அளவில் ஸரிபாதியளவு கொண்டது பூஜாம்சம் என்பது கருத்து).

அல்லது லிங்கத்தின் உயரத்தை 124 பாகங்களாகச் செய்து கொண்டு, அவைகளில் 11 பாகங்களை முகமாகக் கொள்ள வேண்டும். அது கழுத்திற்குமேலே 11 பாகங்களாகும். முகத்திற்கு மேலே கேசாந்தபாகமான உச்சியினுயரம் 3 அல்லது 4 பாகங்களாகும்.

முகத்தில், நேத்திராந்தம், புடாந்தம், ஹந்வந்தம், இம் மூன்று பாகங்களும், முறையே, 3 யவை அதிக அளவு உடையவைகளாம். 4 யவை அதிகமாகவும் இருக்கலாம்.

முகவாய்க்கட்டைக்குக் கீழே, கழுத்தின் உயரம், 4 பாகங்களாம். கண்டமானது, கேசாந்தத்தின் அளவே இருப்பதும் கூடும். இவைகளை நீங்கிய கீழேயுள்ள பாகங்கள் லிங்காகாரமாக இருக்க வேண்டும். இவைகள் லக்ஷணத்துடன் அமையப் பெற்றிருக்க வேண்டும்.

(முகலிங்கமானது, முன் பக்கத்தில் மட்டிலும்) ஒரே முகம் உடையதாக இருக்கலாம். அல்லது, (4 பக்கங்களிலும்) 4 முகங்கள் உடையதாகவும் இருக்கலாம். 2 கைகள், அல்லது 4 கைகள் உடையதாக இருக்கலாம். (கைகள் அமையப் பெற்றிருக்க வேண்டுமானால், அதில்) ஸ்தநமட்டத்திற்கு மேலே அமைந்திருக்கவேண்டும். அதுவும் லக்ஷணத்துடன் அமைந்திருக்க வேண்டும். முகம் மட்டிலுமுள்ளதானால், அது, கழுத்திற்கு மேலே அமைந்திருக்க வேண்டும். இது நீங்கிய பாகமானது லிங்கவடிவமாக இருக்க வேண்டும். இவ்விதம் முகலிங்க லக்ஷணம் கூறப்பட்டுள்ளது. இத்தகைய முகலிங்கமானது, அரசர்களுக்கு அபிவிருத்தியை யுண்டுபண்ணும்.







லிங்கத்தின் விஷ்கம்பத்தை (சுத்தளவை) 8 பாகங்களாக கணக்கிட்டுக்கொள்ள வேண்டும். லிங்கத்தின் மூலம் (அடி) மத்தியமம் (நடு) அமுக்ரம் (நுனி) இவைகள் முறையே ஒன்றுக் கொன்று 1 பாகம் குறைவாக அமையப் பெற்றிருக்க வேண்டும். அதாவது, மூலம் 8 பாகம், மத்தியம் 7 பாகம், அக்ரம் 6 பாக சுத்தளவுள்ளதாக அடி பருத்து நுனி சிறுத்து அமைந்திருக்க வேண்டும். இதற்கு ஸ்தூலமூல லிங்கம் (அடி பருத்த லிங்கம்) என்று பெயர்.

இவ்விதம் இதேயளவில் நுனி - நடு - அடி இவைகள் முறையே 8ல் 1 பாகம் சுத்தளவு குறைவாக இருந்தால் அது சிரஸ்தூலம் (நுனி பருத்தது) என்று கூறப்படும். இவ்விரண்டு லிங்கங்களும், ஆர்ஷலிங்கமெனப்படும். இது மஹார்ஷிகளால் பூஜிக்கப்பட்டதாகும். சிறந்ததுமாம்.

முக்கோண வடிவமானது 5 கோணமானது, 6 கோண மானது, 7 கோணமானது, 12 கோணமானது, 10 கோணமானது, 9 கோணமானது, வேறு விதமான கோணங்களுடன் மனோஹர மாக இருப்பது, பலகைபோலும் கண்ணாடிபோலும் இருப்பது, ஒரு ரேகையுள்ளது, ரேகையை இல்லாதது, சிரோவர்த்தநம் இல்லாதது, மாநம், உன்மாநம் முதலியவைகள் பொருத்தமாக இல்லாமலிருப்பது, ஆகிய லக்ஷணங்களுள்ள லிங்கமானது, ஸேவிக்கத்தக்கதென்றும் (திவ்ய லிங்கமென்றும்) ஸ்வாயம்புவ லிங்கமென்றும் கூறப்படுகிறது. இது, தேவர்களால் பூஜிக்கப் பட்ட லிங்கமாகும்.

பாணாஸுரனாலே பூஜிக்கப்பட்ட ஸ்வருபத்தையுடைய லிங்கத்திற்கு பாணலிங்கம் என்று பெயர். அது ஸ்தூல மென்றும், ஸூக்ஷ்மமென்றும், சிரோலிங்கமென்றும், மூல லிங்கமென்றும் முறையே கூறப்படுகிறது. பாணலிங்கத்தில் உயர்ந்திருப்பது (எடுப்பாக உயர்ந்து காணப்படும் பக்கமானது) சிரஸ்ஸாகும். மது வர்ணமாக (தேன் நிறமாக) இருப்பது ஸந்தோஷத்தைக் கொடுக்காது. (அதைத் தொட்டால் சீதலமாக இருக்கும் என்பது மற்றொரு பிரதியிலுள்ள பாடம்) இந்த பாண



லிங்கத்தை ஆஸநத்தில் வைக்கும்பொழுது, அது ஸார்வதேசிக லிங்கத்திற்குக் கூறியுள்ளபடி ஆஸநத்திலமர்ந்திருக்க வேண்டும்.



லோஸத்தினால் செய்யப்பட்ட லிங்கம், ரத்நத்தினால் செய்யப்பட்ட லிங்கம் ஆகிய இவைகளையும், ஸார்வதேசிக லிங்கத்திற்குக் கூறப்பட்ட விதியின்படியே, ஆஸநத்தில் வைக்க வேண்டும். இவ்விதமாக லிங்க பேதங்கள் கூறப்பட்டன. இனி சிரோவர்தநத்தைக் கூறுகிறேன். கேட்பாயாக.

லிங்கத்தின் தலையிலிருந்து உச்சிவரையில் சிரோவர்தநம் செய்ய வேண்டும். (சிரோவர்தநம் லிங்கத்தின் உச்சியின் அமைப்பு) ஆகையால், லிங்கத்தின் உயரத்தைக் கணக்கிட்டு, அதற்கேற்றபடி சிரோவர்தநத்தை அமைக்க வேண்டும். அந்த சிரோவர்தநமானது, குடைபோலிருப்பது (தாழங்குடை யின் மேல் பாகத்தைப்போலிருப்பது.) 1 கோழி முட்டை போல் இருப்பது 2, திரிபுரம்போல் (முதுக்கன் காயைப் போல்) இருப்பது 3, அரைவட்டமான சந்திரபிம்பத்தைப் போல இருப்பது 4, என்ற 4 விதமாகும்.

புத்திமானாக இருப்பவன், லிங்கத்தின் சுத்தளவை 8 பாகமாகச் செய்துகொண்டு, அவைகளில், 1/2 பங்கை உச்சி யிலிருந்து அளந்து கொண்டு, அதை, குடையின் உச்சியைப் போல, சிரோவர்தநத்தை அமைக்க வேண்டும். இது ஒருவித மாகும்.

லிங்கத்தின் அகலத்தைக் கணக்கிட்டு, அதை 32 பாகங் களாகச் செய்து, அவைகளில், 5 பாகத்தை, உச்சியிலிருந்து, குடையின் உச்சியைப்போல, சிரோவர்த்தநத்தையமைக்க வேண்டும். இது இரண்டாவது விதமாகும்.

இவ்விதமே லிங்கத்தின் அகலத்தில் 32ல் 7 பாகங்களால் சிரோவர்தநத்தையமைப்பது மூன்றாவது விதமாகும்.

இவ்விதமே சத்ராகாரமான சிரோவர்த்தநம் நான்கு வித மாகும்.





சத்ராகாரமான சிரோவர்தநமானது, பிராம்ஹணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும், ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கக் கூடியதாகும். லிங்கங்கள் எல்லாவற்றிலும் சத்ராகாரமான சிரோ வர்தநமுடையது சிறந்ததாகும்.

லிங்கத்தின் அகலத்தை 32 பாகங்களாகச் செய்து, அவைகளில், முறையே, 14-15-16-17 பாகங்களாலே குக்குடாண்டம் போன்ற சிரோவர்த்நமானது, 4 விதமாகும். (குக்குடம் - கோழி. அண்டம் - முட்டை) இந்த 4 வித சிரோவர்த்தங்களுக்கும், குக்குடாண்டாகார சிரோவர்த்தநம் என்று பெயர். இவ்வித சிரோவர்த்தநமுடைய லிங்கமானது, வர்தமாக லிங்கமாக இருக்க வேண்டும். அது க்ஷத்திரியர்களுக்கு உகந்ததாகும். சிறந்ததுமாம்.

லிங்கத்தின் அகலத்தை 32 பாகங்களாகச் செய்து, அவைகளில் முறையே, 10-11-12-13 பாகங்களாலே, த்ரிபுரத்தைப் போன்ற (முதுக்கன்காய் போன்ற) சிரோவர்த்நமானது 4 விதமாகும். இது சிவாதிக லிங்கத்தில் அமைக்கப்பட வேண்டும். இத்தகைய லிங்கமானது வைசியர்களுக்கு ஏற்றதாகும். சிறந்ததுமாம்.

லிங்கத்தின் அகலத்தை 32 பாகங்களாகச் செய்து, அவை களில் முறையே, 10-11-12-13 பாகங்களால், அரைவட்ட சந்திரனைப் போன்ற சிரோவர்த்தநத்தையமைத்தால், அர்த சந்திராபமானது 4 விதமாகும். இவ்விதமாக சிரோவர்த்தந முடையது. ஸ்வஸ்திக லிங்கமாகும். இது, சூத்திரர்களுக்கு அபிவிருத்தியை யளிக்கும்.

ஸார்வதேசிக லிங்கங்களுக்கும், மற்ற லிங்கங்களுக்கும், விசேஷித்து, கர்த்தாவின் ஜாதிக்குத் தக்கபடி, சீர்ஷாகாரத்தை, சத்திராதி ஆகாரமாக கல்பித்துக்கொள்ளவேண்டும். கைதவிக லிங்கம், ஆர்ஷலிங்கங்களில், சீர்ஷாகாரமானது, எவ்விதமாகவும் இருக்கலாம்.

சிரோவர்த்தநத்துடன் கூடிய லிங்கத்தின் உயரத்தை 3 பாகங்களாகப் பிரித்துக்கொண்டால், அதில் சிரோவர்த்தநத்தின்



உயரத்தை யுக்தியினாலே கண்டுகொள்ளலாம். இவ்விதமாக உஷ்ணீஷமானம் கூறப்பட்டது. அதுவே சிரோமானமென்று கூறப்படுகிறது.

உச்சியிலிருந்து அதன் முனை (சிரோவர்த்தநத்தின் எல்லை) வரையில், சுற்றிலுமிருக்கும்படி அதை அமைக்க வேண்டும். அது எதுவரையில் குறைவாக இருக்கவேண்டுமோ, அதுவரையில், உச்சியிலிருந்து, முறையே, தணிந்து இருக்க வேண்டும். (சிரோவர்த்தநமானது, உச்சியிலிருந்து அதற்குரிய எல்லை வரையில், சுற்றிலும், முறையே செறிந்திருக்க வேண்டும் என்று பொருளாம்.)

சத்ரசீர்ஷமானது, (குடை வடிவமான சிரோவர்த்தநமானது) லிங்கத்தின் உச்சியிலிருந்முது (முறையே) செறிந்திருப்பதாகும்.

திரிசீர்ஷகத்தை, 3 சக்கிரங்களுடன் கூடியதாக கல்பிக்க வேண்டும்.

இவ்விதமாக (சக்கிரமில்லாமல் அமைக்கப்பட்டது.) ஸாதாரண சீர்ஷமாகும்.

லிங்கத்தின் சீர்ஷம், (சிரோவர்த்தநம்) அகலம், உயரம் இவைகளை சொல்லியிருக்கிறபடியே செய்ய வேண்டும். சொல்லாதவிதமாகச் செய்யக்கூடாது. அப்படிச் சொல்லாத விதமாகச் செய்தால், ராஜாவுக்கம், ராஜ்யத்திற்கும் பயமுண்டாகும். ஆகையால், ஸகல முயற்சியுடனும், கூறியுள்ள முறையுடனேயே செய்யவேண்டும். இவ்விதமாக லிங்க லக்ஷணம் கூறப்பட்டது.







# லிங்கத்திற்கு பீடலக்ஷணம் (ஆவுடையார்)

நாகராதி லிங்கங்களின் பீடலக்ஷணத்தைக் கூறப்படு கிறது. சிலையிலான லிங்கத்திற்கு பீடமானது சிலையிலேயே இருக்க வேண்டும். மரத்தினால் செய்யப்பட்ட லிங்கத்திற்கு மரத்தாலேயே பீடம் இருக்க வேண்டும். ரத்னநிர்மிதமான லிங்கத்திற்கு பீடமானது ரத்தினத்தினால் ஆவது லோகத்தினால் ஆவது இருக்க வேண்டும். லிங்கத்தின் பீடமானது லிங்கத்தின் உயரத்திற்கு சமமான அகலமுடையதாக இருப்பது உத்தமம் பீடத்தின் அகலமானது பூஜாம்ச உயரத்திற்கு சமமாக இருப்பது அதமம் இவ்விரண்டும் இடையே மத்ய அளவை 8 பாகம் செய்து பீட விஸ்த்தாரம் 9 விதம்.

பீடத்தின் அகலத்தில் 3ல் இரண்டு பாகம் உயரம் உத்தமம் 1/2 பங்கு உயரம் அதமம் இவைகளின் மத்யத்தை 8 பாகங்கள் செய்து பீடத்தின் உயரம் 9 விதமாகும்.

பீட உயரத்தை 9 பாகங்களாகச் செய்ய அவைகளில் 2 பங்குகள் தலாம்சமாகும் அல்லது 1 பங்கு தலாம்சமாகும். இது பூமியினால் பதிய வேண்டும் இது திராவிட லிங்கபீடமாகும். பீடத்தின் அகரமானது பூஜாமம்சகத்தளவுக்கு சமம் உத்தமம். அவ்வளவில் 16ல் 12 பாகம் அதமம் இவைகளின் மத்ய அளவை 8 பாகம் செய்து பீடவிஸ்தாரம் 9 விதமாகும்.

பீடமானது விஷ்ணு பாகத்திற்கு சமமான உயரம் இது அதமமாகும் கால்பங்கு கூடுதலாக இருந்தால் உத்தமம் இரண் டுக்கும் நடுவில் உள்ளதை 8 பாகங்களாகச் செய்து 9 விதம் பீட அகலம் இது வேஸர மலிங்க பீட அகலமாகும் அல்லது லிங்கத் தின் சுற்றளவு கொண்டது பீடத்தின் அகலமாகும் அல்லது அந்த சுற்றளவை சதுரம் செய்து கர்ண அளவால் 2 பங்கு, 2 1/4 பங்கு, 2 1/2 பங்கு, 3 பங்கு கொண்டது பீட அகலமாகும்.

## லிங்கத்திற்கு பீடலக்ஷணம்



கெற்பக்ருஹ அகலத்தில் சரிபாதி அல்லது 4ல் 1 பீட விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளது உயரமானது விஷ்ணு பாகத் திற்கு சமமாக இருப்பது இவ்விதமாக நாகராதி லிங்கங்களின் (பிண்டிகா) பீடலக்ஷணம் கூறப்படுகிறது. இந்த அளவெல் லாம் பீடத்தின் உபான அளவாகும் அதன் கண்டம் 8, 9, 10ல் 1 பாகம் குறைவாக இருக்க வேண்டும்.



லிங்கங்களின் பீடமானது கோமுகத்துடனிருக்க வேண்டு மென்று விதிக்கப்பட்டிருக்கிறது. ஸகல மூர்த்திகளின் பீட மானது, விசேஷித்து கோமுகமில்லாதது, என்று கூறப்பட்டிருக் கிறது.

லிங்கங்களின் பீடமானது, ஸ்மாச்ர (ஸமசதுரம்) மாகவா வது, ஸமவிருத்தமாகவாவது இருக்கவேண்டும் என்று வீதிக்கப் பட்டிருக்கிறது. பிரதிமைகளின் பீடமானது, சதுரச்ரமாகவும், விருத்தமாக (வட்டவடிவமாக) இல்லாமலும் இருக்கவேண்டு மென்று விதிக்கப்பட்டிருக்கிறது.

பத்மபீடம், பத்ரபீடம், வேதிகை, பரிமண்டலம் என்று பீடம் நான்கு (4) விதமாகும். இவைகள் பீடத்தின் அலங்கார பேதங்களாம்.

பீடத்தின் உயரத்தை 16 பாகங்களாகச் செய்து கொள்ள வேண்டும். அந்த 16 பாகங்களில் உபாநம் 2 பாகம் அதப் பத்மம் (கீழேயுள்ள பத்மம்) 5 பாகம், கண்டம் 2 பாகம், ஊர்த்வ பத்மம் 4 பாகம், பட்டிகை 2 பாகம், க்ருதவாரி 1 பாகம். ஆக 2 + 5 + 2 + 4 + 2 + 1 = 16 பாகங்கள் கொண்டது பீடமாகும். பத்ம மானது 16 தளங்களுடையதாக இருக்க வேண்டும்.

பீடத்தின் அகலத்தில் 3ல் 1 பாகம், அதன் கோமுகத்தின் நீளம் இருக்க வேண்டும். அதன் அடிப்பக்கத்தின் அகலமானது, அதன் நீளத்திற்கு ஸமமாக இருக்கவேண்டும். அதன் நுனியின் அகலமானது, அடியின் அகலத்தில் (அதாவது, அதன் நீளத்தில்) 3ல் 1 பங்கு இருக்க வேண்டும். அது அடியிலிருந்து, முறையே, நுனிவரையில் சிறுத்திருக்க வேண்டும். அந்த கோமுகத்தின்





அகலத்தில் 3/4 பங்கு, 1/2 பங்கு அல்லது 3ல் 1 பங்கு, ஜல தாரை இருக்கவேண்டும். அகலத்தில் 3ல் 1 பாகம் ஜலதாரை யின் அகலம் இருக்கவேண்டும். (இதை, பொது விதியாகக் கொள்ள வேண்டும்.)

ஜலதாரையின் தாழமானது, பட்டிகையின் (அகலத்தில்) 1/2 பங்காவது, அதற்கு ஸமமாகவாவது இருக்க வேண்டும். உபாநம்மம முதலிய அங்க அமைப்புகளை தக்கஅளவுடன் அழகாக அமைக்க வேண்டும் அல்லது அதிஷ்டாநத்திற்குக் கூறியுள்ளபடி, அளவுடனமைக்க வேண்டும். இவ்விதமாக பத்ம பீட லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது.

இனி பத்ரபீடத்தைக் கூறுகிறேன். பீடத்தின் உயரத்தை 16 பாகங்களாகச் செய்ய வேண்டும். அவைகளில் உபாநம் 1 பாகம், ஜகதீ 4 பாகம், குமுதம் 3 பாகம், பட்டிகை 1 பாகம், கர்ணம் அல்லது கண்டம் 3 பாகம், கம்பம் 1 பாகம், பட்டிகை 1 பாகம், கிருதவாரி 1 (2) பாகம் இவ்விதமாக பாகங்களைக் கொண்டது பத்ரபீடமாமகும்.

பீடத்தின் உயரத்தை 16 பாகங்களாகச் செய்து கொள்ள வேண்டும். அவைகளில் பாதுகத்தின் உயரம் 2 பாகம், ஜகதீ 3 பாகம், குமுதம் 3 பாகம், கம்பம் (பட்டம்) 1 பாகம், கண்டம் 3 (2) பாகம், கம்பம் 1 பாகம் பட்டிகை 3 பாகம், கிருதவாரி 1 பாகம் ஆகக் கூடுதல் 2 + 3 + 3 + 2 +1 + 3 + 1 = 16 பாகங் களாம். இவ்விதம் பத்திரபீடம் கூறப்பட்டிருக்கிறது.

இனி வேதிபத்திர பீடத்தைக் கூறுகிறேன். பீடத்தின் உயரத்தை 13 (15) பங்குகளாகச் செய்துகொள்ளவேண்டும். அவைகளில் பாதுகம் 3 பாகம், அதற்கு மேலே பத்மம் 3 பாகம், கம்பம் 1 பாகம், முறுமுறையும் கம்பம் 2 பாகம், ஊர்துவ கம்பம் 1 பாகம், அதற்குமேலே பத்மம் 2 பாகம், பட்டம் 2 பாகம், கிருதவாரி 1 பாகம் ஆகக் கூடுதல் 3 + 3 + 1 + 2 + 1 + 2 + 2 + 1 = 15 பங்குகளாம் இவ்விதம் அம்சங்களாலே கல்பிக்க வேண்டும்.



பீடோதயத்தை 8 பாகங்களாகச் செய்துகொள்ள வேண் டும். அவைகளில், உபாநம் 1 பாகம், கிருதவாரி 1 பாகம், இது நீங்கிய பாகமானது வேதியின் குணத்திற்கு (அழகுக்கு) ஏற்றதாகக் கல்பித்துக் கொள்ளவேண்டும். இவ்விதமாக வேதிகா பீடமானது கூறப்பட்டிருக்கிறது. அதுவே 2 அல்லது 1 பாகம் பட்டிடைகயுடையதுமாகும். இவ்விதமாக வேதிகா பீடத்தை 3விதமாகவும் கல்பித்துக் கொள்ளுவதாகும்.

சதுரச்பீடம், ஜயத்தையும், யோநிபீடம் ஸந்ததியையும், தநுஸ்பீடம் சாந்தியையும், திரிகோணபீடம் சத்துருநாசத்தை யும், விருத்தபீடம் அபிவிருத்தியையும், பஞ்சாஸ்ரீ பீடம் ஆரோக் யத்தையும், ஸ்ந்தோஷத்தையும், ஷட்கோண பீடம் (அல்லது அஷ்டாஸ்ரீபீடம்) ரோகநாசத்தையும் கொடுக்கும். பீடாகாரங் களை, கீழே கூறப்பட்டவைகளில் இஷ்டமான வடிவத்தில் செய்துகொள்ளலாம்.

இந்த பீடங்களில் ஏதாவதொருபீடம் பின்னப்பட்டிருந் தால், அதை புதுப்பிக்கும்பொழுது, அது முன்பு எவ்விதமாக இருந்ததோ அவ்விதமாகவே புதுப்பிக்க வேண்டும். இவ்வித மாக பல முறை செய்யலாம். ஆனால் புதுப்பிக்கும் பொழுது, முன் இருந்தத்தைப் போலல்லாமல் வேறுவிதமாகச் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் கர்த்தாவுக்கு நாச முண்டாகும். ஆகையால் முழு கவனத்துடன் பீடத்தை முன்பு இருந்தது போலவே செய்ய வேண்டும்.







# வாஸ்த்து

தேவர்களும் மனிதர்களும் எந்த எந்த இடங்களில் வசிக்கிறார்களோ அந்த அந்த இடங்கள் வாஸ்த்து எனப்படுகின்றன என்று வாஸ்த்து சாஸ்த்திரமறிந்தவர்கள் கூறுகிறார்கள். அந்த வாஸ்த்துவான பூமி, பிரசாதம், யானம், சயனம் என நான்கு விதமாகும்.

அவைகளுள் பிராசாதம் முதலியவற்றிற்கு ஆதாரமாக இருப்பதால் பூமியானது முக்யமான 'வஸ்த்து'' வாகும். பிராசாதம் முதலிய வாஸ்த்துக்கள் யாவும் வஸ்த்துக்களே யாதலா லும் முக்கிய வஸ்துவாகிய பூமியை ஆதாரமாகக் கொண்டு பூமியில் அமைகின்றவைகளாதலாலும் அவைகளும் வஸ்த்துக்களே யாகும் என்று வாஸ்த்து அறிந்த முன்னோர்கள் கூறு கிறார்கள். அந்த பூமியை பல விதங்களில் சோதனை செய்து நல்ல பூமியை நிலத்தை நல்லகாரியங்களுக்கு உபயோகப்படுத்த வேண்டும் இவை ''பூபரிக்ஷா'' என்று விசேசமாக சொல்லப் பட்டுள்ளது.

இருப்பினும் - சுருக்கமாக சில விசயங்கள் கீழே குறிப்பிடுகிறேன்.

பூமியை பூஜை செய்து பூமியில் வசிக்கக்கூடிய பூதங்களும் தேவதைகளும் ராக்ஷஸர்களும் இந்த பூமியில் இருந்து விலகி வேறு வாஸஸ்த்தலங்களுக்கு செல்ல வேண்டும். இந்த பூமியை நான் எடுத்துக் கொள்ளப் போகிறேன் என்ற மந்திரங்களைச் சொல்லி பூபரிஹரம் செய்யவேண்டும். பிறகு அந்த பூமியை உழுது கோமயம் பசுவின் சானம் கலந்த சகல விதமான விதைகளையும் அந்த பூமியில் விதைக்க வேண்டும். அந்த விதைகள் முளைத்து பக்குமவடைந்தும் பலங்களுடனும் இருப்பதைப் பார்த்து அந்த பூமியில் காளைகளுடனும் கன்றுகளுடனும் கூடிய பசுமாடுகளை வஸிக்கும் படிசெய்ய வேணும். ஏன் என்றால் பசுக்களினாலே ஸஞ்சரிக்கப்பட்டு அவைகளின் காலடிகள் பட்டதும் அவைகளினாலே முகர்ந்து பார்க்கப்



பட்டதுமான பூமியானது பரம பவித்ரமாகி பூஜிக்கத் தக்க தாகிறது. ஸந்தோஷம் அடைந்த காலைகளின் சப்தங்களினாலே அந்த பூமியில் இருந்த தோஷங்கள் யாவும் அலம்பப்பட்டு விடுகின்றன.

கன்றுகளின் வாயில் இருந்து சிந்திய நுரைகளினாலேயம் பசுக்களின் பால்பெருக்குகளினாலேயும் அந்த பூமியானது சுத்தம் செய்யப்பட்டதாகிறது. (எப்படி வீட்டில் சானம் மெழுகி சுத்தம் செய்த உடன் வீடு சுத்தம் ஆகிறதோ அவ்விதமே இந்த பூமியும் (இடமும்) சுத்தமாகிறது என்று பொருள்.)

பசுக்களின் மூத்திரத்தினாலே நனைந்தும் அவைகளின் சானத்தினாலே மெழுகப்பட்டும் அவைகளின் அசைவினாலே மனம் பெற்றும் விளங்குகின்ற அந்த பூமியானது அவை களின் குளம்படிகளினாலே காப்புக்கட்டப்பட்டதாகிறது. அந்த பூமியானது பசுவின் மனத்துடன் கூடியதாகிறது. பிறகு புண்ய தீர்த்தங்களை தெளித்து அந்த பூமியானது சகலவிதமான சுபங் களையும் தரக்கூடியதாகிறது.



பிறகு பூமியின் மத்தியில் ஓரிடத்தில் 1 முழம் (அதாவது 2 -3/4 அடி) அகலம் ஒரு முழம் ஆழம் தோண்டி அதில் இருந்த மண்ணை எடுத்துவிட வேண்டும். பிறகு இரவின் ஆரம்ப காலத் தில் அந்தக்குழியை சந்தனம், புஷ்பம், அக்ஷதை முதலியவை கொண்டு பூஜை செய்து அக்குழியில் தண்ணீரை முழுதும் நிரம்பும்படியாக ஊற்றி வைக்கவேண்டும். பிறகு தர்பைகளை பக்கத்தில் பரப்பி அதன்மீது ஸ்தபதியும் பக்கத்தில் வீடு, கோயில் முதலிய கட்டக்கூடிய எஜமான் இருவரும் நித்திரை செய்யவேண்டும்.

இது மந்திரம் - ஹே பூமியே நீ இந்த பூமியில் உத்தமமான வீர்யத்தை அடைந்து தன, தான்யங்களுடன் மேலும் மேலும் விருத்தியடைய வேண்டும். உன்னை வணங்குகிறேன். மங்களங் களையளிப்பாயாக என்று சொல்லி உபவாஸமாக இரவு படுத் திருக்க வேண்டும்.







மறுநாள் காலையில் ஸ்தபதியானவன் அந்தக் குழியை பரீக்ஷித்துப்பார்க்க வேண்டும். அந்த பள்ளத்தில் விட்ட தண்ணீரானது முழுமையும் சுண்டிப் போகாமல் மீதியிருந்தால் அந்தப் பூமியானது சகலவிதமான செல்வங்களையும் அளிக்கக் கூடியதாகும். ஈரநைப்புமட்டும் உடையதாக இருந்தால் அது சுமாரான பூமியாகும். ஈரநைப்பு கூட இல்லாமல் இருந்தால் அந்த பூமியானது சரியில்லை என்றும் நிர்ணயம் செய்ய வேண்டும் முதலில்சொன்ன பூமியிலேயே நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும்.

குழியை தோண்டி எடுத்த மண்ணை மீண்டும் அந்தக் குழியிலேயே போட்டால் அந்தக்குழியானது அந்த மண்ணினால் நிரம்பியிருந்தால் மத்யம பூமியாகும். குழி நிரைந்து மீதி மண் இருந்தால் அந்த பூமியானது உத்தமபூமியாகும். குழி நிரம்பாமல் இருந்தால் அதம பூமியாகும் இவ்விதம் பரிக்ஷித்து பூமியை நல்ல பூமியாக நிர்ணயம் செய்யவேண்டும். மற்றும் அந்தக்குழியில் தண்ணீர் விட்டால் தண்ணீர் பிரதக்ஷிணமாக (வலமாக) சுழன்றால் அந்த பூமி மிகச் சிறந்த பூமியாகும் என முன்னோர்களால் சொல்லப்பட்டுள்ளது.

ஸ்தபதி மற்றும் சூத்ரக்கிராஹி, வர்த்தகி, தக்ஷகன் என்ற நான்கு விதமாக ஆகிறார்கள்.



# ஸ்தபதி



ஸ்தபதி நாம் சதுர்வேத தசகர்மண என்று கூறப்படுகிறது.

ஸ்தபதியானவர் பிரசித்தமான தேசத்திலே பிறந்தவராகவும், விரும்பத்தக்க சுபலக்ஷணங்களுடையவரும் சகல சாஸ்திரங்களையும் கற்றறிந்தவரும் அங்கங்கள் கூடுதலாகவோ குறைவாகவோ இல்லாதவரும் தார்மீகமானவரும் தயை உள்ளவரும் பொறாமை இல்லாதவரும், அஸூயை இல்லாதவரும், சோம்பல் இல்லாதவரும் குலப்பெருமையுடையவரும் கணிதமறிந்தவரும் புராணங்களை அறிந்தவரும் உண்மை பேசுபவரும் இந்திரயங்களை ஜயித்தவரும் சித்திரக் கலைகளை அறிந்தவரும் ரோகமில்லாதவரும் தவறுதல் இல்லாதவரும், துக்கம் இல்லாதவரும் நல்லமனதுடையவரும் நிலைத்த மனதுடையவரும் வாஸ்த்து வித்யையாகிய சமுத்திரத்தின் கரைகண்டவருமான ஸ்தபதி விஸ்வகர்ம குலத்தில் உதித்தவரும் ஆகிய இவரே தேவாலயம் வேதாமூர்த்திகளையும் நிர்மாணம் செய்து ஸ்தாபிப்பதற்கு தகுதியுற்றவனாவர்.

## சூத்ரக்கிராஹி

ஸ்தபதியின் சீடன் அல்லது மகனாக இருப்பார். ஸ்தபதியின் உத்தரவை அனுசரித்து நடப்பவனும் சகல காரியங்களையும் அறிந்தவனும் சுத்ரபாதம் கால்புறவாய் களத்திகள் உயரங்கள் முதலிய அளவுகள் வைத்துக் கட்டக்கூடியவனும் சகல வர்கங்களையும் செய்யத் தெரிந்தவனுமாகியவர். சூத்திரக் கிராஹி எனப்படுவார். அளவுகோடு வரைந்து செய்விக்கக் கூடியவர்.

## தக்ஷகன்

சிறிதாகவேோ பெரியதாகவேோ இருக்கின்ற கருங்கல் மரம் செங்கல் இவைகளை சூத்ரக்கிராஹியின் அபிப்ராயத்தை அனுசரித்து செதுக்குகிறானோ அவன் தக்ஷகன் எனப்படுவான்.







## வர்த்தகி

மண்ணிலாகக் கூடிய காரியங்களை அறிந்தவனும் நல்ல குணங்களையுடையவரும் எதையும் செய்யக்கூடியவனும் எல்லாக் காரியங்களையும் தன் அபிப்பிராயப்படி செய்கின்றவனும் உடனே செதுக்கக்கூடியவனும் மேன் மேலும் யுக்தியினால் விருத்தி செய்கின்றவனும் எப்பொழுதுமே சூத்ரக் கராஹியை அனுசரித்து இருப்பவனும் வர்த்தகி என்று பெயர்.

ஆகையால் இவர்களில்லாமல் யாதொரு காரியங்கள் செய்யமுடியாது. ஆகையால் ஸ்தபதி முதலியவர்களை எப்பொழுதும் பெருமையாக பாவிக்க வேண்டும்.



# திசை நிர்ணயம் செய்தல் சங்குஸ்தாபனம்



இக்காலங்களில் காம்பஸ் போன்றவைகளை வைத்து திசை அதாவது வடக்கு, கிழக்கு, மேற்கு என அறிகிறோம்.

அக்காலத்தில் சங்கு என்ற மரத்தினால் செய்ததை வைத்து திசை அறிந்தார்கள் அது எப்படி என்பதைக் காண்போம்.

உத்தராயணம் ஆறு மாதங்களால் யாதொரு மாதத்தில் சுக்லபக்ஷத்தில், சுப நக்ஷத்திரத்தில் சுப வாரத்தில் சூரிய மண்டலம் நிர்மலமாக இருக்கும்பொழுது தனக்காக கிரஹிக்கப்பட்டிருக்கிற வாஸ்த்துவின் மத்தியில் பூமியை சமப்படுத்தி, ஒரு கோல் சதுரத்திற்கு அந்த பூமியில் நடுவில் சங்குவை சமப்படுத்தி, ஒரு கோல் சதுரத்திற்கு அந்த பூமியில் நடுவில் சங்குவை ஸ்தாபனம் செய்யவேண்டும். சங்குவின் உயரம் 1 முழமாகும் அதாவது 2 -3/4 அடியாகும். கீழ் அகலம் ஐந்து கிஷ்து அங்குலமாகும். அதாவது 6 -7/8 அங்குலமாகும். மேல் நுனி கிஷ்கு 1 அங்குலமாகும் அதாவது 1 -3/8 அங்குலமாகும். அது வட்ட வடிவமாகவும் வடு இல்லாமலும் இருப்பது நல்லது. 18 கிஷ்கு அங்குலம் உள்ளது மத்யம் சங்கு உயரம் அதாவது இரண்டு அடியும் முக்கால் அங்குலமும் ஆகும். 12 கிஷ்கு அங்குலம் உயரம் உள்ளது அதம சங்கு உயரமாகும். அதாவது ஒரு அடி நாலரை அங்குலம். அதன் அடியானது உயரத்திற்கு பருமனுடையதாக இருக்க வேண்டும். 9 அங்குல உயரம் உள்ளது அதமாதம மாகும். அதாவது ஒரு அடியும் காலே அரைக்கால் அங்குல் உயரமாகும். அதற்கு தகுந்தார் போல் பருமன் வைத்துக் கொள்ளலாம். இந்த மாதிரி நான்குவிதம் சங்கு உயரம் கொள்ள வேணும் என்று கூறப்பட்டிருக்கிறது.





# சங்கு செய்வதற்கு ஏற்ற மரங்கள்

கஜதந்தம், சந்தனம், கருங்காலி மற்றும் வெண் கருங்காலி

இந்த மரங்கள் நீங்கிய ஸாரமமானம (அழுத்தமான) மரங்களினாலே, அதன் அக்கிரபாகத்தைச் செய்ய வேண்டும். அது சித்திரங்களுடையதாகவும், வட்டவடிவமாகவும் (குடை போலவும்) இருக்க வேண்டும்.

இவ்விதமாக சங்குவை செய்து, தனக்காகக் கொள்ளப் பட்டபூமியில், அந்த சங்குவை, தினாதியில் (காலை வேளை யில்) ஸ்தாபிக்கவேண்டும்.

(சங்குஸ்தாபனம் செய்யப்படும் பூமியில், சங்குவை ஸ்தாபனம் செய்வதற்குமுன்,) அந்த பூமியின் நடுவில், சங்கு வின் அளவைப்போல இரண்டு பங்கு அகலமுள்ள மண்ட லத்தைக் கல்பிக்க வேண்டும். பூர்வாஹணத்திலும், அபராஹ் ணத்திலும் (காலையிலும் மாலையிலும்) சங்குவின் நிழலானது அந்த மண்டலத்தைத் தொடும்பொழுது, இரண்டு பக்கங்களி லும் இரண்டு பிந்துக்களை ( பிந்து - புள்ளி) கல்பிக்க வேண்டும். அந்த இரண்டு பிந்துக்களையும் ஒன்றுசேர்த்து ஸீத்திரத்தைக் கல்பிக்க வேண்டும் இது கிழக்கு மேற்குத் திக்குகளாகும்.

இந்த இரண்டு பிந்துக்களின் மத்தியில் சுழன்று வரக் கூடிய, முகம்-புச்சங்களையுடைய மீன் வடிவத்தைக் கல்பித்து, அதை தெற்கு வடக்காக வைத்து, தெற்கு-வடக்கு - இரண்டு பக்கங் களிலும் இரு புள்ளிகளை வைத்து, அவ்விரண்டு புள்ளிகளை யும் ஸூத்திரங்களைக் கல்பித்துக் கொள்ளவேண்டும்.

பிறகு, புத்திமானான ஸ்தபதியானவன், மேற்கிலிருந்து வடக்குவரையிலும், கிழக்கிலிருந்து வடக்குவரையிலும், பக்க வாட்டில் ஸூத்திரங்களைக் கல்பித்துக் கொள்ள வேண்டும்.



கன்னி-விருபஷம்-இரண்டு ராசிகளிலும் அபச்சாயை கிடையாது. மே+ம்-மிதுனம்-ஸிம்மம்-துலாம் இந்த நான்கு ராசிகளிலும் இரண்டங்குலம் தள்ளவேண்டும். கடகம்- விருச்சிகம் - மீனம் இந்த மூன்று ராசிகளிலும் நான்கு அங்குலம் சோதிக்க வேண்டும். தநுஸ்-கும்பம் இந்த இரண்டு ராசிகளிலும் ஆறு அங்குலம் சோதிக்க வேண்டும். மகர ராசியில் எட்டு அங்குலம் சோதிக்க வேண்டும். (கீழே கூறியுள்ளபடி சங்குவின் நிழலில், அந்தந்த ராசிகளில் அங்குலங்களைக் குறைக்க வேண்டு மென்பது பொருள்).

சாயையின் தென்பக்கத்திலும் வடப்பக்கத்திலும், கீழே கூறிய கணக்குடன் ஒதுக்கி (உத்தராயணமானால், வடக்கிலும் தக்ஷிணாயனமானால் தெற்கிலும் ஒதுக்கி) ஸுத்திரத்தைக் கல்பிக்க வேண்டும்.

ரஜ்ஜீவானது 68 அங்குலம் நீளமுள்ளதாக இருக்க வேண்டும். அந்த ரஜ்ஜீவானது, பனைநாறு-நாறினாலாவது, தருப்பையிலாவது, ஆலவிழுதினாலாவது மறையுரியினாலா வது விரல் நுனியின் பருமனுள்ளதாக இருக்கவேண்டும். முப்பிரியுள்ளதாகவும், முடிச்சு இல்லாமலிருக்க வேண்டும்.



வெண்கருங்காலி - கருங்காலி - இலுப்பை - பாலை இந்த மரங்கள், பூமியினுள் அடித்துப் புதைக்க வேண்டிய சங்கு வுக்குக் கூறப்பட்ட மரங்களாகும். (மரங்கள் வைரம் பாய்ந்த தாக இருக்க வேண்டுமென்று கொள்ள வேண்டும்.)

அந்த சங்குவானது, பதினோரு அங்குலம் முதல் இருபத்தொரு அங்குலம் வரையில் நீளமுள்ளதாக இருக்க வேண்டும். அதன் அடியானது, ஒரு முஷ்டியளவு ( பிடி அளவு) கனமுள்ளதாகவும், நுனியானது, ஊசியைப் போலவுமிருக்க வேண்டும்.

மேதாவியான ஸ்தபதியானவன், கிழக்கு முகமாகவோ வடக்கு முகமாகவோ உட்கார்ந்து கொண்டு சங்குவை (சங்குவின் நுனியை பூமியிலூன்றி வைத்து) இடது கையினால் பிடித்துக்





கொண்டு, வலது கையினால் சுத்தியை பிடித்து, வைத்துக் கொண்டு, சங்கு ஸ்தாபகனுடைய அனுமதியுடன், அந்த சங்குவை எட்டு தடவை அடிக்க வேண்டும்.

யாதொரு ஸுத்திரமானது அளவுகளினால் நிச்சயிக்கப் பட்டதோ, அது, பிரமாண ஸுத்திர மெனப்படும் அதைச் சுற்றிலும் வெளிப்பக்கத்தில் கல்பிக்கப்படும் ஸுத்திரமானது, பாய்ந்த ஸுத்திரமாகும் (பர்யந்தம் - பக்கம்). கர்ப்ப ஸுத்திரம் முதலியது, விந்யாஸ ஸுத்திரமாகும். இது தேவபதத்திற்கு (தேவாலயத் திற்குக்) கூறப்பட்டதாகும்.

பதவிந்யாஸ ஸுத்திரமானது வின்யாஸ ஸுத்திரமாகும். (வின்யாஸ ஸுத்திரம் எனப்படும்.)

வீடுகளுக்குத் தென்பக்கத்தில் கர்பமாகும் (கர்ப ஸ்தானம்) அதன் பக்கத்தில் ஸுத்திர பாதனம் செய்ய வேண்டும். அந்த ஸுத்திரத்திலிருந்து, சங்குவின் அளவுக்கு நீக்கி சங்குவை நட வேண்டும். (அடிக்க வேண்டும்.) அதில் வெளியில் போவ தற்கு வாசல் படியை கல்பிக்க வேண்டும்.

நகரம் -கிராமம் -துர்கம் இவைகளில், வாயு திக்கு முதல் ரஜ்ஜீபாதனம் செய்யவேண்டும். தெற்கு முதல் வடக்கு வரை யில், கிழக்கு மேற்கில் செல்லும் ஸுத்திரமாகும். மேற்கு திக்கு முதல் கிழக்கு திக்கு வரையில் வடக்காக மற்றொரு ஸுத்தி ரத்தை விடவேண்டும். (கல்பிக்க வேண்டும்) பிரம்ஹஸ்தானத் திற்கு கிழக்கில் உள்ள அந்த ஸுத்திரத்திற்கு திரி ஸுத்திரம் என்று பெயர்.

அதற்கு மேற்கிலுள்ளது, தனமாகும். (தனஸ்தானமாகும்) அதற்கு தெற்கில் தானியஸ்தானமாகும். பிரம்ஹஸ்தானத்திற்கு வடபக்கத்திலுள்ளது ஸுகம் (ஸுகஸ்தானம்) என்று கூறப்படு கிறது.

ஸுகஸ்தானத்தை அளவிடுகின்ற ஸுத்திரத்தின் பிரமா ணத்தைக் கூறுகிறேன்.



ஸூகபிரமான ஸூத்திரமானது, சுற்றிலும் ஒரு முழம்-இரண்டு முழம் - மூன்று முழம் அதிகமாகும்.

விமானமானது உறுதியாக இருப்பதற்காக மண்டபத்தின் அகலம் எவ்வளவோ, அவ்வளது புதைக்க வேண்டும். (அஸ்திவாரம் இருக்க வேண்டும்.)

மேஷமாதத்தில் முதலாவது 10 நாட்களில் 2 அங்குலமும், மத்தியிலுள்ள 10 நாட்களில் 1 அங்குலமும், ஒதுக்கிச் சேர்க்க வேண்டும். (ஸூத்திரத்தை கல்பிக்க வேண்டும்.) மூன்றாவது 10 நாட்களுக்கு ஒதுக்கம் கிடையாது.

விருஷப மாதத்தில் ஒவ்வொரு 10 நாட்களிலும், 0,12, அங்குலம் ஒதுக்க வேண்டும்.

ஆனி மாதத்தில் முறையே 2,3,4 அங்குலங்களும்
ஆடி மாதத்தில் முறையே 4,3,2 அங்குலங்களும்
ஆவணி மாதத்தில் முறையே 2,10, அங்குலங்களும்
புரட்டாசி மாதத்தில் முறையே 0,1,2 அங்குலங்களும்
ஐப்பசி மாதத்தில் முறையே 2,3,4 அங்குலங்களும்
கார்த்திகை மாதத்தில் முறையே 4,5,6 அங்குலங்களும்
மார்கழி மாதத்தில் முறையே 6,7,8 அங்குலங்களும்
தை மாதத்தில் முறையே 8,7,6 அங்குலங்களும்
மாசி மாதத்தில் முறையே 4,3,2 அங்குலங்களும்
பங்குனி மாதத்தில் முறையே 4, 3, 2 அங்குலங்களும் ஒதுக்கி ஸூத்திரத்தை கல்பிக்க வேண்டும்.







# வைஷ்ணவம்

வைசானசத்யான முக்தாவளியில் கூறப்பட்ட த்ருவ பேரங் (மூர்த்தி)களின் பேதம்.

ஸ்தானகம் அசீநம் சயாநம் என்று த்ருவ பேரம் மூன்று வகையாம் அவை ஒவ்வொன்றும் யோகம், போகம், வீரம் ஆபிசாரிகம் என்று நான்கு நான்கு பிரிவுகளாக 12 வகை த்ருவ பேரங்கள் (மூர்த்திகள்) உள்ளனவாம்.

யோகபலத்தை விரும்பினோர் யோகமூர்த்தியையும் போகபலத்தைக் கொண்டவர்கள் போகமூர்த்தியையும் பகை வரை வெல்லும் விருப்பங் கொண்டோர் அபிசாரிக மூர்த்தியையும் செய்தல் வேண்டும் (என்று கூறப்பட்டிருக்கிறது.)

## யோகஸ்தானக மூர்த்தி

### தியானம்

நீல மேக சியாமள நிறம் போன்ற (திருமேனியுள்ள) வரும் நான்கு திருக்கரங்களுள்ளவரும் வலது மேற்கரத்தில் சக்ரமும் இடது மேற்கரத்தில் சங்கமும் ஏந்தி வலது கீழ்கரமும் அபய முத்தை பொருந்த இடது கீழ்க்கரத்தை இடுப்பினில் அமைத்துக் கொண்டவரும். சகல அணிகளையும் பூண்டு விளங்கும் சரீர முள்ளவரும் மஞ்சள் ஆடை உடுத்தியவரும். யோக நிலையில் நின்றருளுங்கருணைக் கடலாகிய விஷ்ணு (ஸ்தானக) மூர்த்தியை தியானிக்கிறேன். (ஸ்தானகம் - நேராக நிற்கின்ற நிலை)

## போகஸ்தாநகமூர்த்தி

### தியானம்

(ஸ்ரீதேவி பூதேவியுடன் உள்ளது போகமூர்த்தி என்க)

நான்கு திருக்கரங்களும் கிருஷ்ண வர்ணமும் வலது கீழ்க்கரத்தில் அபயமும் அல்லது வரதமும் இடது கீழ்க்கரத்தில்



சிம்மகர்ணம் அல்லது இடுப்பில் தழுவுகரமும் மேற்கரமிரண்டிலும் சக்ரம் சங்கம் தரித்தும் பொன்மயமான ஆபரணங்கள் பூண்டமேனியுடையவரும், பத்மபீடத்தில் இரு திருவடிகளை சமமாக அமைத்து நின்றவருமாகிய தேவனை உள்ளத்தில் தொழுகிறேன்.

## தியானம்

மற்றொரு விதம்

நான்கு திருக்கரங்களுள்ளவரும் சக்ரம் சங்கம் என்பன வலது மேற்கரம் இது மேற்கரமிரண்டிலும் ஏந்தி வரதம் அபாயம் என்ற முத்தை இரண்டை வலது கீழ்க்கரத்திலும் இடுப்பில் தழுவு கனக சிம்மகர்ண முத்தரை இரண்டை இடது கீழ்க்கரத்திலும் அமைத்துச் சமமான பத்மபீடத்தில் நிற்பவரும் ஸ்வர்ணத்தாலக்கப்பேற்ற அணிகளை அழகாக நீலமேனியில் அணிந்துகொண்டவருமாகிய தேவன் (ஸ்ரீ ஹரி) (என்) உள்ளத்தில் வசிக்கட்டும்.

| | | |
|---|---|---|
| வலது கீழ்க்கரம் | - | அபயம் |
| இடது கீழ்க்கரம் | - | இடுப்பில் தழுவுகை சிம்மகர்ணம் (கடகம் வரதம்) |
| வலது கீழ்க்கரம் | - | வரதம் |
| இடது கீழ்க்கரம் | - | இடுப்பில் தழுவுகை சிம்மகர்ணம் (கடகம்) |

போகஸ்த்தானமூர்த்திக்கு வலது பார்சுவத்தில் நின்றருளும்.

## லக்ஷ்மி தியானம்

பவழநிறம் போன்ற னோகரமான மேனியுள்ளவளும் இடது திருக்கரத்தில் கமலம் ஏந்தி வலது கரத்தை வீசித் தொங்கி அமைத்தும் இடது திருவடியைக் கிஞ்சிதமாக ஆக்கிவலது திருவடியை நன்றாய் ஊன்றி நின்றருள்பவளும், விஷ்ணு மூர்த்திக்கு தென்பால் நின்று பெருமாளை சிறிது திருக்கண் ணோக்கச் செய்யும் மஹாலக்ஷ்மியை தியானிக்கிறேன்.







## விஷ்ணுவுக்கு இடதுபார்சுவத்தில் உள்ள பூமிதேவி தியானம்

நீலவண்ணமுள்ள திருமேனியும் வலதுதிருக்கரத்தில் விளங்கும் நீலோத்பலபுஷ்பம் இடதுகரம் வீசத்தொங்க அமைத்தும் ஸ்ரீ ஹரியைத் திருக்கண்ணால் சிறிது நோக்கியும் வலது திருவடியைக் குஞ்சிதமாக வைத்து இடது திருவடியை நன்றாக ஊன்றி (ஸ்ரீ விஷ்ணுவுக்கு இடது பார்சுகவத்தில் நின்றருளுகின்ற ஸ்ரீ பூமிதேவியை (என்) உள்ளத்தில் பூஜிக்கிறேன்.

## ஸ்தானக வீர மூர்த்தித்யானம்

ஸ்ரீ வத்சத்தை அடையாளமாக கொண்ட திருமார்புடையவரும் சென்னிறமுள்ள திருமுகமும் திருக்கரங்களும் திருப்பாதங்களும் திருக்கண்களுமுடையராய் நீலமுகில் போன்ற ஒளியுடன் விளங்குபவரும் சங்கு, சக்ரம் என்பனவற்றை மேற்கரங்களிலேந்தி வலது கீழ்க்கரம் வரதமுத்ரையும் இடது கீழ்க்கரம் இடுப்பிலும் அமைத்துக்கொண்டு மலர்ந்த கமலத்தின் மீது நின்றருள்பவரும் பொன்னாலான மகுடம் தோள் வளை ஹாரம் முதலிய அணிகளைப் பூண்டவரும் கிளிப்பச்சை நிறம் போன்ற ஆடைகளையுடுத்தியவரும் தேவர்களால் புகழப்பட்டவருமாகிய ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியை நாம் துதிப்போம்.

## அபிசார ஸ்த்தாநகமூர்த்தி

மெலிந்தமுகமும் தேகமும் உள்ளவரும் நீலவர்ண ஆடை தரித்தவரும் தமோகுணத்துடன் கூடியவரும் கருப்பும் மஞ்சளும் கலந்த நிறமுள்ள மேனியரும் மேல்நோக்கிய இரு கண்ணுடையவரும் சக்ராயுதத்தை குறுக்காக ஏந்தியவரும் இரு கரம் அல்லது நான்கு கரங்கள் உள்ளவரும் பிரம்மா முதலிய (பரிவார) தேவர்களில் ஒருவருமின்றி தனித்து நிற்க்கப்பட்ட வரும் ஆகிய அபிசாரகஸ்மூர்த்தியை தியானிப்போம்.

அதாவது யோகமூர்த்தி போகமூர்த்தி வீரமூர்த்தி இவர் கள் சகலக்கணங்கள் பொருத்தக் பெருக்குவர் அபிசாரகமூர்த்தி என்பர்.



## ஆஸநயோகமூர்த்தி

சிறிது திறந்த கண்களையுடையவரும் ஜடைகளாலான மகுடத்தை அணிந்தவரும் சங்கம், சக்ரம் என்பவைகளையும் பீதாம்பதரமும், குண்டலமும், தோள்வளைஹாரம் முதலிய ஆபரணங்களும் ஜரிகைகோர்த்த வெண்ணிறமேல் வேஷ்ட்டியும் வெண்பூணுநூலும் தரித்தவரும் வெண்தாம்ரைக் கமலத்தின் மேல் வலது திருவடியை அமர்த்தி கீழே இடது திருவடியை வைத்து ஸ்வத்திகாசனமாக அமர்ந்திருக்கும் யோக (விஷ்ணு) மூர்த்தியைச் சேவிக்கிறேன்.



## ஆஸநபோகமூர்த்தி தியானம்

நீலவண்ணத்திருமேனியரும் நான்கு கரங்களுள்ளவரும் சங்கம் சக்ரம் இரண்டையும் மேற்கரத்தில் பிடித்தவரும் அபயம் அல்லது வரதம் எனும் முத்ரையை வலது கீழ்க்கரத்திலும் இடுப்பில் கழுவினது அல்லது சிம்ம கர்ணம் என்ற முத்ரையை இடது கீழ்க்கரத்திலும் அமைத்துக் கொண்டவரும் சிம்மாசனத்தின் மீது சமமாய் அமர்ந்து வலது திருவடியைத் தொடங்க நீட்டி இடது திருவடியை குஞ்சிதமாக வைத்துக் கொண்டிருக்கும் தோள்வளை மணிவடம் முதலிய பல அணிகள் உடைத்தும் விளங்கும் முகுந்தனைப் போற்றுகிறேன்.

## வலது பார்சுவத்திலமர்ந்தருளும் ஸ்ரீ தேவி தியானம்

இடது கரத்தில் கமலம் தாங்கி வலது கரத்தை வீசி அமைத்து வலது திருவடியை குஞ்சிதமாகவும் இடது திருவடியை ஸிதமாகவும் வைத்து சிம்மாசனத்தின் மீது அமர்ந்தருள் பவளும் உருக்கின் பொன்னை பொற்ற திருமேனியுள்ளவளும் ஞானம் முதலிய ஆறு குணங்களுள்ளவளும் அநேக ஆபரணங்களை அணிந்து விளங்கும் ஸ்ரீதேவி (லக்ஷ்மி தேவி)யை உபாசிக்கிறேன்.

## இடதுபக்கம் அமர்ந்தருளும் பூமிதேவி தியானம்

பத்ரபத்மாஸனத் (பீடத்)தின் மேல் இடது பாதத்தை குஞ்சிதமாகவும் வலது பாதத்தை தொங்கி வீசியும் அமைத்து







வீற்றிருப்பவரும் மேற்கரமிரண்டிலும் சங்கம் சக்ரம் ஏந்தி வலது கீழ்க்கரம் அபயம் இடது கீழ்க்கரம் சிம்மகர்ணம் எனும் முத்திரைகள் கொண்டருள்பவரும் பவழநிறத் திருமேனியுள்ள வரும் நீலவண்ணப் பட்டாடை உடுத்தியவரும் ஆகிய வீர மூர்த்தியாகிய எழுந்தருளப் பெற்ற (நாராயணனை) துதிக் கிறேன்.

## ஸ்ரீ தேவி தியானம்

பூதலத்தில் ஒருகாலை மண்டியிட்டு மற்றொரு முழங் காலை குடிகாசனமாக அமைய வீற்றிருந்து துளசி தலத்தினால் புஷ்பாஞ்சலி சமர்ப்பிக்கும் மலர்விழியாலாகிய (தாயரை) ஸ்ரீதேவியை போற்றுவோம்.

## பூமாதேவி தியானம்

நீலநிறத்திருமேனியுடையவளும் புஷ்பமயஆன அணிந்த வளும் பொன்னாலான பாதசரங்களைப் பூண்டு விளங்கும் திருவடிகளை உடையவளும் வலது முழங்கால் பூமியில் இடது முழங்கால் குடிகாசனமாய் அமையவைத்து நாயரருக்கு அன்புடன் புஷ்பாஞ்சல் வழங்கும் பூமிதேவியை வணங்கு வோம்.

## அபிசாரிக ஆஸனமூர்த்தி

## தியானம்

நீலநிள மேனியுள்ளவரும் வேதிகாசனத்தில் சமதை யாய் வீற்றிருப்பவரும் இருகரத்தை அல்லது நான்கு கரங்களை யுடையவரும் தாமசகுணத்துடன் கூடியவரும் ஆகாசத்தை நோக்கிப் பார்ப்பவரும் தேவிகளின்றித் தனிமையாக உள்ள வரும் வீராசனமூர்த்தயைப் போல் பாதமும் கரமும் ஆயுத மும் (மேற்கரம் இரண்டிலும் சங்கு சக்ரம் வலது கீழ்க்கரத்தில் அபயம் இடது கீழ்க்கரத்தில் சிங்ககர்ணம் எனும் முத்ரையும்) கொண்டவரும் நீல வண்ணப்புத்தாடையணிந்து அழகுசெய்து



கொண்டவருமாகிய அபிசாரிகமூர்த்தியை பகைவரை ஒழித்துக் கட்ட விரும்பித் தியானிக்கிறேன்.



## யோகசயன மூர்த்தி தியானம்

இருதிருக்கரம், நீலவண்ணத் திருமேனி உடையவரும் மஞ்சள் வஸ்த்திரம் உடுத்தியவரும் வலது திருக்கரத்தை தலையனைமேல் நன்றாக வைத்து கிரீட மௌலியை மேலே நிமிர்த்தி இடது திருக்கரத்தின் முழங்கையை வளைத்து இடுப்பில் தழுவப்பெற்று அல்லது இடது துடையின் மேல் முழங்கையை வைத்து நீட்டிவீசி வளைத்து வைத்துக் கொண்டும் சயனத்திருப்பவரும் மந்தமாக திருக்கண்ணை திறந்து நோக்கு பவரும் ஆகிய யோகசயனப் பெருமாள் ரக்ஷிக்கட்டும்.

## மஞ்சவடிவமாய் விளங்கும் அனந்தரின் தியானம்

மூன்று வட்டமாக (சர்ப்ப உடலை) மஞ்சம் (படுக்கை) போல் அமைத்துக் கொண்டும் திருமாலின் திருவடிப்ரதேசத் தில் வாலைவைத்தும் ஸ்ரீ மந்நாராயண மூர்த்தியின் கீரிடத் திற்கு மேல் ஐந்துசிரசை அழகாக (நிமிர்த்தி கெம்விரமாக வளைத்து) மறைத்துக்கொண்டும் மாணிக்கம் முதலிய ரத்னங் களின் ஒளிகளினால் நான்கு திசைகளும் தந்த வரிசைகளும் வெண்மையான உடலும் விளங்க சப்தசாஸ்த்ர (வையாகரண சாஸ்தா) போரகாசிரியராகிய அனந்தரை சிரங்குனிந்து வணங்கு கிறேன்.

## போகாசனமூர்த்தி தியானம்

நீலவண்ணத் திருமேனியும் பார்க்கத்தகுந்த அழகும் புஷ்ட்டியும் ஆகிய வில் போன்று வளைந்த சரீரமும் உள்ளவரும் வலது திருக்கரத்தை கிரீடமகுடம் வரை உயர்த்தி தலையனை மேல்வைத்து இடது கரத்தை தொடைவரை வீசி இடது தொடை யைத் தழுவி வலது பாதத்தை நீட்டி இடது பாதத்தை வளைத்து வைத்து அர்தசயனங் கொண்டருளுகின்ற திருமாலை வணங்கு கிறேன்.



இரண்டு கரம் அல்லது நான்கு கரங்களுடையராயும் அர்தார்த்த சயநங் கொண்டருளும் போகசயன மூர்த்தியின் வடிவத்தை அமைக்க வேண்டுமென்றும் ரிசிமஹரிஷி கூறு கிறார்.

## போகசயனமூர்த்தியின் முகபார்கவத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ தேவி தியானம்

வலது திருப்பாதத்தை மடக்கிவைத்து இடது காலை நீட்டித் தொங்க அமைத்து வலது திருக்கரத்தில் கமலம் பிடித்தும் அல்லது கடக முத்திரையும் விளங்க இடதுகரத்தை இடையில் வைத்து பெருமானின் வலது தோளைத் தழுவி வடக்கு முகமாய் வீற்றிருக்கும் மஹா லக்ஷமீயைத் தியானிப்போம்.

## திருவடி சமீபத்தில் அமர்ந்திருக்கும் ஸ்ரீ தேவி தியானம்

இடது காலை மடக்கி பத்ம பீடத்தில் வைத்து வலது பாதத்தைக் குஞ்சிதமாக்கி வலது திருக்கரத்தில் நீலோத்பல தாங்கி அல்லது கடகமுத்ரையருளி இடது கரத்தை இடுப்பில் தழுவ அமைத்து திருமாளின் திருத்தாளைத் தழுவித் தெற்கு முகமாயமர்ந்தருளும் பூமிதேவியை சேவிப்போம்.

## வீரசயனமூர்த்தி தியானம்

சியாமவர்ண திருமேனியுடைவரும் மேற்கரம் இரண் டிலும் சங்கம் சக்ரம் தரித்தவரும் வலது கீழ்க்கரத்தை தலையணை யாகவைத்து இடது கீழ்க்கரத்தை முன் போல்நீட்டி அமைத்து படுக்கை மத்தியில் பள்ளி கொண்டருளும் நான்கு கரங்கள் பொருந்திய ஸ்ரீ ஹரியைப் போற்றுகிறேன்.

## அபிசாரிக சயநஹரி தியானம்

நீலநிறத் திருமேனியும் இரு திருக்கரமும் மெலிந்த உடம்பும் நீலவண்ண ஆடையுடுத்தியவரும் இரண்டு மண்டலம்



அமைத்து இருதலையுடன் அழகின்றி விளங்கும் சேஷன் மீது பெருமான் சிரசைச் சாய்த்து நன்றாக நித்ரை செய்பவரும் தேவர்களினின்று தனித்து சயனங்கொண்டருளும் ஸ்ரீ ஹரியை வணங்குகிறேன்.

## லக்ஷ்மி நாராயணர் தியானம்

நான்கு திருக்கரங்களுள்வரும் வலது திருக்கரம் அபயம் அல்லது வரதமுத்ரையருளிமேல் கரங்களில் சங்கம் சக்ரம் என்பன பொருந்த வலது திருத்தாள் கீழே தொங்க, இடது தாளை மடக்கிவைத்து பத்மபீடத்தில் வீற்றிருப்பவரும் இரு திருவடியை ஒன்றாக இணைத்து பூமியில் வைத்து தேவனின் இடது தொடையிலமர்ந்து வலது திருக்கரத்தால் இடது பார்சுவத்தைத் தேவியும் இடது தோளை இடதுகரத்தால் செய்தும் இடது கரத்தில் தாமரை கமலம் விளங்கும் லக்ஷ்மியுடன் கூடியவருமாகிய லக்ஷ்மி நாராயணரை தியானிக்க வேண்டும்.







# கர்பக்ருஹ பதவின்யாசம்



கர்பக்ருஹத்தில் 49 பதங்கள் செய்தும், அறுபத்து நான்கு பதங்கள் செய்தும் எண்பத்தோரு பதங்கள் செய்தும் 256 பதங்கள் செய்தும் ஆக நான்கு விதமாக செய்ய வேணும்

49 பதம் மத்யத்தில் 1 பதம் பிரம்மபதம் சுற்றி 8 பதம் தெய்வீகம் சுற்றி 16 பதம் மானுஷம் சுற்றி 24 பதம் பைசாசிகம்

64 பதம் மத்யத்தில் 4 பதம் பிரம்மபதம் சுற்றி 12 பதம் தெய்வீகம் சுற்றி 20 பதம் மானுஷம் சுற்றி 28 பதம் பைசாசிகம்



# ஒரு விமானஸ்தானக ஆஸன சயனபிரதிஷ்டாவிதி



விமானம் மூன்று நிலம், நீண்ட சதுரம், நீண்ட விருத்தம் முகமண்டப படிகளுடன்

முதல் தளத்தில் ஸ்தானகமூர்த்தி

இரண்டாவது தளத்தில் ஆஸனமூர்த்தி

மூன்றாவது தளத்தில் சயனம் செய்ய வேண்டும்

மூன்றில் ஸ்தானகம், இரண்டாவதில் ஆசனம், முதலில் சயனமும் செய்யலாம்.

யோகம், போகம், வீரம் முதலிய பேதங்கள் ஏதாவது ஒரு மார்கத்தில் த்ருவபேரத்தை செய்யவேணும்.

கௌதுக பேரங்களுடன் ஆலயம் பிராகாரம் மண்டபம் கோபுரம் முதலியவை மூன்றால் சொல்லப்பட்ட விதிமுறைகளின்படி செய்யலாம்.

## த்விமூர்த்தி ஸ்தாபனவிதி

த்விமூர்த்தி ஸ்தாபன விதியைக் கூறுகிறேன். கிராமத்தின் இஷ்டமான திசையில், வெளியில் அல்லது மத்தியில் ஆலயம் அமைந்து அந்தர் மண்டலத்துடன் கூடி, தெற்கே சங்கர பவனம் வடக்கே விஷ்ணு ஆலயம் வடக்கே சங்கரபவனம் தெற்கே விஷ்ணு ஆலயம் அல்லது மேற்கில் விஷ்ணு ஆலயம் கிழக்கு முகம் அதற்கு கிழக்கில் மேற்கு முகம் சங்கர பவனம் செய்யவேணும். விமானம் முதலியவைகளுடன் ருத்ரம், அதன் சாஸ்த்ர விதிப்படி அர்ச்சிக்க வேண்டும். முன்னால் சொல்லப்பட்ட விமானம் முதல் சகலமும் செய்து அந்தர் மண்டலத்தில் ஒரே வழியில் பரிவாரங்களுடன் செய்க. தேவனை விஷ்ணுவை ப்ரதிஷ்டை விதிப்படி செய்து அதன்படி அர்ச்சனை ஹவிநை





வேத்ய, ஹோமம் முதலிய சர்வமும் ஆதியில் சொன்னபடி செய்க. ஸ்நபந, உத்ஸவ முதலியன செய்ய வேண்டும்.

## த்ரமூர்த்தி ஸ்தாபனம்

பிறகு, த்ரிமூர்த்தி ஸ்தாபனத்தைக் கூறுகிறேன். கிராமத்தில் இஷ்டமான திசையில் கோவில் அமைத்து ஒரே பிராகாரத்தில் அந்தர்மண்டலத்தில் தெற்கே சங்கரபவணம் மத்யத்தில் விஷ்ணுபவனம் வடக்கில் பிரம்மாபவனம் தெற்கில் பிரம்மா மத்யத்தில் விஷ்ணு வடக்கில் சங்கரபவனம் வடக்கில் விஷ்ணு பவனம், அல்லது தெற்கில் விஷ்ணு மத்யத்தில் பிரம்மா வடக்கில் சங்கரபவனம் இப்படிச் செய்யவேணும். முகமண்டப சோபாதிகளுடன் விதிப்படி செய்ய வேண்டும். சங்கரபவனம் அந்தர் சாஸ்த்ரப்படி ஸ்தாபனம் செய்யவேணும். இது த்ரிமூர்த்தி ஸ்தாபனம்.

தேவன் விஷ்ணு தேவிகளுடனோ அல்லது தேவி இல்லாமலோ ஒரு விமானத்தில் கீழ் இருந்து மேலே நின்றார், அமர்ந்தார், கிடந்தார். இவ்விதம் மரிசிசம்ஹிதையில் சொல்லப் பட்டவாறு திருக்கோஷ்டியூர், காஞ்சிபுரம், வைகுந்த பெருமாள் கோவில் மற்றும் பல்லவ ராஜாக்களால் கட்டப்பெற்ற மஹாபலிபுரம் தர்மராஜா கோவில் முதலியவையாகும்.

தனித்தனியாக த்ரிமூர்த்திவிமானம் பிரம்மா விஷ்ணு சிவன் இது மாமல்லபுரத்தில் த்ரிமூர்த்தி மண்டபத்தில் இவ்வாறு அமைக்கப் பெற்றுள்ளது.

## த்விமூர்த்தி விதானம்

இரண்டு மூர்த்திகள் இது பெருமாள் கிழக்கேபார்த்தும் சிவன் மேற்கே பார்த்தும் உள்ளது. ஒரே பிராகாரத்தில் மரீசி சம்ஹிதையில் சொன்னவாறு உள்ளது. திருநெல்வேலி சமீபம் திருக்குறுங்குடியாகும்.



## மரீசிசம்ஹிதை விமானதேவதைகள்

விமானத்தின் தெற்கு பாகம் சத்யம்

மேற்கே அச்சுதன்

வடக்கே அனிருத்தன்

முகமண்டப தக்ஷிணே வினாயகம்

வடக்கே விந்த்யவாசிநீம்



### இரண்டாம் நிலம்

கிழக்கு புருஷன் அல்லது சக்ரம் தெற்கே நிருசிம்மம் மேற்கே அச்சுதன் வடக்கே வாராகம்

### மூன்றாம் நிலம்

கண்டத்தில் - கிழக்கு புருஷன் தெற்கு தக்ஷணாமூர்த்தி பிரம்மா மேற்கே நிருசிம்மம் கிழக்கு சக்கரம்

கோணத்தில் - கருடன் அல்லது சிம்மம் செய்ய வேண்டும்

மத்யம் - மூலதலத்திலும் மூன்றாவது தலத்திலும் நினைத்த இடத்தில் நிருசிம்மரை தெற்கு முகமாக அல்லது மேற்கு முகமாகவாவது செய்யலாம்





# மரீசிசம்ஹிதை

முதன் முதலாகப் பிரமனின் வடிவம் தியானிக்கப்படு கின்றது. இந்தப் பிரமனின் வடிவம் நான்கு கரங்களையுடை யது. நான்கு முகங்களுடையது. இரண்டு கால்களையுடையது. எட்டு கண்களையுடையது. எட்டு காதுகளுடன் கூடியது. உடலோ ஒரே வடிவம் கொண்டது. இந்த வடிவத்தின் அளவை உத்தம சதளத்தினால் அளக்கவேண்டும்.

நின்றநிலையோ, உட்கார்ந்தநிலையோ உடையது மரி வுரியையோ நூல் ஆடையையோ உடுத்திருப்பது. வரம் அபயம் இவ்விரண்டையும் அளிக்கும் உட்கைகளையுடையது ஜடா மகுடத்தில் அலங்கரிக்கப்பட்டது.

வெளிக்கைகளிரண்டிலும் முறையே இடது வலது கரங் களில் கமண்டலமும் ஜபமாலையும் அல்லது ஸ்ருக ஸ்ருவம் என்ற ஹோமசாதனமான கரண்டிகளோ தரிக்கப்பட வேண்டும் முன்போல வரதம் அபயம் இவைகளுடன் கூடியது.

காதுகளில் சுவர்ணமயமான கர்ணபுஷ்பமோ அல்லது, மீன்கள் அடையாளம் கொண்ட குண்டலமோ அணிவிக்கப் பெற வேண்டும். பூநூல் உத்தரீயம் முதலியவையும், மாலை முதலியவையும் உதரபந்தனம் என்ற வயிற்றுப் பட்டையும் அணிவிக்கப்பெற வேண்டும்.

இந்த பிரமனின் வடிவமானது மாலை உபகண்டம் (கழுத்தையொட்டிய மாலை) இவைகளுடன் கூடியாகவும் பாஹிமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதாகவும் இருக்க வேண்டும். கேயூரகடகமென்ற் தோள்வளை கடகம் முதலிய வற்றுடன் மணிபந்தனம் என்ற மணிக்கட்டின் அலங்காரத்தை யும் செய்ய வேண்டும்.

தோள்வளை, ப்ரகோஷ்டவளயம், மணிபந்த கடகம் எனும்படியான மூன்று கடகங்களுடன் கூடியதாகவும் கணுக்



காலுக்கு மேலேயுள்ள நளகையெனும். கண்டைக்காலிலே கடகத்துடன் (வளயத்துடன்) கூடியதாகவும் இருக்க வேண்டும். அறைஞாண் முதலியவையும், நீவியென்ற இடையிலணியத் தக்க சலனமென்ற அசைந்தாடும் முகப்புடன் கூடிய இடைப் பட்டிகையும் இருக்க வேண்டும்.

இரண்டு கரங்களும், ரத்னமயமான மோதிரங்களுடன் கூடியவை. கால்கள் ரத்னமயமான பாதஸரங்களுடன் கூடியவை. நெற்றியில் வட்டமான திலகம் சந்தனத்தினாலாகியதாகவோ அகருவினாலாகியதாகவோ இருக்க வேண்டும்.

முழுமையானவுடலும் சுவர்ணவண்ணம் கொண்டிருக்க வேண்டும். நளகம் (கணுக்காலுக்கு மேல்பாகம்) முடியும்வரை மரவுரியுடன் கூடியிருக்கவேண்டும். இருபக்கங்களிலும் சக்தி களுடன் கூடியதாக இருக்கவேண்டும். வலது பக்கத்தில் ஸ்ரீ ஸரஸ்வதி இருக்கவேண்டும்..



இடது பக்கத்தில் ஸாவித்ரீ இருக்க வேண்டும். இவ்வாறு பிதாமஹனுடைய வடிவமானது கூறப்பட்டது. இதனை அறிஞ னானவன் சாஸ்திரமறிந்தவனாக இருந்துகொண்டு சகல ஆபரணங்களாலும் அணிவிக்கப் பெற்றதாக ஆக்க வேண்டும்.

இனி விஷ்ணுவின் வடிவமானது தியானிக்கப்படு கின்றது. நான்கு கைகளையுடையது. இரண்டு கண்களையுடை யது. கிரீட மகுடத்துடன் கூடியது. மஞ்சள் பட்டை தரிப்பது, அழகியது. சியாமள வர்ணத்தினால் (பசும்புல் நிறத்தினால்) உடலின் சோபைகொண்டது.

முழுமையான மார்பிலும் மேலே ஸ்ரீ வதஸ்மெனும் மருவைச் செய்ய வேண்டும். உத்தம தசதாளத்தால் கணக்கிட வேண்டும்.

உட்கைகளிரண்டில் இடதுகரத்தில் கடகம் தரிக்கப்பட் டிருக்க வேண்டும். அவ்வண்ணமே பூமியிற்படியும் படியான கதையெனும் ஆயுதத்தைத் தரித்திருக்க வேண்டும், அல்லது இக்கரமானது வரத்தைக் கொடுப்பதாகவும் இருக்கலாம்.







வலது கரத்திலோ (உட்கை வலது) அபயம் தரித்திருக்க வேண்டும். வெளிக்கரங்களிரண்டில் வலது கரத்தின் மேல் பாகத்தில் சக்ராயுதத்துடன் கூடியதாயிருக்க வேண்டும். மற்றொன்றாகிய இடதுகரத்திலோ பாஞ்சஜன்யமென்ற சங்கை தரித்திருக்க வேண்டும்.

இரு காதுகளுக்கும் சமமாயிருக்கும்படி கர்ணபத்ரங்களையோ, மகரகுண்டலங்களையோ அணிவிக்க வேண்டும். இந்த விஷ்ணுபிம்பமானது, தெளிந்தமுகமுடையது. உயர்ந்த நாசியுடையது. நீண்ட கண்களுடன் விளங்குவது.

ஆரம், கழுத்தைச் சுற்றி விளங்கும் உபக்ரீவம், இவைகளுடன் கூடியது. யஞ்ஞசூத்திரத்தினால் உத்தரீயம் உடையது. பாஹுமாலைகளால் அலங்கரிக்கப் பெற்றது. ரத்னங்களாலாகிய உதரபந்தம் (வயிற்றைச் சுற்றிய பட்டிகை) இருக்க வேண்டும்.

கடகத்தையும் அரைஞாண்கயிற்றையும், தோள்வளையையும் அத்தோள்வளையில் ரத்னமயமான பூரிதத்தையும் அணிவிப்பதுடன், ரத்னமோதிரங்களுடன் கூடியதாகவும் பாதரசங்களினால் அலங்களிக்கப் பெற்றதாகவுமாக்க வேண்டும்.

இடையிலே மஞ்சள் பட்டாடை இருக்க வேண்டும். பட்டாடை இடுப்பு முதல் நளகாந்தம் வரை தொங்க வேண்டும். (இடையிலுள்ள பட்டிகையின் முகப்பு) சிரத்திலுள்ள கிரீடத்தின் பின்புறத்தில் சிரஸ்சக்ரம் எனும் வட்ட வடிவமான ரத்னமயமான அலங்காரம் இணைந்திருக்க வேண்டும். அவயவ பூஷணங்களனைத்தும் அணிவிக்கப் பெற்றிருக்க வேண்டும்.

இரு புறங்களிலும் கண்டங்களால் முடிவை அளவாகக் கொண்ட மனோஹரமான வனமாலை இருக்க வேண்டும். இவ்வாறாகிய இந்த விஷ்ணுவின் வடிவம் இரு பக்கங்களிலும் சக்திகளுடன் கூடியதாக இருக்க வேண்டும்.



பெயற்கப் பெறாத நிலையிலும் பெயற்கப் பெறும் நிலையிலும் இந்த வடிவத்தின் வலதுபுறத்தில் லக்ஷ்மியையும் இடது புறத்தில் பூமியையும் (சக்திகளைச்) செய்ய வேண்டும். இந்த வடிவம், நின்ற நிலையிலோ, உட்கார்ந்த நிலையிலோ, அவ்வாறு படுத்த நிலையிலோ இருக்கலாம்.

இப்பொழுது மகேச்வரனின் வடிவம் கூறப்படுகின்றது. நான்கு கரங்களையுடையது மூன்று கண்களையுடையது. ஜடா மகுடத்தால் அலங்கரிக்கப் பெற்றது. இரு முழங்கால்களுக்கு மேலே, புலித்தோலை உடையாகக்கொண்டது. நன்கு அலங் கரிக்கப் பெற்றது.



இடையிலுள்ள பட்டிகையில், சலம் என்ற முகப்பு அணி யுடன் கூடியது. சிவந்த நிறங்கொண்ட அவயவங்களுடன் விளங் குவது. ஹாரம் உபக்ரீவம் இவைகளை மார்பில் உடையது. தொங்கும் நெற்றி மாலைகளையுடையது.

மண்டை ஓடுபோன்றும் ரத்னங்கள் சூழ்ந்து அமைக்கப் பெற்ற ரத்னபந்தத்தையோ அல்லது ருத்ரபந்தத்தையோ (ருத்ராக்ஷ வடிவம் கொண்ட பந்தத்தையோ) செய்ய வேண்டும். (இது ஜடா மகுடத்தில் அமைக்கப்பெற வேண்டியது.) உதரபந்தமானது (வயிற்றில் விளங்கும் பட்டிகையானது) பத்ரமயமாகவோ (இலை கள் வடிவம் கொண்டதாகவோ) ரத்னமயமாகவோ இருக்க வேண்டும்.

இந்த மகேசனின் வடிவத்தில் கடகமும், அரைஞாணும், பூரிமத்துடன் கூடிய தோள்வளையும், இருக்கவேண்டும். இந்த வடிவமானது, பாஹுமாலை முதலிய மாலைகளுடன் ஸர்வா பரணபூஷிதமாய் இருக்க வேண்டும்.

இந்த வடிவத்தின் இடது காதில் தொங்கும் கர்ணபத்ரம் (தோடு) இருக்க வேண்டும். வலது காதில் பாம்புகுண்டலம்





இருக்க வேண்டும். உட்கைகளில் வலது புறத்தில் அபயம் இருக்க வேண்டும். இடது புறத்தில் வரதம் இருக்க வேண்டும்.

மற்ற இருகரங்களில் இடது கரத்தில் மானும் வலது கரத்தில் டங்கமெனும் பரசுவும் இருக்க வேண்டும். இடது புறத்தில் சந்திரகலையுடன் கூடிய கிரீடம் இருக்க வேண்டும்.

வலது புறத்தில் எருக்கமலர்களுடன் பாம்பு கங்கை இவைகள் சடைநடுவே இருக்க வேண்டும் இடது புறத்துக் கிரீடத்திடையே அருகம்புற்களுடன் தாமரை மலரும் சுவர்ண ஸிந்தூரமும் இருக்க வேண்டும்.

இந்த வடிவமானது, நடுவே இணைந்த முகத்தையுடையதாயிருக்க வேண்டும். நெற்றியில் ஒரு கண்ணுடன் கூடியதாகவும் இருக்க வேண்டும். கழுத்தின் வலது பக்கத்தில் கால கூட மெனும் விஷத்துடன் கூடியது.

பூணூலை உத்தரீயமாகக்கொண்டது. எல்லா விரல்களிலும் ரத்தின மோதிரங்களையுடையது, பாதசரத்துடன் விளங்குவது. இந்த வடிவம் நின்றகோலத்திலோ உட்கார்ந்த கோலத்திலோ இருக்கலாம்.

இவ்வாறு ருத்திரனின் வடிவம் இருக்க வேண்டும். இடது புறத்தில் பார்வதி இருக்க வேண்டும். இந்த வடிவத்தின் அளவை, உத்தமசதாளத்தில் அளக்க வேண்டும்.

பிரம்ம சூத்திரத்தில் பிரம்ம பீடமாம் அதுவே பூஜா பீடமாம் தைவீக பதத்தில் நடுவே அகலமும் நீளமும் 1 பதம். அதனுடைய உயரம் அந்த பதத்தில் பாதி அளவாம். மூல மூர்த்தியின் வலதுபக்கத்தில் ஸ்ரீ தேவியும் இடது பக்கத்தில் பூதேவியும் இருக்க வேண்டும். இரு தேவிகளின் பீடத்தின் நீளம் அகலம் தைவீகபதத்தில் முக்கால் பங்கு இருக்க வேண்டும்.





மீதமுள்ள கால்பங்கு தேவியின் பீடத்திற்கு நடுவே வெளிப் புறத்தில் அமைய வேண்டும். தேவியுடைய பீடமானது தேவ னுடைய பீடத்தில் கால் பங்கு குறைவாக இருக்கவேணும். தாமரை இதழ்களுடன் கூடிய இந்த பீடமானது வட்டமாகவா வது சதுரஸ்ரமாகவாவது இருக்க வேணும் பீடத்தின் துளையின் அகலமும் ஆழமும் 12 அங்குலம் இருக்கும் தேவிகளுக்கும் அப்படியே.

ஏகபேரமானால் பிரம்மபதத்தில் அமைக்க வேண்டும். அது சாந்தியைக் கொடுக்கும். தைவீகாம்சத்தில் இருந்தால் புஷ்டியை அளிக்கும் மானுஷாம்சத்தில் இருந்தால் ஜயத்தைக் கொடுக்கும். பைசாசபதத்தில் இருந்தால் சம்ஹாரம் செய்ய வல்லது இவ்விதமாக ஸ்தானங்கள் நான்கு விதமாகும். ஆஸந அமைப்பில் பீடங்கொள்ளும் போது தைவீகபதத்தில் முக்கால் போக முன்னேயுள்ள கால் பாகத்திலிருந்து உபபீடமாகக் கொள்ள வேணும். அதுவும் மானுஷ பதமும் பைசாவிகபதத் தில் எஞ்சியுள்ள பாதி நீளமாக கொள்ளவேணும். எனவே உப பீடமானது 21/2 பதங்கள் நீக்கி நின்றது. தேவி ஆஸநத்தின் பீடமாகும். தேவிகளின் சூத்ரத்திற்கு பின்புறம் துளைகள் இருக்க வேணும் அந்த துளையானது ஆறு அங்குலம் அகலமும் ஆறு அங்குலம் ஆழமுமாக இருக்க வேணும். இவ்வாறு ஆசனத் தின் அமைப்பு சொல்லப்பட்டது. சயனஞ் சொல்லப்படு கிறது. பின்புறத்திலும் பக்கத்திலும் சுவற்றை ஒட்டியுள்ள பைசாச அம்சத்தை விலக்கி நின்ற மானுஷ தைவீக பதங்கள் இரண்டும் சயனத்திற்கு நீளமாகும். அகலமும் இரண்டு பதங்களாகும். பைசாசிகபத முன் பகுதியில் தேவிகள் இருப் பார்கள்.

மானுஷ அம்சத்தில் முன்பகுதியில் வம்ச தண்டமிருக்க வேணும் பிரம்ம சூத்திரத்திற்கு தெற்கில் வலத்தில் ஒரு



அங்குலம் தள்ளி நாபி இருக்க வேணும் தேவமானுஷ பாகங்களால் சயனம் சொல்லப்பட்டது.

கற்பக்ருஹத்தை அறுபத்து நான்கு கண்டங்களாகப் பிரித்து நடுவேயுள்ள நான்கு கண்டங்கள் தைவிகாம்சம் தைவீகத்தை சுற்றி உள்ள 20 பதங்கள் மானுஷாம்சமாம் மானுஷாம்சத்திற்கு வெளியே சுற்றியுள்ள இருபத்தெட்டு பதங்கள் பைசாசமாகும். அதில் நடுவேயுள்ள சூத்ரம் ப்ரம்ஹ சூத்ரமாகும். மற்ற சூத்ரங்கள் முன்பு சொன்னது போல் தெரிந்து கொள்ளவேணும். பிரம்மாம்சத்தில் அர்ச்சனபீடம் அமைய வேணும். தைவீகத்தில் ஸ்தானகத்தைக் கொள்ள வேணும் நடுவேயுள்ள சூத்ரம்மத்யசூத்ரமாகும் அதன் அருகிலுள்ள இரண்டு சூத்திரங் களும் உபமத்யம் என்று பெயர். அவைகளை உபப்ரம்ஹ சூத்ரங்களென்றும் கூறலாம். தைவீகத்திற்கு பக்கத்தில் உள்ள சூத்ரங்கள் உபதேவ சூத்ரங்கள் எனப்படும் மானுஷ்யத்திற்கு பக்கத்தில் உள்ள உபமானுஷ்ய சூத்ரமாகும் மத்ய சூத்ரமும் அதன் பக்கத்திலுள்ள இரு சூத்திரங்களும் உபதேவ சூத்ரங்கள் இரண்டும் ஆக ரஜ்ஜுக்கள் ஐந்தாகும். இந்த ரஜ்ஜுக்களின் அகலம் ஒரு பதத்தின் அகலத்தில் பதினொறிலொன்றும் மற்ற ரஜ்ஜுக்களின் அகலங்கள் இதன் அகலத்தில் பாதியாகும். பர்ம்ஹ பதம் 16 தெய்வீகம் 84 பதங்களாம் மானுஷப்பதம் 96 பைசாச பதங்கள் 64 பதங்களும் மொத்தப் பதங்கள் 256 ஆகும். ப்ரம்ஹ பதத்தில் கௌதுகத்தை ஸ்தாபிக்க வேணும். ப்ரம்ம பீடத்தின் அகலம் மூன்று பதம். அதன் நீளம் 4 பதம் பீடமானது 4 மூலை களுடையதாகவோ வட்ட வடிவமாகவோ இருக்கலாம். கீழ் மேலான ப்ரம்ஹசூத்ரமும் தென் வடலான ப்ரம்ஹசூத்ரமும் கூடும் இடம் ப்ரம்ஹஸ்தானமாகும்.

இனி ஸ்தாநகமும் ஆஸனமும் சயனமும் சொல்லுகிறேன். பீடத்தின் அகலமும் நீளமும் மூன்று பதம். கர்ப்பக்ருஹத்வாரத்தை ஆறு பங்கு செய்து ஒரு பங்கை பீடத்தின் உயரமாகக் கொள்ள வேண்டும். தேவி பீடம் 2 பதம் உபப்ரம்ஹ







சூத்திரத்திற்கும் தேவி பீடத்திற்கும் நடுவில் இடைவெளி ஒன்றரைப்பதம் தேவனுடைய பீடத்தின் உயரத்தில் நான்கி லொன்று குறைத்தால் தேவி பீடத்தின் உயரமாகும். அந்த பீடமானது வட்டமாகவோ சதுரச்ரமாகவோ, பத்மதாளங்க ளோடு கூடியிருக்க வேண்டும். பீடத்திலுள்ள பள்ளத்தின் அகலமும் ஆழமும் 12 தேவமானாங்குலமாகும். பிரம்ஹ சூத்தி ரத்திற்கு வலத்திலும் இடத்திலும் தேவனுடைய பாதங்கள் நிற்க வேண்டும். தேவனுடைய பாதங்களிரண்டும் உபதேவிக சூத்திரத்திற்கு வலத்திலும் இடத்திலுமிருக்க வேண்டும். வாசல கலத்தை நூற்று இருபத்தாறு பங்கு செய்து ஒரு பங்கை வலது பக்கம் விட்டுவிட்டால் இடப்பக்கத்தினருகே தேவ மத்யமம் ஆகும். தேவனைத் தவிர மற்ற தேவர்கள் தேவ மத்யத்திற்கு இடது பக்கத்திலேயே இருக்க வேண்டும். தேவியரும் அப்படியே.

இப்படியாக ஸ்தாநகம் சொல்லப்பட்டது, இனி அஸ னங்களைப் பற்றி சொல்லுகிறேன். ப்ரம்ஹ ஸ்தாநத்தை அடுத்தாற் போல் தைவிக பதத்தில் இரண்டு பதங்கள் உப பீட மாகும். அதற்கப்பாலுள்ள மூன்று பதங்கள் ஆஸநத்தின் அகலமாம். சுவற்றிற்கும் பீடத்திற்கும் இடைவெளி ஒரு பத மாகும். விஜி ஒரு பதமாகும். பீடத்தின் நீளம் 6 பதம், மீதி தேவி யராசனமாம்.

தேவனுப பீடத்திற்கு தேவி உப பீடப்ரவேசம் அரைப் பதமாகும் இரு பக்கங்களிலும் விஜி ஒரு பதம் அதனின்றும் சுவர் ஒரு பதம் இடைவெளி தூரத்தில் இருக்கும். துளையின் நீளம், அகலம், ஆழம் 6 அங்குலம் மானுஷ பதத்திலிருந்தும் தைவீக பதத்திலிருந்தும் சிறிது சிறிது எடுத்துக் கொண்டு துளை செய்ய வேண்டும். அந்தத் துளையின் அகலத்தில் பதினாறி லொரு பங்கு அளவு மானுஷ பதத்திலும், மீதி தைவிக பதத்தி லுங் கொள்ளவேண்டும். அதுவே தேவியர் அமைப்பதற்கான துளைகளாகும். சயனத்தின் நீளம் 12 பதம், ப்ரம்ஹபதத்திற்கு வெளியே 4 பதம் அகலம் இரு மருங்கிலும் இரு பதங்களை



விட்டு விட வேண்டும். பாதங்களிருக்கும் ஒரு பதத்தோடு சேர்த்து படுக்கையின் நீளம் 13 பதங்களாம் தேவிகளுக்கு ஆஸநம் மத்தியிலும் பிரிவாரங்களுக்கு மானுஷ பதத்திலுமாஸநமாம். துளையின் அகலமும் ஆழமும் ஆறு அங்குலம் சதுரமாக இருக்க வேண்டும். மூர்த்தியினுடைய பின் பாகத்திலாவது கடிஸந்தியிலாவது துளையைச் செய்ய வேண்டும். மத்ய சூத்திரத் திற்கருகில் பூஜா பீடத்தின் இருபக்கங்களிலும் ஒரு பதம் நீளமும் ஒரு பதம் அகலமும் கொண்ட பருகுமார்கண்டேயருடைய ஆஸனம் செய்ய வேண்டும்.



இனி நடக்கும் பாவனையிலுள்ள மூர்த்தியின் ஸ்தாபநத்தைப் பற்றிக் கூறுகிறேன். த்ரிவிக்ரம் மூர்த்திக்குச் சொன்னபடியே இந்த மூர்த்திக்கும் கொள்ள வேண்டும். வலக்காலை உயர்த்தி இடக்காலை நிற்க வேண்டும் சாந்திகம் பௌஸ்டிகம் முன்போலவே பரிவாரங்கள் மானுஷ பதத்திருப்பது பைசாச பதத்தில் கருடன் நிற்பாராக.

விருத்த மானங்களில் 16 பதங்களெப்படி என்பதைக் கூறுகிறேன். மத்ய சூத்திரத்திற்கும் கடைசியிலுள்ள சூத்திரத்திற்கும் இடையே 7 வட்டங்கள் வீசினால் 8 சக்கரங்களாகும். குருக்காக சூத்திரங்களை இழக்க வேண்டும். கடைசி வட்டத்தை 60 பதங்களாகச் செய்க அது பைசாசபதமாகும் அதற்கடுத்துள்ள வட்டத்தை 52 பதங்களாகவும் அதனுள்ளிருக்கும் அடுத்த சக்கிரத்தை 44 பதங்களாகவும் அதற்கடுத்ததை 36 பதங்களாகவும் அதற்கடுத்த வட்டத்தை 28 பதங்களாகவும், அடுத்ததை 20 பதங்களாகவும், அதனுடைய அடுத்த உள் வட் டத்தை 12 பதங்களாகவும் கடைசியாக நடுவேயுள்ள வட்டத்தை 4 பதங்களாகவும் செய்தால் மொத்த பதங்களின் எண்ணிக்கை 256 ஆகும். பிராம்ஹிக் முதலியவைகளை முன்பு சொன்னதுபோல் தெரிந்தெடுத்துக் கொள்ளவேண்டும். தைவீகத்தில் கௌதுக ஸ்தானத்தின் அகலம் 2 பதங்களாகும் ஸ்தானகம், ஆஸநம் சயனம் முதலியவற்றை ஏற்கனவே சொல்லியபடி பார்த்துக்





கொள்ள வேண்டும். ஐந்து ரேகைகளில் ஒன்றும், ஒன்பது ரேகைகளில் ஒன்றும், ஏழு ரேகைகளில் ஒன்றும் ஆக மூன்று சக்கரங்கள் ஸ்தான சயந ஆயநங்களுக்கெனக் கொள்ள வேண்டும். இந்த ஸ்தாபனங்கள் எல்லாவற்றிற்குமான விதிகளை முன்பு கூறியவைகளைப் போலவே என தெரிந்துகொள்ள வேண்டும்.

விமானம் முதலியவைகளில் தலந்தோறும், கல்பிக்கப் பட வேண்டிய தெய்வத்தை (தேவையை)க் கூறுகிறேன். ஹேவிப்ர -

கிழக்கு திக்கில் ஸுப்ரம்ஹண்யரையும், தெற்கு திக்கில் தக்ஷணாமூர்த்தியையும், மேற்கு திக்கில் விஷ்ணுமூர்த்தி அல்லது, லிங்கோத்பவ மூர்த்தியையும், வடக்கு திக்கில் பிர்ம தேவனையும் கல்பிக்க வேண்டும். ஆயினும், இவர்களை துவார ஸ்தலத்தில் (துவாரத்தில்) கல்பிக்கக் கூடாது.

மண்டபத்தில் தெற்கு திக்கில், பத்ராஸனத்தில் விநாயகரை, விதியுடன் ஸ்தாபனம் செய்ய வேண்டும். அவருக்குக் கிழக்கு அல்லது மேற்கில், நடராஜமூர்த்தியை கல்பிக்க வேண்டும். துர்க்காதேவியை, வடக்கு திக்கில் கல்பிக்க வேண்டும். அல்லது க்ஷேத்திரபாலகரை (பைரவரை) கல்பிக்க வேண்டும்.

அவர்களின் ஸ்தானமானது ஸ்தானமாக இருப்பதாகும் அல்லது ஹே துவிஜ திக்குகளில் கல்பிக்கும் மூர்த்திகளை ஸ்தானமாகவோ, ஆஸனமாகவோ, கல்பிப்பதாகும். (ஸ்தானகம் - நின்ற வடிவம், ஆஸனம் - உட்கார்ந்த வடிவம்.)

இவ்விதமாக தராதலத்திற்கு மேலே (விதியுடன் மூர்த்திகளைக் கல்பிக்க வேண்டும்.)

கிழக்கு திக்கில், ஸ்கந்தன், யானையின் மீதிருக்கும் இந்திரன், அல்லது பத்மாஸனத்திலிருக்கும் பிரம்ஹா, இவர்களுள் ஒருவரைக் கல்பிக்க வேண்டும்.





தெற்கில் தக்ஷிணாமூர்த்தி அல்லது வீரபத்திரரைக் கல்பிக்க வேண்டும். மேற்கில் நரஸிம்ஹமூர்த்தி அல்லது ஸௌம்ய (ஸோமாஸ்கந்த) மூர்த்தியைக் கல்பிக்க வேண்டும்.

ஹே அந்தணனே வடக்கு திக்கில் பத்மாஸனத்திலிருக்கும் பிரம்ஹாவைக் கல்பிக்க வேண்டும்.

இவ்விதமாக பிரஸ்தரத்திற்கு மேலே கல்பிக்க வேண்டும் அவ்விதமே ஏக 1 தலம், த்வி 2 தலம், த்ரி 3 தலம், இவைகளிலும் கல்பிக்க வேண்டும்.

சதுர் 4 பௌமம் முதலான், பௌமங்களில் பரமேசுவரனை விருப்பமான இடத்தில் கல்பிப்பதாகும்.

உமையாள், ஸ்கந்தர் முதலியவர்களுடன் கூடியவர், மஹேசனாவார் என்று கூறப்பட்டிருக்கிறது. மற்ற தேவர்கள், கந்தர்வர்கள் ஸித்தர்கள் தைத்தியர்கள், மருத்கணங்கள் இவர்களை சதுர் 4 பௌமம் முதல், ஷோடச 16 பூமிவரையில், பிரஸ்தராந்தத்திலும், கண்டத்திலும் கல்பிக்க வேண்டும்.

கல்பத்தையறிந்தவன், தனக்க இஷ்டமான மூர்த்தியை, அரிஷ்டாம்சத்தில் (ஈசான பாகத்தில்) கல்பிக்க வேண்டும். களாதியிலிருக்கும் மஞ்சத்திற்கு மேலே, கோணங்களில் விருஷபத்தைக் கல்பிக்க வேண்டும்.

ஒவ்வொரு கோணத்திலும் (கோணம் - மூலை) இரண்டு 2 விருஷபங்கள் அல்லது ஒரு 1 விருஷபத்தை படுத்திருக்கும் படி கல்பிக்க வேண்டும்.

அல்லது, நான்கு கோணங்களிலும், கைகளைக் கூப்பிக் கொண்டிருக்கும், பூதத்தைக் க்ல்பிக்க வேண்டும். பத்மபீடங்களில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பூதங்களைக் கல்பிக்க வேண்டும். அவைகள், பருத்த உடம்புடையவைகளாக இருக்க வேண்டும்.







ஆமோதனை, அக்னி கோணத்திலும், ப்ரமோதனை நிருநதி கோணத்திலும் பிரமுகனை வாயுகோணத்திலும், துர் முகனை ஈசானகோணத்திலும் கல்பிக்க வேண்டும். இவர்களின் நிறமானது முறையே, அக்னி முதலிய விதிக்குகளில் வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், கருப்பு என்பவைகளாகும்.

## கற்பக்ருஹ பதவின்யாசம் (சைவம்)

கெற்பக்ருஹ உள் அகலத்தை மத்தியில் இருந்து பின் பகுதியை 10 பாகம் செய்து கெற்ப மத்தியில் சிவலிங்கத்தையும் அதன்பின் 10வது பதத்தில் சைவபிம்பங்களையும் 9வது பதத்தில் பிரம்மாவையும் 8வது பதத்தில் விஷ்ணுவும் 7வது பதத்தில் ஷண்முகரையும் 6வது பதத்தில் சரஸ்வதி முதலியவர்களையும் 5வது பத்தில் சாஸ்த்தா (ஐயனார்) வையும் 4வது பதத்தில் வினாயகரையும் 3வது பதத்தில் பைரவரையும் வீரபத்திரரை யும் 2வது பதத்தில் சக்தியையும் காளி முதலியவர்கள், 1வது பதத்தில் பைசாசிகம்.




**வைஷ்ணவத்தில் மூர்த்திகளை மேற்கண்டவாறு பதம் செய்து 7 x 7 = 49 பதம் செய்து பிரதிஷ்டை செய்ய வேணும்.**

| | |
|---|---|
| 1 | பைசாசிகபதம் |
| 2 | சக்தி, காளி, துர்கை |
| 3 | பைரவம், வீரபத்திரர் |
| 4 | வினாயகர் |
| 5 | ஐய்யனார் (மஹாசாஸ்த்தா) |
| 6 | சரஸ்வதி, லக்ஷ்மி, தேவி |
| 7 | சண்முகர் |
| 8 | விஷ்ணு |
| 9 | பிரம்மா |
| 10 | சிவ சைவ மூர்த்திகள் |

கற்பக்ருஹ உள் அகலத்தில் பின் பாதியை 10 பாகம் செய்து மேல்கண்டவாறு மூர்த்திகளை கற்பக்ருஹத்தில் பிரதிஷ்டை செய்ய வேண்டும்.

# சிவன் அஷ்டபரிவாரம் (எட்டு)



# சிவன் அஷ்டபரிவாரம் (எட்டு)
# (மறறொரு விதம்)



# சிவன் பதினாறுபரிவாரம்



# சிவன் 22 பரிவாரம்
## நாளாவது பரிகாரம்



# வினாயகர் பரிவாரம்



# ஸ்கந்தன் பரிவாரம்



மேற்கு
கணபதி
விஷ்ணு
கிருஷ்ணர்
ஸ்கந்தன்
தெற்கு
சப்தமாதாக்கள்
வீரபத்ரர்
வடக்கு
சண்டேஸ்வரர்
சண்முகன்
யானை
காளிதேவி
மயில்
நிருத்தமூர்த்தி
கிழக்கு

# சுப்பிரமணியஸ்வாமி ஆலயம்
## பதினாறு பரிவாரம்
## குமாரதந்திரம்



# சுப்பிரமணியஸ்வாமி ஆலயம்
## அஷ்ட (எட்டு) பரிவாரம் (மற்றொரு விதம்)
## குமாரதந்திரம்



# சுப்பிரமணியஸ்வாமி ஆலயம்
# துவாதஸ (பன்னிரண்டு) பரிவாரம்
# குமாரதந்திரம்



# சுப்பிரமணியஸ்வாமி ஆலயம்
## முப்பத்திரண்டு பரிவாரம்
## குமாரதந்திரம்

மேற்கு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| நிருதி | வாசுகி | அஷ்டவஸு | வாக்ஜனம் | புருஸ்கி | தக்ஷப்ரஜாபதி | வாயு |
| சப்தமாதா | | | | | | துர்கா |
| ப்ருங்கி | | சரஸ்வதி / ஜேஷ்டா | | ஆர்ய / வாஸ்த்து பதி | | வீரபத்திரன் |
| எமன் | | | சுப்ரமணியன் | | | குபேரன் |
| சாஸ்தா | | பூமி / லக்ஷ்மி | | மித்ரா / கஜம் | | ஜயந்திரன் |
| பிருஹஸ்பதி | | | | | | சக்ராசனி |
| அக்னி | திவாகரன் | சுமுகம் | ஸர்ப்பம் | அநேகம் | சந்திரன் | ஈசானன் |

தெற்கு — வடக்கு

கிழக்கு

# பத்ரகாளி பரிவாரம்



மேற்கு
கணபதி
வைஷ்ணவி
புவனேஸ்வரி
பத்ரகாளி
தெற்கு
சப்தமாதாக்கள்
வீரபத்ரர்
மஹிஷாசுர மத்தினி
வடக்கு
வேதாளம்
சாமுண்டி
க்ஷேத்தர பாலர்
கிழக்கு

# ஐயனார் சாஸ்தா பரிவாரம்



## சிவன் கருவரை கோஷ்ட்ட விக்ரகம்



# ஸ்ரீ சுப்பரமண்யர் கருவறை கோஷ்ட்ட விக்ரகம்



# அம்மன் கருவறை கோஷ்ட்ட விக்ரகம்



# நவக்கிரஹ ஸ்தாபனம்









# சோடச கணபதிகள்

## பாலகணபதி தியானம்

கரஸ்தகதளீசூதம்பநஸேக்ஷுகமோதகம் |
பாலசூர்யப்ரபம் வந்தே தேவம் பாலகணாதிபம் ||

### (சிவப்பு நிறம்)

கைகளில் வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், கரும்பு, மோதகம் இவைகளை வைத்துக் கொண்டிருப்பவரும் பாலசூரியனைப் போன்ற சரீரகாந்தியையுடையவருமான (ஒளியையுடையவருமான) பாலகணபதியை வணங்குகிறேன்.

## தருணகணபதி தியானம்

பாசாங்குசாபூ பகபித்தஜம்பூ
ஸ்வதந்தசாலீக்ஷும்பி ஸ்வஹஸ்தை |
தத்தே ஸதா யஸ்தருணாருணாப:
பாயாத் ஸ யுஷ்மாந் தருணோகணேச: ||

### (சிவப்பு நிறம்)

கைகளில் பாசம், அங்குசம், அபூபம், (அபூபம் என்பது உளுந்து வடை, அதிரஸம் இண்டையும் குறிக்கும்) விளாம் பழம், நாவல் பழம், தன்னுடைய ஒருதந்தம், நெற்கதிர், கரும்பு இவ்வெட்டு பதார்த்தங்களையும் வைத்துக் கொண்டிருப்பவரும், நண்பகலில் விளங்குகின்ற கதிரவனின் ஒளியைக் கொண்டவருமான தருணகணபதி எப்பொழுதும் உங்களைக் காப்பாற்றுவாராக.

## பக்திகணபதி தியானம்

நாரிகேளாம்ரகதளீகுடபாயஸதாரிணம் |
சரச்சாங்கஸங்காசம் பஜேபக்கிகணாதிபம் ||
(சரச்சந்த்ராபவபுஷம் பஜே பக்கி கணாதிபம் ||)

என்பது ஸ்ரீதத்வ நிதிபாடம்.



(இ-ள்) தேங்காய், மாம்பழம், வழைப்பழம், வெல்லம், பாயாஸம் (வெல்லத்தால் செய்யப்பட்ட பாயாஸம் என்றும் கொள்ளலாம்) இவைகளையுடையவரும், (நிவேதனத்திற்காக சமர்ப்பிக்கப்பட்டவை) சரத்கால சந்திரனைப் போல் வெண்மையான சரீரத்தையுடையவருமான பக்தி கணபதியை வணங்குகிறேன். (ஸ்ரீ தத்வநிதிபாடத்தில் பக்த என்று இருப்பதால் பக்த கணபதியை என்றும் கொள்ளலாம்.)

## வீரகணபதி தியானம்

வேதாளசக்திசரகார்முக சக்ரகட்க
கட்வாங்க முத்கர கதாங்குச நாகபாசாந் |
சூலஞ்ச குந்தபரசுத்வஜமுத்வஹந்தம்
வீரம் கேணசமருணம் ஸததம் நமாமி ||

## (சிவப்பு நிறம்)

வேதாளம் 1, சக்தி ஆயுதம் 2, அம்பு 3, வில் 4, சக்ராயுதம் 5, கத்தி 6, கட்வாங்கம் 7, முத்கரம் 8, (இரும்பு உலக்கை) கதை 9, அங்குசம் 10, நாகம் 11, பாசம் 12, சூலம் 13, குந்தம் 14, மழு 15, த்வஜம் 16 ஆகிய 16 ஆயுதங்களையும் தரித்திருப்பவரும் சிவப்பு நிறமாக இருப்பவருமான வீரகணபதியை எப்போழுதும் ஸ்மரிக்கின்றேன்.

## சக்கி கணபதி தியானம்

ஆலிங்க்யதேவீம் ஹரிதாங்கயஷ்டிம்
பரஸ்பராச்லிஷ்டகடிநிவேசம் |
ஸந்த்யாருணம் பாசஸ்ருணீவஹந்தம்
பயாபஹம் சக்திகணேசமீடே ||

## (ஸிந்தூர நிறம்)

(இ-ள்) தேவியை (ஸித்ததேவியை) ஆலிங்கனம் செய்து கொண்டிருப்பவரும், ஒருவருக்கொருவர் அணைந்து கொள்ளப் பட்ட இடுப்பை உடையவரும், சந்தியா காலத்தைப் போல் சிவந்த நிறமுடையவராக இருப்பவரும், பாசம் அங்குசம்







இவைகளை வைத்துக்கொண்டிருப்பவரும், பயத்தைப் போக்கு கிறவருமான சக்தி கணபதிகளை வணங்குகிறேன்.

## த்விஜகணபதி தியானம்

யஹ் புஸ்தகாக்ஷகுணதண்டகமண்டலுஸ்ரீ
வித்யோதமானகரபூஷணமிந்துவர்ணம் ।
ஸ்தம்பேரமாநநசதுஷ்டய சோபமானம்
த்வாம்ஸம்ஸ்மரேத் த்விஜகணாதிபதே ஸ தந்ய: ॥

## (வெண்மை நிறம்)

(இ-ள்) ஹே த்விஜகணபதியே புஸ்தகம், ஜபமாலை, தண்டம், கமண்டலம் இவைகளையுடையவரும், மிக்க ஒளி பொருந்திய கங்கணம் முதலான ஆபரணங்களைக் கைகளில் அணிந்திருப்பவரும், சந்திரனைப்போல் வெண்மையான நிற முடையவரும், நான்கு யானை முகங்களுடன் சோபிக்கின்றவரு மான தங்களை எவன் ஸ்மரிக்கின்றானோ அவன் பாக்கிய சாலியாவான்.

## பிங்கள கணபதி தியானம்

பக்வசூதபலபுஷ்பமஞ்சரீமிக்ஷுதண்டதிலமோதகைஸ்ஸஹ ॥
உத்வஹந் பரசுஹஸ்த தே நம: ஸ்ரீஸம்ருத்தியுததேவபிங்கள ॥

## (மஞ்சள் கலந்த சிவப்பு நிறம்)

(இ-ள்) பக்குவமாயிருக்கிற மாம்பழம், பூங்கொத்து, கரும்பு, எள்ளு, கொழுக்கட்டை இவைகளையுடையவரும், கையில் கோடரியையும் வைத்துக்கொண்டிருப்பவரும், தங்கத் தைப் போன்று மஞ்சள் நிறமுடையவரும், ஸ்ரீதேவி, ஸம்ருத்தி தேவி இவர்களுடனிருப்பவருமான ஹே பிங்கள கணபதே தங்களை வணங்குகிறேன்.



## உச்சிஷ்ட கணபதி தியானம்

நீலாப்ஜம் தாடிமீ வீணாசாலிகுஞ்சாக்ஷஸூத்ரகம் ।
தததுச்கிஷ்ட நாமாயம் கணேச: பாது மேசக : ॥

### (நீல நிறம்)

(இ-ள்) நீலோத்பலம், மாதுளம்பழம், வீணை, நெல் கதிர், குன்றிமணியாலான ஜபமாலை, இவைகளைத் தரித் திருப்பவரும், நீலநிறமாக இருப்பவருமான உச்சிஷ்ட கணபதி யானவர் காப்பாற்றுவாராக.



## விக்ன கணபதி தியானம்

பாசாங்குசஸ்வதந்தாம்ர பலவாநாகு வாஹந : ।
விக்நம் ஹரது நஸ்ஸர்வம் ரக்தவர்ணோ விநாயக: ॥

### (சிவப்பு நிறம்)

(இ-ள்) பாசம், அங்குசம், தன்னுடைய தந்தம், மாம்பழம், இவைகளைத் தரித்துக் கொண்டிருப்பவரும், மூஞ்சூறு வாஹனத் தின்மேல் வீற்றிருப்பவரும், சிவப்பு நிறங்கொண்ட வருமான விநாயகர் நம்முடைய காரியங்களில் ஏற்படும் இடையூறுகளை யெல்லாம் போக்கடிப்பவராக இருக்கட்டும்.

## க்ஷிப்ரகணபதி தியானம்

தந்தகல்பலதாபாசரத்நகும்பாங்குசோஜ்வலம் ।
பந்தூககமநீயாபம் த்யாயேத் க்ஷிப்ரகணாதிபம் ॥

### (சிவப்பு நிறம்)

(இ-ள்) தந்தம், கல்பவிருக்ஷத்தின்கிளை, பாசம், ரத்ந கலசம், அங்குசம், (மாவெட்டி) இவைகளைத் தரித்துக் கொண் டிருப்பவரும், செம்பரத்தம்பூவைப் போல் அழகான சிவந்த சரீர காந்தியையுடையவருமான க்ஷிப்ரகணபதியைத் தியானம் செய்ய வேண்டும்.







## ஹேரம்ப கணபதி தியானம்

அபயவரதஹஸ்த : பாசதந்தாக்ஷமாலா
ஸ்ருணிபரசுததாநோ முத்கரம் மோதகஞ்ச |
பலமதிகதஸிம்ஹ : பஞ்சமாதங்கவக்த்ரோ
கணபதி ரதி கௌர : பாது ஹேரம்பநாமா ||

### (மஞ்சள் நிறம்)

(இ-ள்) அபயம், வரதம், என்னும் முத்திரைகளைத் தெரிவிக்கின்ற கைகளுடனிருப்பவரும், பாசம், தந்தம், ஜப மாலை, அங்குசம் கோடரி, முத்கரம், மோதசம், பழம் இவை களைத் தரித்துக்கொண்டிருப்பவரும், ஸிம்ஹவாஹனத்தி லிருப்பவரும், ஐந்து யானைமுகங்களுடனிருப்பவரும், அதிக மஞ்சள் நிறமுள்ளவருமான ஹேரம்பகணபதி நம்மைக் காப் பாற்றுவாராக.

## லக்ஷ்மீ கணபதி தியானம்

பிப்ராண : சுகபீஜ பூரகமிலந்மாணிக்யகும்பாங்குசாந்
பாசம் கல்பலதாஞ்ச கட்கவிலஸத் ஜ்யோதி:
ஸுதாநிர்ஜ்ஜா: |
ச்யாமேணாத்தஸரோருஹேண ஸஹிதம் தேவீதவையம்
சாந்திகே
கௌராங்கோ வரதாநஹஸ்தஸஹிதோ
லக்ஷ்மீகணேசோவதாத் ||

### (மஞ்சள் நிறம்)

(இ-ள்) கிளி, மாதுளம் பழம், மாணிக்கரத்னங்களுடன் கூடிய கலசம், அங்குசம், பாசம், கல்பலதை, சுத்தி, மிகவும் பிரகாசிக்கின்ற ஜ்யோதியாகிய அமிருதப் பிரவாஹத்தையுடைய வரும் (அமிருதப்பிரவாஹம்போல் மிகவும் பிரகாசிக்கின்ற ஒளியையுடையவரும்) நீலோத்பலத்தைக் கையில் வைத்துக் கொண்டிருக்கின்ற இரு தேவிகளை இரு பக்கத்திலும் உடைய வராயும், மஞ்சள் நிறமாக இருப்பவரும், வரதஹஸ்தத்துட னிருப்பவருமான லக்ஷ்மீ கணபதியானவர் நம்மைக் காப்பாற்று வாராக.

## சோடச கணபதிகள்



### உத்தண்ட கணபதி தியானம்

கல்ஹாரம்புஜபூரககதாதந்தேக்ஷுசாபம்ஸுமம்
பிப்ராணோ மணிகும்பசாலிகலசௌ பாசம்
ஸ்ருணிஞ்சாப்ஜகம் ।
கௌராங்க்யா ருசிராரவிந்தகரயா தேவ்யா ஸமாலிங்கித:
சோணாங்கச்சுபமாரநோது பஜதாம் உத்தண்ட
விக்நேச்வர: ॥



### (சிவப்பு நிறம்)

(இ-ள்) செங்கழுநீர் புஷ்பம், அல்லது நீலோத்பலம் 1, தாரை 2, மாதுளம்பழம் 3, கதை 4, தந்தம் 5, கரும்பு வில் 6, புஷ்பம் 7, ரத்னகலசம் 8, நெற்கதிர் 9, பாசக்கயிறு 10, அங்குசம் 11, பத்மம் 12, இவைகளைக் கைகளில் தரித்திருப்பவரும் மஞ்சள் நிறங் கொண்டவளும், அழகிய தாமரை மலரைக் கையில் வைத்துக் கொண்டிருப்பவளுமான தேவியினால் ஆலிங்கனம் செய்து கொண்டிருக்கப்பட்டவரும் சிவப்பு நிறமாக இருக் கின்றவருமான உத்தண்ட கணபதி தன்னை சேவிப்பவர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுப்பாராக.

### புவநேச கணபதி தியானம்

சங்கேக்ஷுசாபகுஸுமேஷுகுடாரபாச
சக்ரஸ்வதந்த ஸ்ருணிமஞ்ஜரிகாசராத்யை: ।
பாணிச்ரிதை: பரிஸமீஹிதபூஷணஸ்ரீ:
விக்நேச்வரோ விஜயதே தபநீய கௌர. ।

### (தங்க நிறம்)

(இ-ள்) சங்கு, கரும்புவில், புஷ்ப்பபாணம், கோடரி, பாசம், சக்ரம், தன்னுடைய தந்தம், மழு, பூங்கொத்து, அம்பு முதலியவைகளைக் கைகளில் வைத்துக் கொண்டிருப்பவரும், தான் விரும்பி அணிந்து கொண்டிருக்கிற உருக்கிவார்க்கப் பட்ட ஒளிபொருந்திய ஆபரணங்களால் ப்ரகாசிக்கின்றவரும், ஸ்வர்ணம் போன்ற சரீரகாந்தியையுடையவருமான (புவனேச கணபதி) விக்நேச்வரர் மிகவும் பிரகாசமாக விளங்குகிறார்.





## நிருத்த கணபதி தியானம்

பாசாங்குசபூப குடாரதந்த
சஞ்சத்கராக்லுப்த வராங்குளீயகம் I
பீதப்ரபம் கல்பதரோரதஸ்தம்
பஜாமி ந்ருத்தோபபதம் கணேசம் II

## (மஞ்சள் நிறம்)

(இ-ள்) பாசம், அங்குசம், அதிரசம், கோடரி, அசைகின்ற கைகளின் விரல்களில் அணியப்பட்ட சிறந்த மோதிரங்களையுடையவரும் (கழலுகின்ற சிறந்த மோதிரத்தையுடைய கைவிரல்களையுடையவரும்) மஞ்சள் நிறமாக இருப்பவரும், கல்பவிருக்ஷத்தினடியில் இருப்பவருமான நர்த்தன கணபதியை வணங்குகிறேன்.

## ஊர்தவ கணபதி தியானம்

கல்ஹாரசாலிகமலேக்ஷுகசாபபாண
தந்தப்ரரோஹககதீ கநகோஜ்வலாங்க: I
ஆலிங்கநோத்யதகரோ ஹரிதாங்கயஷ்ட்யா
தேவ்யாகரோது சுபமூர்த்வகணாதிபோ மே II

## (தங்க நிறம்)

(இ-ள்) செங்கழுநீர்ப்பூ, நெற்கதிர், தாமரைப்பூ, கரும்பு வில், அம்பு, தந்தத்தின் நுனி, கதை இவைகளைத் தரித்துக் கொண்டிருப்பவரும் தங்கத்தைப்போல் பிரகாசிக்கின்ற சரீர காந்தியையுடையவரும் (தங்கநிறமானவரும்) பச்சைநிறமுடைய தேவியினால் ஆலிங்கனம் செய்துகொள்ளப்பட்டவருமான ஊர்த்வகணபதி எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

## ஸரஸ்வதி தியானம்

தோர்பிர்யுக்தாசதுர்பி: ஸ்படிகமணிமயீமக்ஷமாலாம்ததாநா
ஹஸ்தேநைகேநபத்மம்ஸிதமபிசசுகம்புஸ்தகஞ்சாபரேண I
பாஸாகுந்தேந்து சங்கஸ்படிகமணிநிபாபாஸமாநாஸமாநா
ஸாமேவாக்தேவதேயம் நிவஸதுவதனே ஸர்வதா
ஸுப்ரஸந்நா II



(இ-ள்) நான்கு கைகளையுடையவளாயும், ஒரு கையில் ஸ்படிகமணிகளாலான அக்ஷமாலையையும், ஒரு கையில் வெண்தாமரை மலரையும், மற்றொரு கையில் கிளியையும், மற்றொரு கையினால் புத்தகத்தையும் வைத்திருப்பவளும், காந்தியினால் வெண்தாமரைமலர், சந்திரன், சங்கு, ஸ்படிக கற்கலான மணிகள் இவைகளைப் போல் மிக்க வெண்மை யான நிறத்துடன் ப்ரகாசிக் கின்றவளும், ஒப்பற்றவர்க்குக்கதி தேவதையான ஸரஸவதி மிகவும் மகிழ்ச்சியுடன் கூடியவளாக எப்பொழுதும் என்னுடைய வாக்கில் வசிப்பவளாக இருக் கட்டும்.

## ஸரஸ்வதி தியானம்

யாகுந்தேந்துதுஷாரஹாரதவளாயாசுப்ரவஸ்த்ராவ்ருதா
யாவீணாவரதண்டண்டிதகராயாச்வேதபத்மாஸநா ।
யாப்ருஹ்மாச்யுதசங்கரப்ரப்ருதிபி: தேவைஸ்ஸதாபூஜிதா
ஸாமாம்பாதுஸரஸ்வதீபகவதீநிச்சேஷஜாட்யாபஹா ॥

(இ-ள்) எவள் குந்தமலர் (முல்லையரும்பு) சந்திரன் பனி முத்துமாலை இவைகளைப் போல் வெண்மை நிறமுடைய வளோ, எவள் வெண்மையான ஆடையை உடுத்தி இருக் கிறாளோ, எவள் அழகான வீணையைக் கையில் வைத்திருக் கின்றாளோ, எவள் வெண்தாமரை மலரை ஆசனமாகக் கொண்டு அதில் வீற்றிருக்கின்றாளோ, எவள் பிரமன், மஹா விஷ்ணு, சங்கரன் முதலான தேவர்களால் எப்பொழுதும் பூஜிக்கப்படுகின்றாளோ, சோம்பலை முழுமையாக (அறியா மையை) போக்கடிப்பவயாக இருக்கிற பகவதி சரஸ்வதி என்னைக் காப்பாற்றட்டும்.

## ஸரஸ்வதி தியானம்

ஸரஸ்வதீம் சதுர்ஹஸ்தாம் ச்வேத் பத்மாஸநஸ்த்திதாம் ।
ஜடாமகுடஸம்யுக்தாம் சுக்லவர்ணாம் ஸிதாம்பராம் ॥
யக்ஞோபவீதஸம்யுக்தாம் முக்தாஹாரவிபூஷிதம் ।
புஸ்தகஞ்சாக்ஷஸூத்ரஞ்ச த்க்ஷிணே து கரத்வயே ॥
சுகம் பத்மம்ச வாமே து ததாநாம் சாருரூபிணீம் ।
வந்தே வாக்தேவதாம் தேவீம் கச்சபீவாதநப்ரியாம் ॥







(இ-ள்) நான்கு கைகளை யுடையவளும், வெண்தாமரை மலரில் வீற்றிருப்பவளும், ஜடாமகுடத்தை அணிந்திருப்பவளும், வெண்மையான நிறமுடையவளும், வெண்மையான ஆடையை உடுத்தியிருப்பவளும், யக்ஞோபவீதத்தை (பூணூல்) அணிந்திருப்பவளும், முக்தாஹாரத்தினால் அலங்கரிக்கப் பட்டவளும் வலது புறமுள்ள இருகைகளிலும், புத்தகத்தையும், ருத்ராக்ஷ மாலையையும், இடது புறமுள்ள இரு கைகளிலும் கிளியையும், தாமரை மலரையும் வைத்திருப்பவளும், மிக்க அழகுடையவளும், வீணை வாசிப்பதில் பிரியமுடையவளுமான வாக்தேவதையான ஸரஸ்வதி தேவியை வணங்குகிறேன்.

## ஸ்ரீ வல்லீச்வரீ தியானம்

ச்யாமாம் பங்சஜதாரிணீம் மணிலஸ்த்தாடங்ககர்ணோஜ்
வலாம் ।
தக்ஷேரம்பகராம் கரண்டமகுடாமர்த்தாஸநாம் சாம்பரீம் ॥
அந்யோந்யேக்ஷணஸம்யுதாம் சரவணோத்பூதஸ்யஸவ்
யேஸ்திதாம் ॥
கண்டோத்பாஸிதமாலிகாம் சசிமுகீம் வல்லீச்வரீம்பாவயே ॥

(இ-ள்) கருமைநிறங் கொண்டவளும் இடது கையில் தாமரை மலரை வைத்திருப்பவளும், ஒளி பொருந்திய மாணிக்க கற்கள் பதித்த தாடங்கம் அணிந்து கொண்டிருக்கிற காதுகளால் ப்ரகாசிக்கின்றவளும், தொங்கவிடப்பட்டிருக்கிற வலது கையை யுடையவளும், கரண்டமகுடம் என்னும் மகுடத்தை தரித்திருப்பவளும், ஷண்முகஸ்வாமியின் வலதுபுறத்தில், ஆஸநத்தின் ஒருபகுதியில் அமர்ந்திருப்பவளும், வேடவர் குலப்பெண்ணும், (ஸ்வாமியும் வள்ளி நாயகியும்) ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டிருப்பவர்களும், விளங்குகின்ற மாலையை அணிந்திருப்பவளும், சந்திரன் போன்ற அழகான முகத்தையுடையவளுமான வள்ளி நாயகியை வணங்குகிறேன்.





## தேவஸேநா தியானம்

பீதப்ரபாம்த்விநேத்ராம்சபூர்ணசந்திரநிபாநநாம் |
திவ்யாமபராம்ரத்நபூஷாம் மந்தாரஸுமமாலிகாம் ||
வாமேலம்பகராம் தக்ஷேஸரோருஹகாரம் சுபாம் |
ஸர்வாலங்கார ஸம்யுக்தாம் ஸர்வாபரண பூஷிதாம் ||
ஸேநாநீவாம்பாகஸ்த்தாம்முக்தாஹாரவிபூஷிதாம் |
மஹேந்த்ரதநயாம் தேவீம் தேவஸேநாமஹம் பஜே||

(இ-ள்) மஞ்சள் நிறமானவளும், இரண்டு கைகளை யுடையவளும், பூர்ணசந்திரனைப்போன்று அழகான முகத்தை யுடையவளும், ரத்நாபரணங்களையுடையவளும் மந்தார புஷ்பங்களாலான மாலையை அணிந்திருப்பவளும், தொங்க விடப்பட்ட இடதுகையையுடையவளும், வலது கையில் தாமரைமலரை வைத்திருப்பவளும், அழகாக இருப்பவளும், ஷண்முகக் கடவுளுக்கு இடதுபுறம் இருப்பவளும், முத்து மாலையை அணிந்திருப்பவளும், எல்லாவித ஆபரணங்களா லும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருப்பவளும், இந்திரனின் குமாரியு மான தேவஸேநா தேவியை வணங்குகிறேன்.

### ப்ராஹ்மீ தியானம்

சதுர்புஜாம் சதுர்வக்த்ராம் பீதமால்யாம்பரோஜ்வலாம் |
வரதாபயஹஸ்தாம்ச ஸாக்ஷமாலாம் ஸகண்டிகாம் ||
ஜடாமகுடஸம்யுக்தாம் ஸிம்ஹாவாஹன ஸுஸ்திதாம் |
ஸர்வாபரண ஸம்யுக்தாம் ப்ராஹ்மீம் த்யாத்வாப்ரபூஜயேத் ||

(இ-ள்) நான்கு முகங்களையும் நான்கு கைகளையும் உடையவளும் மஞ்சள் நிறமான ஆடை, மாலை இவைகளால் மிகவும் ப்ரகாசிக்கின்றவளாயும், வரதம் அபயம் என்னும் முத்திரைகளை கைகளில் பெற்றிருப்பவளும், உருத்திராக்க மாலையை அணிந்திருப்பவளும், ஸிம்ஹ வாஹனத்தின் மீது அமர்ந்திருப்பவளும், எல்லாவிதமான ஆபரணங்களாலும் அலங் கரிக்கப்பட்டிருப்பவளுமான ப்ராஹ்மீ தேவியை தியானம் செய்து பூஜிக்க வேண்டும்.







## மகேச்வரீ தியானம்

ஏகவக்த்ராம் த்ரிணேத்ராம் ச மஹாதேவீம் சதுர்புஜாம் |
ஜடாமகுடஸம்யுக்தாம் ஸுக்லவர்ணாம் ஸுசோபிதாம் ||
வரதாபயஹஸ்தாம் தாம் ம்ருகம் டங்கஞ் ச தாரிணீம் |
வ்ருஷவாஹஸமாரூடாம் வந்தே மாஹேச்வரீம் சுபாம் ||

(இ-ள்) ஒரு முகம் மூன்று கண்கள் நான்கு கைகள் இவை களையுடையவளும், ஜடாமகுடத்தைத் தரித்திருப்பவளும், வெண்மை நிறமாக இருப்பவளும், மிகவும் அழகாக பிரகாசிப் பவளும், வரதமுத்திரை அபய முத்திரை இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், ம்ருகம் (மான்) டங்கம் என்னும் வாத்யம் இவைகளைக் கைகளில் வைத்திருப்பவளும் வ்ருஷ வாகனத் தில் அமர்ந்திருப்பவளுமான மஹாதேவியான மாகேச்வரியை வணங்குகிறேன்.

## கௌமாரீ தியானம்

ஏகவக்த்ராம் த்விநேத்ராம்ச சதுர்புஜஸமந்விதாம் |
ஜடாமகுடஸம்யுக்தாம் நீலவர்ணாம் ஸுயௌவனாம் ||
வரதாபயஹஸ்தாம்தாம் வஜ்ரம் சக்திம் ச தாரீணீம் |
ஸர்வலக்ஷணஸம்பந்நாம் கௌமாரீம் தாம் விபாவயேத் ||

(இ-ள்) ஒருமுகம், இரண்டு கண்கள், நான்கு கைகள் இவைகளையுடையவளும், ஜடாமகுடத்தை அணிந்திருப்ப வளும், நீலநிறமான மேனியையுடையவளும், யௌவன வய துடையவளும், வரத முத்திரையையும், அபய முத்திரையையும் கைகளில் பெற்றிருப்பவளும், வஜ்ராயுதம், சக்தி ஆயுதம், இவை களைக் கைகளில் பெற்றிருப்பவளும், ஸாமுத்ரிகா லக்ஷணங்கள் எல்லாம் ஒருங்கே அமையப் பெற்றவளுமான கௌமாரீ தேவியை வணங்க வேண்டும்.

## வைஷ்ணவீ தியானம்

ஏகவக்த்ராம் த்விநேத்ராம் ச சதுர்புஜ ஸமன்விதாம் |
வராபயகராம் ச்யாமாம் சங்கம் சக்ரஞ்சதாரிணீயம் ||
நவயௌவன ஸம்பன்னாம் ஶ்ரீமத்கருடவாஹனாம் |
ஸர்வலக்ஷணஸம்பன்னாம் வைஷ்ணவீம் தேவிகாம் பஜே ||



(இ-ள்) ஒருமுகம், இரண்டு கண்கள் நான்கு கைகள் இவைகளையுடையவளும், அபயமுத்திரை, வரத முத்திரை, சங்கம், சக்ரம் இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும் கௌமார வயதைத் தாண்டி அடுத்த யௌவன வயதை அடைந் திருப்பவளும், கருட வாஹனத்தின் மீது அமர்ந்திருப்பவளும், ஸாமுத்ரிகாலக்ஷணங்கள் எல்லாம் ஒருங்கே அமையப் பெற்ற வளுமான வைஷ்ணவீ தேவியை வணங்குகிறேன்.



## வாராஹீ தியானம்

ஏகவக்தராம் த்விநேத்ராம் ச சதுர்புஜஸமன்விதாம் ।
க்ருஷ்ணாம்பரதாரம் தேவீம் வராஹ சக்ரஸம்யுதாம் ॥
ஹலமுஸல ஹஸ்தாம் தாம் வராபயகாரம் புஜாம் ।
ஸிம்ஹவாஹஸமாரூடாம் கிரீட மகுடோஜ்வலாம் ॥
ஸர்வாலங்கார ஸம்பன்னாம் வாராஹீம் பூஜயேத் புத: ॥

(இ-ள்) ஒருமுகம், இரண்டு கண்கள், நான்கு கைகள் இவைகளைப் பெற்றிருப்பவளும், கருப்பு நிறமுள்ள ஆடையை உடுத்திக்கொண்டிருப்பவளும், வராஹசக்ரத்தை பெற்றிருப்ப வளும், கலப்பை, உலக்கை இவைகளை ஆயுதங்களாகக் கைகளில் பெற்றிருப்பவளும், வரத முத்திரை அபய முத்திரை இவை களைக் கைகளில் பெற்றிருப்பவளும், ஸிம்ஹ வாஹனத் தில் அமர்ந்திருப்பவளும், கிரீட மகுடத்தை அணிந்திருப் பவளும், ஸாமுத்ரிகா லக்ஷணங்கள் எல்லாம் ஒருங்கே அமையப் பெற்றவளுமான வாராஹீ தேவியை புத்திசாலிகள் வணங்க வேண்டும்.

## மாஹேந்த்ரீ தியானம் (இந்திராணி)

ஏகவத்த்ராம் த்விநேத்ராம்ச சதுர்புஜ ஸமன்விதாம ।
ஸரத்னமகுடோபேதாம் ஹேமவர்ணஸ்வரூபிணீம் ॥
வராபயகராம் போஜாம் வஜ்ரம் சக்திம் சதாரிணீம் ।
மாஹேந்த்ரீம் மாதரம் வந்தே கஜவா ஹனஸம்ஸ்த்திதாம் ॥

(இ-ள்) ஒரு முகம், இரண்டு கண்கள், நான்கு கைகளை யுமுடையவளும் இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மகுடத்தை







அணிந்திருப்பவளும், பொன்னிறமான மேனியை உடையவளும், வரத முத்திரை, அபயமுத்திரை, வஜ்ராயுதம், சக்தி ஆயுதம் இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், யானை வாகனத்தின் மீது அமர்ந்திருப்பவளுமான மாஹேந்த்ரீ தாயை (இந்திராணி) வணங்குகிறேன்.

## சாமுண்டா தியானம்

சதுர்புஜாம் த்ரிணேத்ராம்ச காலமேக ஸமப்ரபாம் ।
தம்ஷ்ட்ராக்ராளவதனாம் வ்யாக்ரசர்மாம்பரோஜ்வலாம் ॥
ஸகட்காம் சூலஹஸ்தாம்ச கபாலாபயதாரிணீம் ।
கிங்கிணீமாலயாயுக்தாம் கரண்டமகுடான் விதாம் ॥
சிரோமாலா ஸமாயுக்தாம் ப்ரேதவா ஹநஸமஸ்திதாம் ।
பீநஸ்தனீம் யௌவனாம்ச சாமுண்டாம்பாவயேத்ஸதா ॥

(இ-ள்) நான்கு கைகள், மூன்று கண்கள் இவைகளையுடையவளும், காளமேகம் போன்று கருப்பான் மேனியையுடையவளும், கோரைப்பற்களுடன் கூடிய பயங்கரமான முகத்தையுடையவளும், புலித்தோலை ஆடையாக உடுத்திக் கொண்டிருப்பவளும், கத்தி, சூலம், கபாலம், அபயமுத்திரை இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், சிறிய மணிகளாலான மாலையை அணிந்திருப்பவளும், கரண்டமகுடம் என்னும் மகுடத்தைத் தரித்திருப்பவளும், மனிதர்களின் தலைகளை (முண்டங்களை)க் கொண்ட மாலையை அணிந்திருப்பவளும், ப்ரேதத்தை (சவத்தை) வாஹானமாக அமைத்துக் கொண்டு அதன்மேல் வீற்றிருப்பவளுமான சாமுண்டியை எப்பொழுதும் வணங்க வேண்டும்.

## மூலஸ்தான அம்பிகா தியானம்

சதுர்புஜாம் சந்தரநிபாம் த்ரிணேத்ராம்
சந்த்ராவதம்ஸாம் சசிதுல்யவக்த்ராம் ।
குடாரராஜீவவராபயோஜ்வலாம்
மூலப்ரதேசஸ்திதமாதரம் பஜே ॥



(இ-ள்) மூன்று கண்களையும், நான்கு கைகளையும் உடையவளும், சந்திரனைப் போன்று வெண்மையான நிறங் கொண்டவளும், சந்திரனைப் போன்று மனதைக் கவரும் அழகான முகத்தையுடையவளும், சந்திரகலையை முடியில் ஆபரணமாகக் கொண்டவளும், கோடரி நீலோத்பலம், வரத முத்திரை, அபய முத்திரை இவைகளைப் பெற்று விளங்கு பவளும், மூலஸ்தானத்திலிருப்பவளுமான தாயை (அம்பி கையை) வணங்குகிறேன்.



## சிவகாமீ தியானம்

ஏகவக்த்ராம் த்விநேத்ராம்ச ஸர்வாபரண ஸம்யுதாம் |
ப்ரலம்பவாமஹஸ்தாஞ்ச தக்ஷஹஸ்தோத்பலாம் சிவாம் ||
ஸவ்யபாதஸ்த்திதாம் தேவீம் குஞ்சிதேதரஜாநுகாம் |
சிவகாமேச்வரீம் வந்தே சிவதாண்டவ ஸாக்ஷிணீம் ||

(இ-ள்) ஒரு முகத்தையும் இரண்டு கண்களையுமுடைய வளும், ஆபரணங்கள் யாவற்றாலும் அலங்கரிக்கப்பட்டிருப்ப வளும், தொங்கவிட்டுக்கொண்டிருக்கிற இடதுகையையும், நீலோத்பலமலரைக் கொண்ட வலது கையையுமுடையவளும், க்ஷேமத்தைச் செய்பவளும், வலது காலை நேராகவும், இடது காலை கொஞ்சம் மடக்கியும் வைத்துக் கொண்டிருப்பவளும், பரமேச்வரனின் தாண்டவத்தின் பொழுது பக்கத்தில் இருப் பவளுமான சிவகாமேச்வரியை வணங்குகிறேன்.

## காமாக்ஷீ தியானம்

சதுர்புஜே சந்த்ரகலாவதம்ஸே
குசோந்நதே குங்குமராகசோணே |
புண்ட்ரேக்ஷு பாசாங்குசபுஷ்பபாணஹஸ்தே
நமஸ்தே ஜகதேகமாத: ||

(இ-ள்) நான்கு கைகளையுடையவளே, சந்திரகலை யினால் அலங்கரிக்கப்பட்ட சிரஸையுடையவளே, பருத்த ஸ்தன பாரங்களையுடையவளே, குங்குமம் போன்று சிவந்த மேனியை யுடையவளே, தாமரை மலர், கரும்பு, பாசக்கயிறு, அங்குசம்





அணிந்திருப்பவளும், பொன்னிறமான மேனியை உடைய வளும், வரத முத்திரை, அபயமுத்திரை, வஜ்ராயுதம், சக்தி ஆயுதம் இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், யானை வாகனத்தின் மீது அமர்ந்திருப்பவளுமான மாஹேந்த்ரீ தாயை (இந்திராணி) வணங்குகிறேன்.

## சாமுண்டா தியானம்

சதுர்புஜாம் த்ரிணேத்ராம்ச காலமேக ஸமப்ரபாம் ।
தம்ஷ்ட்ராக்ராளவதனாம் வ்யாக்ரசர்மாம்பரோஜ்வலாம் ॥
ஸகட்காம் சூலஹஸ்தாம்ச கபாலாபயதாரிணீம் ।
கிங்கிணீமாலயாயுக்தாம் கரண்டமகுடான் விதாம் ॥
சிரோமாலா ஸமாயுக்தாம் ப்ரேதவா ஹநஸமஸ்திதாம் ।
பீநஸ்தனீம் யௌவனாம்ச சாமுண்டாம்பாவயேத்ஸதா ॥

(இ-ள்) நான்கு கைகள், மூன்று கண்கள் இவைகளை யுடையவளும், காளமேகம் போன்று கருப்பான் மேனியை யுடையவளும், கோரைப்பற்களுடன் கூடிய பயங்கரமான முகத்தையுடையவளும், புலித்தோலை ஆடையாக உடுத்திக் கொண்டிருப்பவளும், கத்தி, சூலம், கபாலம், அபயமுத்திரை இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், சிறிய மணிகளா லான மாலையை அணிந்திருப்பவளும், கரண்டமகுடம் என்னும் மகுடத்தைத் தரித்திருப்பவளும், மனிதர்களின் தலை களை (முண்டங்களை)க் கொண்ட மாலையை அணிந்திருப்ப வளும், ப்ரேதத்தை (சவத்தை) வாஹானமாக அமைத்துக் கொண்டு அதன்மேல் வீற்றிருப்பவளுமான சாமுண்டியை எப்பொழுதும் வணங்க வேண்டும்.

## மூலஸ்தான அம்பிகா தியானம்

சதுர்புஜாம் சந்தரநிபாம் த்ரிணேத்ராம்
சந்த்ராவதம்ஸாம் சசிதுல்யவக்த்ராம் ।
குடாரராஜீவவராபயோஜ்வலாம்
மூலப்ரதேசஸ்திதமாதரம் பஜே ॥



(இ-ள்) மூன்று கண்களையும், நான்கு கைகளையும் உடையவளும், சந்திரனைப் போன்று வெண்மையான நிறங் கொண்டவளும், சந்திரனைப் போன்று மனதைக் கவரும் அழகான முகத்தையுடையவளும், சந்திரகலையை முடியில் ஆபரணமாகக் கொண்டவளும், கோடரி நீலோத்பலம், வரத முத்திரை, அபய முத்திரை இவைகளைப் பெற்று விளங்கு பவளும், மூலஸ்தானத்திலிருப்பவளுமான தாயை (அம்பி கையை) வணங்குகிறேன்.



## சிவகாமீ தியானம்

ஏகவக்த்ராம் த்விநேத்ராம்ச ஸர்வாபரண ஸம்யுதாம் ।
ப்ரலம்பவாமஹஸ்தாஞ்ச தக்ஷஹஸ்தோத்பலாம் சிவாம் ॥
ஸவ்யபாதஸ்த்திதாம் தேவீம் குஞ்சிதேதரஜாநுகாம் ।
சிவகாமேச்வரீம் வந்தே சிவதாண்டவ ஸாக்ஷிணீம் ॥

(இ-ள்) ஒரு முகத்தையும் இரண்டு கண்களையுமுடைய வளும், ஆபரணங்கள் யாவற்றாலும் அலங்கரிக்கப்பட்டிருப்ப வளும், தொங்கவிட்டுக்கொண்டிருக்கிற இடதுகையையும், நீலோத்பலமலரைக் கொண்ட வலது கையையுமுடையவளும், க்ஷேமத்தைச் செய்பவளும், வலது காலை நேராகவும், இடது காலை கொஞ்சம் மடக்கியும் வைத்துக் கொண்டிருப்பவளும், பரமேச்வரனின் தாண்டவத்தின் பொழுது பக்கத்தில் இருப் பவளுமான சிவகாமேச்வரியை வணங்குகிறேன்.

## காமாக்ஷீ தியானம்

சதுர்புஜே சந்த்ரகலாவதம்ஸே
குசோந்நதே குங்குமராகசோணே ।
புண்ட்ரேக்ஷு பாசாங்குசபுஷ்பபாணஹஸ்தே
நமஸ்தே ஜகதேகமாத: ॥

(இ-ள்) நான்கு கைகளையுடையவளே, சந்திரகலை யினால் அலங்கரிக்கப்பட்ட சிரஸையுடையவளே, பருத்த ஸ்தன பாரங்களையுடையவளே, குங்குமம் போன்று சிவந்த மேனியை யுடையவளே, தாமரை மலர், கரும்பு, பாசக்கயிறு, அங்குசம்



புஷ்பபாணம் இவைகளைக் கைகளில் உடையவளே உலகுக்கெல்லாம் ஒப்பற்ற ஒரே தாயாக இருக்கின்றவளே உன்னை வணங்குகிறேன்.

## காமகோடி தியானம்

ச்யாமவர்ணாம் த்ரிணேத்ராம் ச வராபயகராம்புஜாம் ।
ஸபத்மாம் ஸாக்ஷமாலாம் ச ஸர்வாபரணபூஷிதாம் ॥
ஸர்வலக்ஷணஸம்பன்னாம் ஸுஸ்மிதாம் ஸுமநோஹாரம் ।
காமகோடீமஹம் வந்தே காமிதார்த்த ப்ரதாயினீம் ॥

(இ-ள்) கருமைநிறங்கொண்ட மேனியையுடையவளும், மூன்று கண்களையுடையவளும், கைகளில் வரதமுத்திரை, அபய முத்திரை, தாமரைமலர், ஜபமாலை இவைகளையுடையவளும், ஆபரணங்கள் யாவற்றாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருப்பவரும், ஸாமுத்திரிகா லக்ஷணத்திற்கிணங்க ஸர்வ லக்ஷணங்களும் ஒருங்கே அமையப்பெற்ற அவயவங்களையுடையவளும், புன்முருவல்பூத்த முகத்தையுடையவளும், மிக்க அழகுடையவளும், பக்தர்களுக்கு அவர்கள் விரும்பிய வரங்களைக்கொடுப்பவளுமான காமகோடியை வணங்குகிறேன்.

## கனகப்ரபா தியானம்

சதுர்புஜாம் த்ரிணேத்ராஞ்ச கரண்டமகுடான்விதாம் ।
பாசாங்குசதராம் சாந்தாம் வராபயகரான்விதாம் ॥
துகூலவஸனோபேதாம் ஸுப்ரஸன்னமுகாம்புஜாம் ।
பத்மாஸனஸ்த்திதாம் தேவீம் வந்தே தாம் கனகப்ரபாம் ॥

(இ-ள்) நான்கு கைகளையும் மூன்று கண்களையுமுடையவளும், சிறந்த கரண்ட மகுடத்தைத் தரித்திருப்பவளும், பாசக்கயிறு, அங்குசம், வரதமுத்திரை, அபயமுத்திரை இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், மிக்க மகிழ்ச்சி பொருந்திய முகத்தையுடையவளும், பத்மாஸனத்தில் வீற்றிருப்பவளுமான கனகப்ரபா தேவியை வணங்குகிறேன்.



## ஸுந்தரீ தியானம்

ரக்தவர்ணாம் த்ரிணேத்ராஞ்ச கரண்டமகுடோஜ்வலாம் |
சித்ரவஸ்த்ரதராம் சாந்தாம் ஸர்வாபரணபூஷிதாம் ||
வரதாபயஹஸ்தாம் தாம் பங்கஜோத்பலதாரிணீம் |
தேவீம் தாம் ஸுந்தரீம் வந்தே சிவவாமகதாமுமாம் ||

(இ-ள்) சிவந்த மேனியையுடையவளும், மூன்று கண்களையுடையவளும், கரண்ட மகுடத்தை தரித்திருப்பதால் மிகவும் பிரகாசிப்பவளும், பலவிதமான நிறங்களையுடைய வஸ்த்திரத்தைத் தரித்திருப்பவளும், ஆபரணங்கள்யாவற்றிலும் அலங்கரிக்கப்பட்டிருப்பவளும், வரத முத்திரை, அபய முத்திரை, தாமரை மலர், (கருநெய்ததில் மலர் அல்லது அல்லி மலர்) நீலோத்பல மலர் இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவளும், பரமேச்வரனின் இடதுபுறம் வீற்றிருப்பவளுமான ஸுந்தரி தேவியை வணங்குகிறேன்.



## உஷாதேவி தியானம்

த்விநேத்ராம் த்விபுஜாம் சாந்தாம் கரண்டமகுடான்விதாம் |
ப்ரலம்ப வாமஹஸ்தாம் தாம் ச்யாமாம் லக்ஷணலக்ஷிதாம் ||
ப்ரபுல்லோத்பல ஹஸ்தாம் ச ஸர்வாபரண பூஷிதாம் |
ஸூர்யஸ்ய வாமபாகே ஸ்ரீ உஷாதேவீம் ப்ரபூஜயேத் ||

(இ-ள்) இரண்டு கண்களையும், இரண்டு கைகளையுடையவளும், சாந்தஸ்வரூபமுடையவளும், கரண்ட மகுடத்தைத் தரித்துக் கொண்டிருப்பவளும், தொங்கவிடப்பட்ட இடது கையையுடையவளும், கருப்பான மேனியை யுடையவளும், சாமுத்ரிகா லக்ஷணம் பொருந்தியவளும், மலர்ந்த நீலோத்பலமலரைக் கையில் கொண்டவளும், நிறைந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளுமான உஷாதேவியை சூரியனுக்கு இடதுபுறத்தில் இருக்குமாறு அமைத்து பூஜிக்க வேண்டும்.





## ப்ரத்யுஷாதேவி தியானம்

த்விபுஜாம்ச த்ரிணேத்ராம்ச ரக்தவர்ணாம்ஸுயௌவனாம் ।
ரக்தமால்யாம்பரதாரம் கிரீட மகுடோஜ்வலாம் ॥
தக்ஷஹஸ்தே அம்புஜஸம்யுக்தாம் லம்பவாமகராம் சுபாம் ।
ஸர்வலக்ஷணஸம்பன்னாம் ஸர்வாபரண பூஷிதாம் ॥
ஸூர்யஸ்ய ஸவ்யபாகேதாம் ப்ராஜமானாம் ஸுருபிணீம் ।
ப்ரத்யுஷேதி ஸமாக்யாதாம் வந்தேஹம் ஸுஸமாஹித: ॥

(இ-ள்) மூன்று கண்களையும் இரண்டு கைகளையுமுடையவளும், சிவந்த மேனியையுடையவளும், நல்ல யௌவன வயதையுடையவளும், சிவப்புநிற ஆடை, மாலை இவைகளையுடையவளும், கிரீட மகுடத்தை அணிந்து கொண்டிருப்பதால் மிகவும் பிரகாசிக்கின்றவளும், வலதுகையில் தாமரை மலரையுடையவளும், தொங்கிவடப்பட்ட இடது கையையுடையவளும், ஸாமுத்ரிகா லக்ஷணங்கள் யாவும் ஒருங்கே அமையப் பெற்றவளும், ஆபரணங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டவளும், ஸூரியனுக்கு இடது பக்கலில் விளங்குகின்றவளும், அழகானவளும், ப்ரத்யுஷையென்று அழைக்கப்படுபவளுமான தேவியை வணங்குகிறேன்.

## பூர்ணா தியானம்

த்விநேத்ராம் த்விபுஜாம் ச்யாமாம் கரண்டமகுடான்விதாம் ।
வரதோத்பலஸம்யுக்தாம் சாஸ்த்ருதக்ஷஸ்த்திதாம் சுபாம் ॥
கிஞ்சித்குஞ்சிததக்ஷாங்க்ரீம் ஸர்வாபரணபூஷிதாம் ।
த்யாயேத்பூர்ணாம்மஹாதேவீம் சாஸ்த்ருபத்நீம்
குணோஜ்வலாம் ॥

(இ-ள்) இரண்டு கண்கள், இரண்டு கைகள் இவைகளையுடையவளும், கருமை நிறமான மேனியையுடையவளும், கரண்டமகுடம் என்னும் மகுடத்தை தரித்திருப்பவளும், வரத முத்திரை, நீலோத்பலமலர் இவைகளைக் கைகளில் வைத்திருப்பவளும், சாஸ்தாவின் (ஐயனாரின்) வலது பக்கத்தில் வீற்றிருப்பவளும், சுபத்தைச் செய்பவளும் கொஞ்சம் மடித்துவைத்துக் கொள்ளப்பட்ட வலது முழங்காலை உடையவளாக உட்கார்ந்



திருப்பவளும், ஆபரணங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்ட வளும், நற்குணங்களினால் ப்ரகாசிக்கின்றவளும் ஐயனாரின் மனைவியுமான பூர்ணா என்கிற பெயருடைய மஹாதேவியை தியானம் செய்ய வேண்டும்.



## புஷ்கலா தியானம்

த்விநேத்ராம் த்விபுஜாம் பீதாம் கிரீட மகுடோஜ்வலாம் ।
பாசஹ்ஸ்தாம் மனோக்ஞாங்கீம் ஸர்வாபரணபூஷிதாம் ॥
ஈஷத்குஞ்சிதவாமாங்க்ரீம் ஸர்வாலங்காரசோபிதாம் ।
சாஸ்த்ருவாமஸ்த்திதாம் தேவீம் வந்தேஹம்
புஷ்கலாம்சுபாம் ॥

(இ-ள்) இரண்டு கண்கள், இரண்டு கைகள், இவைகளை யுடையவளும், மஞ்சள் நிறமான மேனியையுடையவளும், கிரீட மகுடம் என்கிற மகுடத்தைத் தரித்திருப்பவளும், பாசக் கயிறையுடையவளும், அழகான மேனியையுடையவளும், நிறைய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், கொஞ்சம் வளைத்திருக்கும்படி மடக்கிவைத்துக் கொள்ளப்பட்ட இடது காலையுடையவளும், நன்கு அலங்கரிக்கப்பட்டு சோபிக்கின்ற வளும், சாஸ்தாவின் இடதுபுறம் வீற்றிருப்பவளும் சாஸ்தாவின் மனைவியான புஷ்கலா தேவியை வணங்குகிறேன்.

## த்ரௌபதீ தியானம்

த்விநேத்த்ராம் ஏகவக்த்ராம்ச பத்மாபயகராம்புஜாம் ।
ஹரித்ராவஸ்த்ர ஸம்யுக்தாம் கிரீடமகுடோஜ்வலாம் ॥
மல்லிகா புஷ்பஸம்யுக்தாம் ஸர்வாபரணபூஷிதாம் ।
ஞானவைராக்யதாத்ரீஞ்ச மோக்ஷஸாம்ராஜ்யகாரிணீம் ॥
கபாலபாசடக்கோக்ர சூலஹேதி விராஜிதம் ।
த்ரௌபதீம் ஹேமவர்ணாங்கீம் ஸர்வமங்கள தாயினீம் ॥

(இ-ள்) ஒரு முகம், இரண்டு கண்கள் இவைகளை யுடையவளும், ஒரு கையில் தாமரையையும், மற்றொரு கையில் அபய முத்திரையையும் பெற்றிருப்பவளும், ஸ்வர்ணம் போன்ற மஞ்சள் நிறமான மேனியையுடையவளும் மஞ்சள்





நிறமான ஆடையை உடுத்தி இருப்பவளும், கிரீட மகுடத்தினால் ப்ரகாசிக்கின்றவளும், மல்லிகை மலரால் கட்டப்பட்ட மாலையையுடையவளும், ஆபரணங்கள் யாவற்றிலும் அலங்கரிக்கப்பட்டவளும், ஞானம், வைராக்யம் இவைகளைக் கொடுப்பவளும், மோக்ஷஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பவளும் (மற்ற கைகளில்) கபாலம், பாசக்கயிறு, உடுக்கை, சூலம், கோடரி இவைகளைப் பெற்றிருப்பவளும், எல்லா நன்மைகளையும் செய்பவளுமான திரௌபதியை வணங்குகிறேன்.

## சட்டநாதஸ்வாமி தியானம்

பாலம் நீலஜடாதரம் கஸ்தூரீதிலகோஜ்வலம் ।
தண்டாபயகரம் காலம் த்ருதகஞ்சுகமிஷ்டதம் ॥
ப்ரபுல்லநயனம் சாந்தம் புஷ்போஷ்ணீஷவிராஜிதம் ।
ஸ்ரீமத்ப்ரும்மபுராதீசம் சட்டநாதமுபாஸ்மஹே ॥

(இ-ள்) இளம் வயதுடையவராயும் (சிறுவனாகவும்) நிலநிறம் கொண்ட (கருமையான) ஜடாபாரத்தையுடையவராயும், நெற்றியில் இடப்பட்ட கஸ்தூரி திலகத்தினால் மிகவும் பிரகாசிப்பவராயும், தண்டம், அபயம் இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவராயும், இயமன் போன்றவரும், அங்கியை (சட்டை) அணிந்திருப்பவராயும், விரும்பயவற்றைக் கொடுப்பவராயும், மலர்ந்த கண்கள்ளையுடையவராயும், சாந்தமான தோற்றத்தையுடையவராயும், மலர்களால் செய்யப்பட்ட தலைப்பாகையை அணிந்திருப்பவராயும், சீர்காழி என்னும் ப்ருமம புரத்திற்கதிபராயுமிருக்கிய சட்டநாத ஸ்வாமியை வணங்குவோமாக.

## சந்திரசேகர தியானம்

விபுலவதன நேத்ரம் ஸௌம்ய ச்ருங்காரபாவம் ।
அபயவரதஹஸ்தம் திவ்யபூஷோஜ்வலாங்கம் ॥
ருஜுதனுஸமபாதம் பத்மபீடேஸ்திதம்தம் ।
பரசுஹரிணபாணிம் வாமபார்ச்வேபவாநீம் ॥

(இ-ள்) பரந்த முகத்தையும் விசாலமான கண்களையுமுடையவரும், ச்ருங்கார பாவத்துடன் கூடிய அழகிய தோற்ற



முடையவரும், அபய முத்திரை, வரத முத்திரை, பரசு, மான் இவைகளைக் கைகளில் கொண்டவரும், சிறந்த ஆபரணங்க ளால் பிரகாசிக்கின்றவரும், உடல் நிமிர்ந்தும், பாதங்கள் ஸம மாக இருக்குமாறு பத்மபீடத்தில் நின்று கொண்டிருக்கின்ற வரும், இடது புறத்தில் பவானி அம்மையையுடைய சந்திர சேகரரை வணங்குகிறேன்.



## ஸோமாஸ்கந்த தியானம்

ஏகானனம் வேத்கரம் த்ரிலோசனம்
சுப்ராம்சுகம் ஸர்ப விசேஷே பூஷிதம் ।
ம்ருகஞ்சடங்கம் கடகம் வரம்கரை -
ர்வஹந்தமீட்யம் மணிவித்ருமாபம் ॥
வாமேதுபத்ரம் மகரஞ்சதக்ஷேகர்ணை -
ர்தரந்தம் மகுடார்த சந்த்ரம் ।
லம்பாசயம் தக்ஷிண்வாமபாதம்
ஸோமாகுஹம் சம்புமஹம் நமாமி ॥

(இ-ள்) ஒருமுகம், மூன்று கண்கள் இவைகளையுடைய வரும், பாம்பைக்கையில் கொண்டவரும், வெண்மையான ஆடையை உடுத்தியிருப்பவரும், ஸர்பாபரணங்களால் அலங் கரிக்கப்பட்டவரும், மான், டங்கம், கடகம், வரதமுத்திரை இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவரும், வேண்டிய வரனை யளிப்பவரும், பவழம் போன்ற சிவந்த மேனியையுடையவரும், இடது காதில் ப்தர குண்டலத்தையும், வலது காதில் மகர (முதலை) வடிவமான குண்டலத்தையுமணிந்திருப்பவரும் மகுடத்தில் சந்திரகலையை அணிந்திருப்பவரும், மடக்கிய வலது காலும் தொங்கவிடப்பட்ட இடது காலையுமுடையவரும், பார்வதி, சுப்பிரமணியர் இவர்களுடன் இருக்கிற சம்புவை (பரமேச் வரனை) வணங்குகிறேன்.

## நடேச தியானம்

சய்யாபஸ்மாரகோர்த்வஸ்த்திதபதவிலஸந்வாமமுத்ருதபாதம்
ஜ்வாலாமாலாஸுமத்யே நடபணிசிரஸிஸ்தூலமாஸேதிவாந்
ய: ।





பஸ்மோத்தூளிதமங்கவித்ருமநிபம் ஹஸ்தாக்ரபாதாக்ரயோ:
அக்நிம் தோலவராபயம் டமருகம் த்ருத்வா நடேசம்பஜே ॥

(இ-ள்) படுத்திருக்கிற அபஸ்மாரன் என்னும் அரக்கன் மீது (இடது) காலை தூக்கி வைத்துக்கொண்டும், வலது காலைப் பதியவைத்துக் கொண்டிருப்பவரும், அக்னிஜ்வாலைகளின் வரிசைகளுக்கு நடுவில் விளங்குபவரும் படமெடுத்தாடுகின்ற பாம்பின் தலையில் ஸ்தூலமாக அமர்ந்திருப்பவரும், (இப்படி அமர்ந்திருப்பது அபஸ்மாரன் மீது காலை வைத்துக் கொள்ளாத சமயம் என்று அறிய வேண்டும்) திருநீறு பூசப்பட்ட சரீரத்தை யுடையவரும், பவழம் போல் சிகப்பு நிறம் கொண்ட உள்ளங் கைகள், உள்ள கால்களையுடையவரும், அக்னி (நெருப்பு) உடுக்கை தொங்கப்போட்டுள்ள கை, வரத முத்திரை அபய முத்திரைகளை முறையே பெற்றிருப்பவருமான நடேசரை வணங்குகிறேன்.

## தண்டபாணி தியானம்

கல்பத்ருமம் ப்ரணமதாம் கருணாலவாலம்
ஸ்கந்தம் புஜத்வயமநாமயமேகவக்த்ரம் ।
கௌபீந சோபிததநும் கடிபத்த ஹஸ்தம்
பாலம் கிரீந்த்வஸதிம் பஜேத்தண்டபாணிம் ॥

(இ-ள்) ஒரு முகம், இரண்டு கைகள் இவைகளையுடையவரும், நல்ல த்ருடமான சரீரத்தை உடையவரும் தன்னை வணங்கியவர்கட்கு கல்ப வீருட்சத்தைப் போல் வேண்டிய வற்றைக் கொடுப்பவரும், கருணைக் கடலும், இடுப்பில் வைத்துக் கொள்ளப்பட்ட ஒரு கையையும் மற்றொரு கையில் தண்டத்தையும் உடையவரும், கௌபீனத்தை தரித்திருப்பவரும், மலையில் வாழ்பவரும், பாலவடிவில் இருப்பவருமான ஸ்கந்தனை தண்டபாணியை வணங்குகிறேன்.

## தக்ஷிணாமூர்த்தி தியானம்

வடவிடபிஸமீபே பூமிபாகே நிஷண்ணம்
ஸகலமுனி ஜனானாம் ஞானதாதாரமாராத் ।



த்ரிபுவனகுருமீசம் தக்ஷிணாமூர்த்திமீசம்
ஜனனமரணதுக்கச்சேததக்ஷம் நமாமி ||

(இ-ள்) வடவிருக்ஷத்தினடியில் பூமியில் அமர்ந்திருப்பவரும், ஸமீபத்தில் சூழ்ந்திருக்கின்ற முனிவர்களுக்கு ஞானத்தையளிப்பவரும் (போதிப்பவரும்) ஜனனமரண (பிறப்பு இறப்பு) துக்கத்தைப் போக்கடிக்க வல்லவரும், மூன்று உலகங்களுக்கும் குருவாக இருப்பவருமான தக்ஷிணாமூர்த்தி உருவமைந்த பரமேஸ்வரனை வணங்குகிறேன்.

## தக்ஷிணாமூர்த்தி தியானம் (2)

புஸ்தகம் ஞானமுத்ராம் ச டக்காம் வஹ்னிம் கரைர்தரன் |
வடமூலகதம் சம்பும் வந்திகம் ஸநகாதிபி: ||
த்ருதருத்ராக்ஷபூதிஞ்ச ஸ்மிதாஸ்யம்ச ஜடாதரம் |
திவ்யஞானப்ரதாதாரம் தக்ஷிணாமூர்த்திமாச்ரயே ||

(இ-ள்) புஸ்தகம், ஞானமுத்திரை, டக்கா (உடுக்கை) நெருப்பு இவைகளைக் கைகளில் வைத்திருப்பவரும், ஜடையைத் தரித்திருப்பவரும், புன்முறுவலுடன் கூடிய முகத்தையுடையவரும், வடவிருக்ஷத்தினடியில் வீற்றிருப்பவரும், ஸநக ஸநந்தனாதி முனிவர்களால் வணங்கப்பட்டவரும், மோக்ஷ் ஞானத்தை உபதேசிப்பவருமான தக்ஷிணாமூர்த்தி உருவில் அமைந்த பரமேஸ்வரனை வணங்குகிறேன்.

## பிரமன் தியானம்

பீதவர்ண ஸமாயுக்தம் சதுராஸ்யம் சதர்புஜம் |
புஸ்தகம் ஞானமுத்ராம்ச ஸ்வக்ஷஸூத்ரம் கமண்டலும் ||
தரந்தம் முஞ்சிஸூத்ரம்தம் ஜடாமகுட மண்டிதம் |
வீராஸநஸ்திதம் வந்தே ப்ருஹ்மாணம் பாரதீ பதிம் ||

(இ-ள்) வெண்மையான மேனியையுடையவரும், நான்கு முகங்களையும், நான்கு கைகளையும், உடையவரும் புத்தகம், ஞானமுத்திரை, அழகான ஜபமாலை, கமண்டலு இவைகளைக் கைகளில் பெற்றிருப்பவரும், முஞ்சிப் புல்லாலான கயிற்றை









இடுப்பில் கட்டி இருப்பவரும், ஜடாமகுடத்தினால் சோபிக்கின்றவரும், வீராஸநத்தில் வீற்றிருக்கின்ற ஸரஸ்வதியின் கணவரான ப்ரும்மாவை வணங்குகிறேன்.

## பைரவ தியானம்

ரக்தஜ்வாஜடாதரம சசிதரம் ரக்தாங்கதேஜோமயம் ।
டம்க்காசூலகபாலபாசகதரம் ரக்ஷாகரம் பைரவம் ॥
நிர்வாணம் கநவாஹனம் த்ரிநயனஞ்சாநந்தகோலாஹலம் ।
வந்தே பூதபிசாசநாதவடுகம் க்ஷேத்ரஸ்யபாலம் கபம் ॥

(இ-ள்) சிவந்த ஜ்வாலைகளையுடைய ஜடையை தரித்திருப்பவரும், சந்திரனை முடியில் தரித்திருப்பவரும், சிவந்த மேனியையுடையவரும், ஒளிமயமாக விளங்குபவரும் உடுக்கை, சூலம், கபாலம் பாசக்கயிறு இவைகளை வைத்திருப்பவரும், உலகத்தைக் காப்பவரும், பாவிகளுக்கு பயங்கரமான தோற்றத்தையுடையவரும், நிர்வாணமாக இருப்பவரும், நாயை வாஹனமாகக் கொண்டவரும், மூன்று கண்களையுடையவரும், எப்பொழுதும் ஆனந்தத்தினால் மிகுந்த கோலாஹலமுடையவரும் (ஆனந்த வடிவமாக இருப்பவரும்) பூதகணங்கள், பிசாசுக் கூட்டங்கள் இவைகளுக்குத் தலைவனாக இருப்பவரும், க்ஷேத்ரபாலகருமான பைரவரை வணங்குகிறேன்.

## அஸிதாங்க பைரவ தியானம்

த்ரிணேத்ரம் வரதம் சாந்தம் முண்டமாலாவிபூஷிதம் ।
ச்வேதவர்ணம் க்ருபாமூர்த்திம் பைரவம் குண்டலோஜ்வலம் ॥
கதாகபாலஸம்யுக்தம் குமாரஞ்ச திகம்பரம் ।
பாணம் பாத்ரஞ்ச சங்கம்ச அக்ஷமாலாம் கமண்டலும் ॥
நாகயக்ஞோபவீதஞ்ச தாரிணம் ஸுவிபூஷிதம் ।
ப்ரஹ்மாணீ சக்தி ஸஹிதம் ஹம்ஸாரூடம் ஸுரூபிணம் ॥
ஸர்வாபீஷ்டப்ரதம் நித்யம் அஸிதாங்கம் பஜாம்யஹம் ॥

(இ-ள்) மூன்று கண்களையுடையவரும், வேண்டிய வரனை கொடுப்பவரும், சாந்தமான ஸ்வரூபத்தையுடைய



வரும், தலை முண்டங்களால் ஆக்கப்பட்ட மாலையை அணிந் திருப்பவரும், வெண்மையான நிறமுடையவரும், கருணை வடிவங்கொண்டவரும், காதுகளில் அணியப்பெற்ற குண்டங் களால் மிகவும் ப்ரகாசிப்பவரும், கதை, கபாலம், பாணம், பாத்ரம், கட்கம், ஜபமாலை, கமண்டலு, இவைகளையுடைய வரும், திகம்பரனாயும், இளைஞனாகவும், பாம்பைப் பூணூலாக அணிந்துகொண்டிருப்பவரும், நன்கு அலங்கரிக்கப்பட்டிருப்ப வரும், ப்ருஹ்மாணீ என்கிற சக்தியுடன் கூடியவரும், அன்னப் பறவையை வாஹனமாகக் கொண்டவரும் அழகாக இருப் பவரும், வேண்டிய விருப்பமான யாவற்றையும் கொடுப்ப வருமான அஸிதாங்க பைரவர் என்னும் பைரவ மூர்த்தியை எப்பொழுதும் வணங்குகிறேன்.



## ருரு பைரவ தியானம்

த்ரிணேத்ரம் வரதம் சாந்தம் குமாரஞ்ச திகம்பரம் ।
டங்கம் க்ருஷ்ணம்ருகம் பாத்ரம் பிப்ராணஞ்சக்ருபாணகம் ॥
மாகேச்வர்யாயுதம் தேவம் வ்ருஷாரூடம் ஸ்மிதானனம் ।
சுத்தஸ்படிக ருங்காசம் நமாமி ருருபைரவம் ॥

(இ-ள்) மூன்று கண்களையுடையவரும், வேண்டிய வரனைக் கொடுப்பவரும், சாந்தமான தோற்றத்தையுடையவ ரும், இளைஞனாகவும், திகம்பரனாகவுமிருப்பவரும், டங்கம், க்ருஷ்ணம்ருகம் (புள்ளிமான்) பானபாத்ரம், கத்தி இவைகளை வைத்திருப்பவரும், மாஹேச்வரீ என்ற சக்தியுடன் கூடியவரும், காளைவாகனத்தின்மேல் வீற்றிருப்பவரும், புன்முறுவல்பூத்த முகத்துடன் கூடியவரும், நிர்மலமான ஸ்படிகத்துடன் கூடிய வரும், நிர்மலமான ஸ்படிகள் போன்று வெண்மையான மேனி யையுடையவருமான ருரு பைரவர் என்ற பைரவ மூர்த்தியை வணங்குகிறேன்.

## க்ரோத பைரவ தியானம்

த்ரிணேத்ரம் வரதம் சாந்தம் குமாரஞ்ச திகம்பரம் ।
கதாம் சங்கம்ச சக்ரஞ்ச பாநபாத்ரஞ்சதாரிணம் ॥
லக்ஷ்ம்யாச ஸஹிதம் வாமே கருடாஸநஸுஸ்த்திதம் ।
நீலவர்ணம் மஹாதேகம் வந்தே ஸ்ரீக்ரோத பைரவம் ॥



(இ-ள்) மூன்று கண்களையுடையவரும், கதை, சங்கம், சக்ரம், பானபத்ரம் இவைகளையுடையவரும், வேண்டப்பட்ட வரனைக் கொடுப்பவரும், சாந்தமான தோற்றத்தையுடைய வரும், குமாரனாகவும், திகம்பரனாகவும் விளங்குபவரும், இடது பக்கத்தில் இலக்குமியுடன் கூடியவராக கருடவாஹனத் தில் அமர்ந்திருப்பவரும், நீலநிறமான மேனியையுடையவரு மான ச்ரோதபைரவரை வணங்குகிறேன்.

## உன்மத்த பைரவ தியானம்

த்ரிணேத்ரம் வரதம் சாந்தம் குமாரஞ்ச திகம்பரம் ।
ஹேமவர்ணம் மஹாதேவம் அச்வவாஹனஸுஸ்த்திதம் ॥
கட்கம் கபாலம் முஸலம் சதந்தம் கேடகம் ததா ।
வாராஹீ சக்தி ஸஹிதம் வந்தே உன்மத்தபைரசம் ॥

(இ-ள்) மூன்று கண்களையுடையவரும் வேண்டப்பட்ட வனைக் கொடுப்பவரும், சாந்தமான தோற்றத்தையுடைய வரும், குமாரனாகவும், திகம்பரனாகவுமிருப்பவரும், ஸ்வர்ணம் போன்று மஞ்சள் நிறமான மேனியையுடையவரும், அச்வ வாஹனத்தில் அமர்ந்திருப்பவரும், கட்கம், கபாலம், உலக்கை, கேடயம் இவைகளையுடையவரும், வாராஹீ சக்தியுடன் கூடியவருமான உன்மத்த பைரவரை வணங்குகிறேன்.

## கபால பைரவ தியானம்

த்ரிணேத்ரம் வரதம் சாந்தம் குமாரஞ்ச திகம்பரம் ।
பாசம் வஜ்ரம் ததா கட்கம் பானபாத்ரஞ்ச தாரிணம் ॥
இந்த்ராணீ சக்தி ஸஹிதம் கஜவாஹன ஸுஸ்த்திதம் ।
கபால பைரவம் வந்தே பத்மராகப்ரபம் சுபம் ॥

(இ-ள்) மூன்று கண்களையுடையவரும் வேண்டப்பட்ட வரனைக் கொடுப்பவரும், சாந்தமான தோற்றத்தையுடைய வரும், குமாரனாகவும், திகம்பரனாகவுமிருப்பவரும், பாசக் கயிறு, வஜ்ரம், கத்தி, பானபாத்ரம் இவைகளையுடையவரும் இந்திராணி என்னும் சக்தியுடன் கூடியவரும் யானை வாஹனத் தின் மீது வீற்றிருப்பவரும், பத்மராகம் போன்ற மேனியை யுடையவரு மான கபால பைரவரை வணங்குகிறேன்.



## பீஷண பைரவ தியானம்

த்ரிணேத்ரம் வரதம் சாந்தம் குமாரஞ்ச திகம்பரம் ।
கட்கம் சூலம் கபாலஞ்ச தாரிணம் முஸலம் ததா ॥
சாமுண்டாசக்திஸஹிதம்ப்ரேதவாஹனஸுஸ்த்திதம் ।
ரக்தவர்ணம் மஹாதேவம் வந்தே பீஷணபைரவம் ॥

(இ-ள்) மூன்று கண்களையுடையவரும் வேண்டப்பட்ட வரனைக் கொடுப்பவரும், சாந்தமான தோற்றத்தையுடைய வரும், குமாரனாகவும், திகம்பரனாகவுமிருப்பவரும், கத்தி, சூலம், கபாலம், உலக்கை இவைகளையுடையவரும், சாமுண்டி என்னும் சக்தியுடன் கூடியவரும், ப்ரேத வாஹனத்தின் மீது அமர்ந்திருப்பவரும், சிவந்த மேனியையுடையவருமான பீஷண பைரவர் என்கிற மஹாதேவனான பைரவரை வணங்குகிறேன்.

## ஆதிலக்ஷ்மீ தியானம்

த்விபுஜாஞ்சத்ரிணேத்ராஞ்ச ஸாபயாம் வரதாந்விதாம் ।
புஷ்பமாலாதராம்தேவீம் அம்புஜாஸநஸம்ஸ்திதாம் ॥
புஷ்பதோரணஸம்யுக்தாம் ப்ரபாமண்டல மண்டிதாம் ।
ஸர்வலக்ஷண ஸம்பந்நாம் ஸர்வாபரணபூஷிதாம் ॥
பீதாம்பரதாரம் தேவீம் மகுடேனவிராஜிதாம் ।
ஸௌந்தர்யநிலயாம் சக்திம் ஆதிலக்ஷ்மீமஹம்பஜே ।



(இ-ள்) இரண்டு கைகளையும், மூன்று கண்களையும் உடையவளும், அபயம் வரதம் என்னும் இரு முத்திரைகளைத் தெரிவிக்கின்ற இரு கைகளையுடையவளும், புஷ்பஹாரத்தை அணிந்திருப்பவளும், தாமரை மலரில் வீற்றிருப்பவளும், புஷ்ப தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட வாசஸ்த்தலத்தையுடைய வளும், ஒளிமயமாக இருப்பவளும், (ஒளி மண்டலத்தினால் மிக்க ஒளியையுடையளாகவும் தான் வீற்றிருக்கின்ற ப்ரதேசத்தை மிகவும் ப்ரகாசிக்கும்படிச் செய்பவளும்) ஸாமுத்திரி காலக்ஷ ணங்களனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றவளும், எல்லா விதமான ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளும், வெண்பட்டாடையை உடுத்திக் கொண்டிருப்பவளும், மகுடத் தினால் ப்ரகாசிக்கின்றவளும், அழகுக்கெல்லாம் இருப்பிட மாக இருப்பவளும், சக்தி வடிவமானவளுமான ஆதிலக்ஷ்மியை வணங்குகிறேன்.





## ஸந்தானலக்ஷ்மீ தியானம்

ஜடாமகுடஸம்யுக்தாம் ஸ்திராஸநஸமன்விதாம் ।
அபயம்வரதஞ்சைவ பூர்ணகும்பகரத்வயாம் ॥
கஞ்சுகஞ்சன்னசீரஞ்ச மௌக்திகம் சாபி தாரிணீம் ।
தீபசாமரநாரீபிஸ்ஸேவிதாம் பார்சவயோர்த்வயோ: ॥
பாலாம்ஸேவே ஸுவர்ணாபாம் கருணாபாங்கசோபினீம் ।
மஹாராக்ஞீம் ச ஸந்தானலக்ஷ்மீமிஷ்டார்தஸித்தயே: ॥

*(இ-ள்)* ஜடை, மகுடம் இவைகளையுடையவளும், ஸ்திரமான ஆஸனத்திலமர்ந்திருப்பவளும், (நின்றநிலையில் இருப்பவளும்) அபயம் வரதம் என்ற இரு முத்திரைகளை இரு கைகளிலும், மற்ற இரு கைகளில் பூர்ணகும்பங்களைப் பெற்றிருப்பவளும், இருபுறமும், தீபமேந்திய பெண்களாலும், சாமரமேந்திய பெண்களாலும் சேவிக்கப்பட்டவளும், ரவிக் கையையும், அழகான அட்டிகையையும், முக்தாஹாரத்தையும் தரித்திருப்பவளும், இளம் பருவத்தையுடையவளும், ஸ்வர்ணம் போன்ற மஞ்சள் நிறமுடையவளும், கருணை பொழியும் கடைக்கண் பார்வையையுடையவளும், சக்ரவர்த்தினி (மஹாராக்ஞீ) யான ஸந்தானலக்ஷ்மியை ஐச்வர்யத்தைப் பெறுவதின் பொருட்டு வணங்குகிறேன்.

## கஜலக்ஷ்மீ தியானம்

சதுர்புஜாம் த்விநேத்ராம்ச வராபயகராந்விதாம் ।
சரத்வயத்ருதாம்போஜாம் க்ருதபங்கேருஹாஸநாம் ॥
ஸுவர்ணகலசோபேத கஜயுக்மேநபார்ச்வயோ: ॥
க்ருதாபிஷிக்தாம் பத்மாம்தாம் கஜலக்ஷ்மீமுபாஸ்மஹே ॥

*(இ-ள்)* இரண்டு கண்களையும், நான்கு கைகளையுமுடையவளும், (உயரத்தூக்கி இருக்கின்ற நிலையில்) இரு கைகளிலும் தாமரை மலர்களையும் இருகைகளில் வரத முத்திரை அபய முத்திரைகளையும் உடையவளும் இருபுறமும் ஸுவர்ண கலசங்களையுடைய இரு யானைகளினால் (கங்கை நீரால்) அபிஷேகம் செய்யப்படுகிறவளும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற கஜலக்ஷ்மியை வணங்குகிறேன்.



## தனலக்ஷ்மீ தியானம்

கிரீடமகுடோபேதாம் ஸ்வர்ணவர்ணகளேபராம் ।
பக்ஷிராஜஸமாருடாம் ஸர்வாபரணபூஷிதாம் ॥
விலஸத்பூர்ணம்பஞ்ச தக்ஷிணேநகரேணது ।
சக்ரம் பாணஞ்ச தாம்பூலம் ததாவாமகரேணச ॥
சங்கம் பத்மஞ்ச சாபஞ்ச கண்டிகாமபிதாரிணீம் ।
ஸ்ரீ நிவாஸ்ப்ரியாம் த்யாயேத் தநலக்ஷ்மீம் மநோஷராம் ॥

(இ-ள்) கிரீடத்தை உடையவளாயும், ஸ்வர்ண நிறமான சரீரத்தை உடையவளாயும், கருடனின் மேல் வீற்றிருப்பவளாயும், எல்லாவிதமான ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டவளாயும், வலது கைகளில் பிரகாசிக்கின்ற பூர்ணகும்பம், இடது கைகளில் சக்ரம், பாணம், தாம்பூலம், இவைகளையும், சங்கம், பத்மம், வில், கண்டிகை இவைகளையும் வைத்துக் கொண்டிருப்பவளாயும், அழகாக இருக்கிற ஸ்ரீநிவாஸனின் மனைவியான தனக்ஷ்மியை தியானம் செய்ய வேண்டும்.



## தான்யலக்ஷ்மி தியானம்

வரதாபஸம்யுக்தாம் கிரீடமகுடோஜ்வலாம் :
அப்புஜஞ்சேக்ஷுசாலீஞ்ச கதளீபலத்ரோணிகாம் ॥
பங்கஜம் தக்ஷவாமயோர்ததாநாம் சுக்லரூபிணீம் ।
க்ருபாமூர்த்திம் சுஜாரூடாம் ஸுபாஸீதாம் ஸுகப்ரதாம் ॥
ஸர்வாலங்கார ஸம்யுக்தாம் ஸர்வாபரணபூஷிதாம் ।
மதோன்மத்தரம் மநோக்ஞாங்கீம் தான்யலக்ஷ்மீம்
பஜே (அ) நிசம் ॥

(இ-ள்) வரதமுத்திரையும் அபய முத்திரையையும் முன் இருகைகளில் வஹித்திருப்பவளும், கிரீட மகுடத்தைத் தரித் திருப்பவளும், தாமரை, கரும்பு நெற்கதிர் வாழைப்பழம் நிறைந்த பாத்திரம் இவைகளை வைத்திருப்பவளும், (மேல் தூக்கிய நிலையில் இருக்கும்) வலது இடதுகைகளில் தாமரை மலரையுடையவளும், வெண்மையான நிறங்கொண்டவளும், கருணைஉள்ளங்கொண்டவளும், யானையின் மேல் ஸுகமாக வீற்றிருப்பவளும், ஸௌக்யத்தைக் கொடுப்பவளும், எல்லா





விதமான ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளும், மதங் கொண்டவளும், அழகான அங்கங்களைக் கொண்டவளுமான தான்ய லக்ஷ்மியை வணங்குவோமாக.

## விஜயலக்ஷ்மி தியானம்

அஷ்டபாஹுயுதாம் லக்ஷ்மீம் ரத்தஸிம்ஹாஸந்ஸ்திதாம்
ஸ்வர்ணவர்ணாமேக வக்தராம் த்விநேத்ராம் ஸுமனோஹாரம் ।
ஸுகாஸநாம் ஸுகேசீஞ்ச கிரீடமகுடோஜ்வலாம் ॥
ச்யாமாங்கீம் கோமளாகாராம் ஸர்வாபர்ணபூஷிதாம் ।
கட்கம் பாசம் ததாசக்ரம் அபயம் ஸவ்யஹஸ்தகே ॥
கேடகம் சாங்குசம் சங்கம் வரதம் வாமஹஸ்தகே
ராஜரூபதராம் சக்திம் பிரபுப்ரபு செளந்தர்யசோபிதாம் ।
ஹம்ஸாரூடாம் ஸ்மரேத் தேவீம் விஜயாம் விஜயாப்தயே ॥

(இ-ள்) எட்டு கைகளடையவளும், இரத்நசிம்ஹாசனத்தில் வீற்றிருப்பவளும், ஸ்வர்ணம் போன்ற மேனியையுடையவளும், இரண்டு கண்களையுடையவளும், மிகவும் அழகாக இருப்பவளும், ஸுகமாக ஆஸனத்தில் வீற்றிருப்பவளும், அழகான கூந்தலையடையவளும், கிரீட மகுடத்தினால் மிகவும் பிரகாசிப்பவளும், கருமை நிறமுடையவளும், அழகான சரீரத்தையுடையவளும், ஆபரணங்கள் யாவற்றாலும் அலங்கரிக்கப்பட்டவளும், கட்கம், பாசம், சக்ரம், அபய முத்திரை இவைகளை வலது கைகளில் பெற்றிருப்பவளும், கேடகம், அங்குசம், சங்கம், வரதமுத்திரை இவைகளை இடது கைகளில் பெற்றிருப்பவளும், அரசனைப் போன்ற தோற்றத்தையுடையவளும் ப்ரபுக்களுக்கிருக்கும் அழகைப்போல் அழகைப் பெற்று ப்ரகாசிக்கின்றவளும், ஹ்ஸத்தின் மேல் வீற்றிருப்பவளும், சக்தி வடிவமான விஜயையென்ற லக்ஷ்மீதேவியை (விஜயலக்ஷ்மியை) விஜயத்தை அடைவதின் பொருட்டு வணங்குவோமாக.

## ஐச்வர்யலக்ஷ்மீ தியானம் (மகாலக்ஷ்மீ)

அச்வாரூடாம் மஹாலக்ஷ்மீம் த்விநேத்ராஞ்ச சதுர்புஜாம் ।
ஸ்வர்ணாங்கீம்ஹரிவல்லபாம் பீநஸ்தநஸுசோபிதாம் ॥



ஸர்வாபரணஸம்யுக்தாம் துகூலாபரதாரிணீம் ।
ஐச்வர்யதாம்தாம் ஸ்ரீலக்ஷ்மீம்ஸர்வஸௌபாக்யஸித்தயே ॥

*(இ-ள்)* குதிரையின் மேல் வீற்றிருப்பவளும், இரண்டு கண்களையும் நான்கு கைகளையுமுடையவளும், ஸ்வர்ணம் போல் மஞ்சள் நிறமான சரீரகாந்தியையுடையவளும், மஹா விஷ்ணுவின் மார்பில் விளங்குபவளும், மஹாவிஷ்ணுவின் பத்தினியும், பெரிய ஸ்தநங்களால் மிகவும் ப்ரகாசிக்கின்ற வளும், ஆபரணங்கள் யாவற்றிலும் அலங்கரிக்கப்பட்டவளும், வெண் பட் டாடையை உடுத்தியிருப்பவளும், ஐச்வர்யத்தைக் கொடுப்ப வளுமான மஹாலக்ஷ்மியான ஐச்வரிய லக்ஷ்மியை ஐச்வர்யத்தையும் ஸர்வஸௌபாக்கியத்தையும் அடைவதின் பொருட்டு வணங்குகிறேன்.

## வீரலக்ஷ்மீ தியானம்

அஷ்டபாகுயுதாம் தேவீம் ஸிம்ஹாருந விராஜிதாம் ।
தப்தகாஞ்சனஸங்காசாம் கிரீடமகுடோஜ்வலாம் ॥
துகூலவஸநாம் லக்ஷ்மீம் ஸர்வாராதிவிநாசிநீம் ।
அபயம்வரதஞ்சைவபுஜயோஸ்ஸவ்யவாமயோ: ॥
சக்ரம்சூலஞ்சபாணஞ்ச சங்கம் சாபம் கபாவகம் ।
ததநீம்வீரலக்ஷ்மீம் தாம் விஷ்ணுபத்நீம் பஜேஸதா ॥

*(இ-ள்)* எட்டு கைகளையுடையவளும், ஸிம்ஹாஸனத் தில் வீற்றிருப்பவளும், உருக்கிவார்த்த ஸ்வர்ணத்தைப் போன்ற சரீர காந்தியையுடையவளும், கிரீட மகுடத்தைத் தரித்திருப் பதால் மிகவும் பிரகாசிக்கின்றவளுமாக இருப்பவளும், பட் டாடையை உடுத்திக் கொண்டிருப்பவளும், பகைவர்களனை வரையும் அழிக்கின்றவளும், வலதுகை இடதுகை இவை களில் அபயம், வரதம் என்னும் இரு முத்திரைகளையும் பெற்றிருப்பவளும், மற்ற கைகளில் சக்ரம், சூலம், பாணம், சங்கம், சரபம், கபாலம் இவைகளைப் பெற்றிருப்பவளும், மகாவிஷ்ணுவின் பத்நியுமான வீரலக்ஷ்மியை எப்பொழுதும் வணங்குகிறேன்.







## சோடச சுப்ரமண்யர் தியானம்

### 16 சுப்ரமண்யர்கள் ரூப லக்ஷணம்

ஞானசக்தி தர: ஸ்கந்தோ தேவசேனாபதிஸ்த்தா
சுப்ரமண்யோ கஜாரூட சரகானனசம்பவ:
கார்த்திகேய குமாரச்ச ஷண்முக ஸ்த்தாரகாந்தகஹா
ஸெநாநி பிரும்ம சாஸ்த்தாச் வல்லிகல்யாணசுந்தர:
பாலச்ச க்ரௌஞ்ச பேதாச சிகிவாஹந ஏவச
ஏதாநி ஸ்வாமி நாமாநி சஷாடச பிரத்யஹந்நர:

## 16 சுப்ரமண்யர்கள்

1. ஞானசக்திதர ஸ்வாமி
2. ஸ்கந்த ஸ்வாமி
3. தேவசேனாபதி ஸ்வாமி
4. சுப்ரமண்ய ஸ்வாமி
5. கஜாரூட ஸ்வாமி
6. சரவனோத்பவ ஸ்வாமி
7. கார்த்திகேய ஸ்வாமி
8. குமார ஸ்வாமி
9. ஷண்முக ஸ்வாமி
10. தாரகாந்த ஸ்வாமி
11. சேநாநி ஸ்வாமி
12. பிரும்ம சாஸ்த்தா ஸ்வாமி
13. வல்லி கல்யாண சுந்தரஸ்வாமி
14. பால ஸ்வாமி
15. க்ரௌஞ்சபேதன ஸ்வாமி
16. சிகிவாஹந ஸ்வாமி ஆக 16 சுப்ரமண்யர்கள்



# பலிபீடம்



பிராகாரங்களுக்கு வெளியே அல்லது பிராகாரங்களின் உட்பகுதிகளிலும் பலிபீடஸ்த்தானமாகும். கருவறையின் அகலத் தைத்தெண்டமாகக் கொண்டு 6 7 8 10 12 14 16 18 தண்டம் வரை பலிபீடஸ்தானம் கொள்ளவேண்டும். இவ்வாறு மூன்றாம் பிரகாரம் நான்காம் பிராகாரம் ஐந்தாம் பிராகாரங் களுக்கு பலீபீடஸ்த்தானமாகும், அல்லது கெற்பக்ருஹமைய மிருந்து 2 3 3 1/2 5 7 தண்டம் வரை பலிபீடஸ்த்தானம் கொள்ள லாம். பலி பீடங்களுக்கு உயரம் கருவரை துவார அகலம் அதிஷ்ட்டான உயரம் அல்லது துவார அகலத்தால் 2, 3 மடங்கு வரை பலிபீட உயரமாகும் முழு அளவால் ஒரு முழம் துடங்கி 3 முழம் வரை பலிபீட உயரமாகும்.

பலிபீட உயரத்தை 5 6 7 8 பாகம் செய்து ஒரு பாகம் உப பீட உயரமாகும் ஷேசம் உய்ரத்தை 5 பாகம் செய்து ஒரு பாகம் அஷ்ட்டதளம் மீத முள்ளவை பலிபீட உயரமாகும்.

பலிபீட உயரத்தில் 1 1/4 பீட அகலமாகும். பலிபீடத் தின் கீழ்வரும் உபபீடத்தை ஏழு பாகம் செய்து பத்மம் கம்பு 1 1/2 கண்டம் 4 மேல்தலையிடை 1 1/2 உபபீட அதிஷ்ட் டானங்களுடனோ அல்லது அதிஷ்ட்டானத்துடனோ பலிபீடங் களை அமைக்கவேண்டும். அதிஷ்ட்டான உயரங்களை 11 பாகம் செய்து பத்மம் வாஜனம் 3/4 ஜகதி பட்டகுமுதகம் 3 மேல் கம்பு 1/2 கண்டம் 1 3/4 கம்பு 1/2 பட்டிகை 1 1/2.

மேல்பத்ம பீட உயரத்தை 5 பாகம் செய்து கீழ் சதுரம் 3/4 பத்மம் 2 1/2 கண்டம் 1/4 ஊர்த்வபத்மம் 1, மேல்வாஜநம் 1/2 மேல் பத்மத்திலும் கீழ் பத்மத்திலும் அஷ்ட்டதளமாக அமைக்க வேண்டும்.

கருவரையின் பிரதி மட்டம் பூஜாபீடங்களுக்கு சமம் பலிபீடங்களின் மட்டமாகும். பலிபீடங்களுடைய அகலம் கருவரை அகலத்தில் பாதி கருவரை உள் கூட்டின் சமம் 3/4, 1/2, 1/4 பலிபீடங்களுடைய அகலமாகும். கருவரை துவார







உயரத்தை 5 6 7 8 9 10 பாகம் செய்து ஒருபாகம் பலி விஷ்டர உயரமாகும். அந்த உயரத்தை 10 பாகம் செய்து ஒரு பாகம் பலி விஷ்டர உயரமாகும். அந்த உயரத்தை 10 பாகம் செய்து கீழ் சதுரம் 3 அஷ்ட்ட தளபத்மம் 4 கண்டம் 1 பத்மவாஜநம் 2, உயரத்திற்கு இருமடங்கு கீழ் சதுர அகலமாகும் மேற்கூறிய அம்சத்தில் 9 பாகம் மேல்வாஜன அகலம். பலிவிஷ்ட்ர உயரத்தை 9 பாகம் செய்து கீழ் சதுரம் 1, பத்மம் 5 பிரம்பு 1/4 ஊர்த்வ பத்மம் 2 மேல்தலையிடை 3/4 அதோ பத்மம் ஊர்த்வ பத்மம் 8 16 இதழ்களாகச் செய்தல் வேண்டும்.

பலிபீட உயரத்திற்கு 1/4 மடங்கு உபபீடதவிஸ்தர மாகும். அதன்மேல் பீடஉயரத்திற்கு சமம் அதிஷ்ட்டான அகல மாகும், அதிஷ்ட்டான கண்டகால் அகவாய் அகலம் மேல் அதோ பத்மத்தின் தலையிடைப் பரப்பாகும். இதன் அகலத்தை 5 6 7 பாகம் செய்து ஒரு பாகம் குறைந்தது ஊர்த்வபத்ம தலை யிடைப் பரப்பாகும். பலிபீடங்களை உபபீடம் மஹாபீடம் பத்மபீடத்துடன் செய்வது உத்தமம் அல்லது உபபீடமின்றி மஹாபீடம், பத்மபீடத்துடன் செய்தல் வேண்டும் பலிபீடங்கள் பொன் வெள்ளி தாமிரம் சிலை செங்கல் சுதை இவற்றால் பலிபீடங்களைச் செய்யலாம். அதிஷ்ட்டான உப பீடங்களில் மஞ்சம் ஸ்த்தம்பம், நாஸிகைகளுடனும் முகபத்ரங்களுடனும் பூதம் சிம்மம் யானை அன்னம் யாளி, இவற்றுடன் கூடிய புஷ்ப மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவனாக பலி பீடங்களால் அலங்கரிக்கப்பட்டவனாக பலிபீடங்களைச் செய்தல் வேண்டும். பலிபீட மத்தியில் ஜகதியின் மேல் கற்ப வின்யாசத்தை செய்தல் வேண்டும். முன் சொன்ன தெண்டப் பிராமாணத்தாலே (கமனம்) பார்த்து பலிபீடங்களை ஸ்த்தாபித்தல் வேண்டும்.

உயரத்தை - 29 கூறு செய்து பாதுகம் ஜகதி 7 கம்பு 1 1/4 பத்மம் 3/4 கம்பு 1 ஜகதி 6 குமுதகம் 5 1/2 பத்மம் 1 கண்டம் 2 1/2 கம்பு 1 பத்மம் 2 மேல்கம்பு 1 ஆக 29 கூறு.

26 கூறு செய்து ஜகதி 6 வாஜகம் 1 -3/4 பத்மம் 4 -3/4 கண்டம் 1 பத்மம் 1/2 குமுதகம் 3 பத்மம் 1/2 கம்பு - 3/4 தளம் 2 1/4 மஞ்சம் 3 1/2 ஆக 26 கூறு. இவைகள் கெஜகேசரி எனப் பெயர் பெரும்.



# துவஜதெண்ட [கொடிமர] இலக்கணம்



துவஜதெண்ட அளவு கூறப்படுகிறது. கருவரைகால் புறவாய் தண்டத்தால் கருவரையினின்று 7 8 9 11 இந்தப் பதங்களில் அந்தர் மண்டல விஸ்த்தாரத்தில் துவஜஸ்த்தானம் கொள்ளலாம் 13 14 15 16 18 21 தண்டம் வரை அந்தர்ஹாரை யில் துவஹஸ்த்தானமாகும். 21 தண்டம் முதல் 40 தண்டம் வரை துவஜஸ்த்தானமாகும். இவை மத்யஹாரைபாஹ் யஹாரைகளில் கொள்ள வேண்டும். துவஜஸ்தண்ட மரம் சந்தனம், தேவதாரு, தேக்கு, செஞ்சந்தனம், வில்வம் செண்பகம் இந்த விருக்ஷம் 6 உத்தமம், கமுகு, கருங்காலி, பலா இவை மூன்றும் மத்யமம். பனை மூங்கில் இவை இரண்டும் அதமம் இந்த மரங்களைத் தவிர வேறு மரங்களில் துவஜஸ்தண்டம் செய்தல் கூடாது.

துவஜதண்டமரம் உயரம் ஜாத்யாம்சம் ஆயாத்யம்சம் இவற்றால் கணக்கிடவேண்டும். பிராசாதகால்புரவாய் அகலத் தால் 3 4 5 தண்டம் உயரமாகும். அல்லது முழ அளவால் 7 11 21 25 32 முழம் வரை துவஜதண்ட உயரமாகும்.

துவஜதண்ட உயரம் கருவரை வாசல் உயரத்தால் 4 பாகம் முதல் 12 பாகம் வரை துவஜதண்ட உயரமாகும். அல்லது கருவறை பிரஸ்த்தர மட்டம் ஸ்த்தூபி உயரம் முதல் நிலமட்டம் விருஷபஸ்த்தல மட்டம் விமான கண்டமட்டம் துவாரசாலை யில் இவ்வாறு துவஜதண்டத்தின் உயரம் 21 பேதம் கூறப்படு கிறது.(ஆயாதி)

உயரத்தால் சுப ஆயாதி நிர்ணயிக்க வேண்டும். சுப ஆயாதிக்காக உயரங்களில் 1 விரல் துடங்கி 15 விரல் வரை கூட்டியோ குறைத்தோ சுபஆயாதியைக் கணக்கிட வேண்டும். துவஜதண்ட உயரத்தை மூன்று பாகம் செய்து ஒரு பாகத்தை 9 11 13 14 15 16 பாகம் செய்து ஒரு பாகம் துவஜதண்ட அடிப்பாகத்தின் அகலமாகும் அடிப்பாக அகலத்தை 10 பாகம் செய்து 7 8 9 பாகம் மேல்பாக அகலமாகும்.





துவஜதண்ட உயரத்தை 7 8 9 10 11 13 பாகம் செய்து அதில் ஒருபாகம் பிரம்மபாகம். சதுரமாக பூமியில் நடுவது அதன்மேல் ஒரு பாகம் விஷ்ணு பாகம் அதன்மேல் பாகம் விருத்தமாக அமைக்க வேண்டும். துவஜதண்டத்தின் மேல் சிறுதண்டங்களை நிருத்தி அவைகளில் மூன்று பலகைகளை அமைப்பது மேற்கூறிய பலகைகளுக்கு இஷ்ட்டிகை எனப் பெயராகும். இஷ்ட்டிகை எனப் பெயராகும். இஷ்ட்டிகை யின் நீளம் மேல் தண்டத் தால் 3 4 5 தண்டம் வரை நீளம் கொள்ளலாம். இஷ்ட்டிகையின் அகலம் 1 1/2 2 தண்டமாகும். 2 3 4 விரல்வரை இஷ்ட்டிகையின் கனமாகும். இவ்வாறு மூன்று பலகைகளை அமைக்க வேண்டும். இஷ்ட்டிகை யின் இடைவெளி தண்டப் பரப்பால் 2 2 1/2 அம்சம் இருக்க வேண்டும்.

மூன்று இஷ்ட்டிகைகளுக்குமுள்ள உயரத்துடன் 3 4 5 6 விரல்கூட்டி மேலும் கீழும் உபதண்டங்களில் பூமுனை போன்று அமைப்பது அதன் கீழ் பாகத்தில் மணி முதலியவை களைத் தொங்கவிட வேண்டும். துவஜதண்ட மேல் பாக சுற்றளவில் 9ல் 3 5 7 வாஹன உயரமாகும். வாஹநத்தை இஷட்டிகையின் மேற்பலகையில் நின்ற வடிவமாக அமைக்க வேண்டும். இஷட்டிகையின் கீழ் தெண்ட விஸ்த்தாரத்தால் வீரகண்டம் 1 பலகை 1 குடம் 1 தாடி 3/4 கலசம் 1 1/2 பலகை அகலம் தண்டப்பரப்பால் 2 3 தண்டமாகும். குடவிஸ்த்தாரம் 1 1/2 தாடி விஸ்த்தாரம் 1 1/4 அதன் கீழ்பாகங்களில் மேற்கூறிய விஷ்ணுபாக அளவை பத்தியாகக் கொண்டு ஒற்றித்த பத்தியாக செய்தல்வேண்டும். பத்திகளின் கீழ் வலையங்களைச் செய்தல் வேண்டும்.

துவஜதண்டத்தின் கீழ் ஆதாரசீலை அமைத்து அதன் மேல் துவஜதண்டத்தை நிருத்த வேண்டும் அதைச் சுற்றிலும் கல்லினாலும் செங்கல்லினாலும் பீடம் அமைக்க வேண்டும். அதன்மேல் உள்ள விஷ்ணுபாக உயரம் பீட உயரமாகும். விஷ்ணு பாக உயரத்தை 4 5 6 பாகம் செய்து ஒரு பாகம் உபபீட உயரமாகும் உபபீடம் நீக்கிய உயரம் பீட உயரமாகும். பீடங் களை பிண்டிகா இலக்கணப்படி அமைத்தல் வேண்டும். பீடங் களின் விஸத்தாரம் உயரத்தால் 1 1/4, 1 1/2 பாகம் கொள்ள வேண்டும். விஷ்ணுபாக உயரத்திற்கு மேல் வேதிகையைச் செய்து அல்லது அதிஷ்ட்டானங்களுடன் கர்னிகையை அமைக்க



வேண்டும். தண்ட அகலத்தால் 1 1/4 1 1/2 பத்ம பீட உயரமாகும். உப பீடங்களின் மேல் ஆமையைப் போன்று அமைத்து அதன் மேல் அஷ்டநாகம் அஷ்டகெஜம் அஷ்டவசு அஷ்ட திக்பாலகர் இவைகளுடன் பீடங்களை அலங்கரிக்க வேண்டும்.

கர்ணிகை உயரத்தை 29 பாகம் செய்து பத்மபீடம் 9 கண்டம் பத்மம் 1 1/2 குமுதகம் 3 பத்மம் 1 1/2 வலயம் 2 கண்டம் 1 1/2 குடம் 9 பத்மம் கண்டம் 1 1/2. அதன்மேல் பத்தி உயரத்தில் பத்தியின் மய்யம் கொண்டு தண்ட அகலத்தால் சதுரம் அமைக்கவேண்டும். பத்தியின் மேலும் கீழும் வலையங்களை அமைக்கவேண்டும். சதுரஸ்தரத்தில் நான்கு பக்கங்களிலும் மூலமூர்த்தியின் ஆயுதம் வாஹநம் முதலியவைகளை அமைக்கவேண்டும். பத்மபீட விஸ்த்தாரம் தண்ட அளவால் மூன்று தண்டம். குமுதம் குடம் இவைகளின் விஸ்த்தாரம் 2 தண்டமாகும். மற்றவை யுக்திக்கீடாக துவஜஸ்த்தம்பத்தை செய்தல் வேண்டும். தாருசங்கரஹணம் - பூர்வபக்ஷத்தில் நல்ல தினமும் வாரமும் லக்னமும் கூடிய நாளில் கர்த்தராஜா மூர்த்தி ஸத்தபதி ஸ்த்தாபகர் இவர்களுடைய நக்ஷத்திரத்திற்கும் பொருந்தின நாளில் வாஸ்த்து விநாயகர் வனதேவதைகளைப் பூஜித்து விருக்ஷங்களை சங்கரஹணம் செய்வான்.



## வர்ணசமஸ்க்கார லக்ஷணம் (வண்ண லக்ஷண விதி)
## காஸ்யப சில்பம் 88 வது அத்யாயம்

அதவக்ஷ்ய விசெஷேணா வர்ணஸம்ஸ்கார லக்ஷணம்
சிவாத் பரமசத்பாவாத் அவ்யக்தம் சாந்தி
சம்பவம் சிவாத்சக்தி சமுத்பந்நா தஸ்யநாத
சமுத்திதஹ தஸ்மாத் யோம சமுத்பந்தம்
தஸ்மாத்நிலஸம்பவஹ, அநிலா அக்னி
ஸம்பூதி - தஸ்மாத்வெ ஜலஸம்பவ
தஸ்மாத் பிருத்வி ஜாதா பூதேப்யோ வர்ணசம்பவஹ
ஸ்வேதம் ரக்தம் ததா பீதம் கிருஷ்ணம் செதி சதுர்விதம்
ஜலேஸ்வேதம் சமுத்பந்நா மக்னி ரக்தம்
ஸமுத்பவம் புவி பீதம் சமுத்பந்நம் வாயு
கிருஷ்ணம் ஸமூத்தாதம்.





# வர்ணசமஸ்கார லக்ஷணம்

சிவத்தில் இருந்து சக்தி தோன்றியது. அதில் இருந்து நாதம் தோன்றியது. நாதத்தில் இருந்து ஆகாசமும், ஆகாசத்தில் இருந்து வாயுவும், வாயுவில் இருந்து அக்னியும், அக்னியில் இருந்து தண்ணீரும், தண்ணீரில் இருந்து பூமியும் தோன்றின. ஆக வாயு முதலிய பூதங்களில் இருந்து வண்ணங்கள் உண்டாயின.

வண்ணமானது வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், கருப்பு என்று 4 விதம். தண்ணீரில் இருந்து வெளுப்பும், அக்னியில் இருந்து சிகப்பும், பூமியில் இருந்து மஞ்சளும், வாயுவில் இருந்து கருப்பு நிறமும் தோன்றின.

விஷ்ணு, மஹேஸ்வரன், கௌரி தேவி, ருத்ரன் இவர்கள் முறையே ஆதி தேவர்கள் ஆவார்கள். வெளுப்பு இதில் சுவேதம், சுக்கிலம், தவளம், அவதாரம் என்ற நான்கு விதமாகும். சுவேதம் என்ற நிறம் முத்து போன்றும், சந்திரனைப் போன்றும் உள்ள நிறமாகும். சுக்கிலம் என்பது சங்கு போன்ற நிறமாகும் வெள்ளியைப் போன்றதும் பசும்பாலைப் போன்றது மாகும். தவளம் என்பது நக்ஷத்திரத்தை போன்ற நிறமாகும்.

சிவப்பு வர்ணமானது, அருணம், ரக்தம், சோணம், பாடல் என்று 4 விதம் ஆகும். முயல் ரத்தத்தை போன்றது அருணம் எனப்படும்.

மஞ்சள் வர்ணமானது ஸ்வர்ணம், பிசங்கசம் (கபிசம்), பீதம், ஹரிதம் என்று 4 விதமாகும். தங்கத்தை போன்ற நிறத்திற்கு ஸ்வர்ணவர்ணம் என்று பெயர். மின்னலைப் போன்ற நிறத்திற்கு பிசங்கம் என்று பெயர். ஒடித்த மஞ்சளைப் போன்ற நிறத்திற்கு ஹரிதம் என்றும் பெயர். அரிதாரத்தை போன்ற நிறத்திற்கு பீதம் என்று பெயர்.



## வர்ணசமஸ்கார லக்ஷணம்

கருப்பு நிறமானது நீலம், சியாமம், காலம், கிருஷ்ணம் என்று நான்கு விதமாகும். நீருண்ட மேகத்தைப் போன்ற நிறத்திற்கு நீலம் என்று பெயர். காட்டுக் காக்கையைப் போன்ற நிறத்திற்கு சியாமம் (காலம்) என்று பெயர். மயிலின் கழுத்தைப் போன்ற நிறத்திற்கு காலம் என்று பெயர். கருங்குளவியின் சிறகைப் போன்ற நிறத்திற்கு கிருஷ்ணம் என்று பெயர். இவ்விதம் 16 விதமான நிறங்கள் இயற்கையாகக் காணப்படுகின்றவைகளாம்.

வெளுப்பு நிறமானது மண்ணும் அன்னப்பக்ஷியின் காலைப் போல சிகப்பு நிறமான மண்ணும் பூமியில் உண்டாகக் கூடியது. ஜாதிலிங்கத்தைப் போன்ற நிறமுடையதும் பூமியில் உண்டாவதேயாகும். கோதாவரியில் உண்டாகும் மண்ணுக்கு ஹரிதாலம் என்று பெயர்.

காயாம் பூவின் நிறத்தைப் போலிருப்பது இராஜாவர்த்தம் என்று பெயர். ஸ்யாம பாஷாணத்திற்கு பச்சை நிறமாக இருக்கும் சியாமம் என்று பெயர். விளக்கில் இருந்து எடுக்கும் கரிக்கு கிருஷ்ண வர்ணம் என்று பெயர் இது போன்றவைகள் வர்ணங்கள் எனப்படும் அந்த வர்ணமானது பலவிதமாகும்.

வெள்ளையும் (சுண்ணாம்பைப் போல் வெண்மையான மண்ணும்) பூமியில் உண்டாவதேயாகும். தாமரை மலரைப் போன்ற நிறமுடையதும் நீலோத்பலத்தைப் போன்ற நிறமுடையதும் தாதுப் பொருள் எனப்படும். இவ்விதமாக இயற்கையாக உள்ள நிறங்கள் யாவும் பிம்பங்கள் செய்வதற்கு சிறந்தவைகளாகும்.







# வர்ண லேபனம்



இனி சுதையினால் செய்யப்படும் மூர்த்திகளுக்குரிய வர்ணங்களைக் கூறுகிறேன்.

பீதவர்ணமான கல்லானது பீதம் எனப்படும் (மஞ்சள் நிறம்) அந்த மஞ்சள் நிறமான கல்லை நன்கு பொடி செய்து அதில் இளநீர் விட்டு பிசைந்து, அதை நெருப்பிலிட (புடம் வைக்க) அது சிகப்பு நிறமாகும் அதுவே சிகப்பாக செய்யும். ஸுதாகர்மாக்கு உரியதாகும். சங்கைச் சுட்டால் அது வெளுப்பு நிறமாகும் இராஜாவர்த்தம், சியாமம் என்ற இருவிதக் கற்களும் ஸுதாகர்மாவுக்கு சிறந்தவைகளாகும் மற்ற நிறங்கள் சுதாகர்மா வுக்கு கூடாதவைகளாகும்.

இனி ஸமஸ்க்கார வர்ணங்களைக் (ஒரு வர்ணத்துடன் மற்ற வர்ணத்தை கலப்பதனால் உண்டாகும்) கூறுகிறேன்.

வெளுப்பு - சிகப்பு இரண்டு வர்ணங்களையும் சம மாக கலந்தால் அது ''கௌர'' வர்ணமாகும்.

வெளுப்பு - மஞ்சள் இரண்டையும் சமமாக கலந் தால் ''கர்புரவர்ணம்'' ஆகும்.

வெளுப்பு - கறுப்பு இரண்டையும் சமமாக கலந்தால் அது ''தூம்ரவர்ணம்'' ஆகும்.

வெளுப்பு - கறுப்பு - மஞ்சள் இம்மூன்றையும் சம மாக கலந்தால் ''ஸாரவர்ணம்'' ஆகும்.

வெளுப்பு - சிகப்பு - மஞ்சள் இவைகளைக் கலந்தால் அது ''மிஸ்ரவர்ணம்'' ஆகும்.

சிகப்பு - மஞ்சள் இவ்விரண்டையும் சமமாக கலந்தால் ''வகுளபவ (மிகழம் பழ)'' வர்ணமாகும்.

மஞ்சள் 1 பங்கும் - சிகப்பு 2 பங்கும் சேர்ந்து கலந்தால் அது ''அதிரக்த வர்ணம் (அதிசிகப்பு)'' ஆகும். இது ''ஜவல



நச்கவி'' என்றும் அக்னி வர்ணம் என்றும் கூறப்படும். இரண்டு வர்ணங் களையும் சமமாக கலப்பதினால் உண்டாகும் வர்ண மானது இவ்விதமாகக் கூறப்பட்டிருக்கிறது.

சிகப்பு 1 பங்கு விஷம் (கருப்பு) 2 பங்கு சேரத்தால் அது ''குளவர்ணம்'' ஆகும். (குளம் - வெல்லம்)

மஞ்சள் 1 பங்கும் - சிகப்பு 1/2 பங்கும் கலந்தால் அது கபில வர்ணமாகும்.

வெளுப்பு 1 பங்கும் சிகப்பு 1/4 பங்கும் கலந்தால் அது கர்புர வர்ணமாகும். (கர்புரம் - கர்புரதுத்தம்). அதுவே நீலம் அதிகமாக சேர்க்கப்பட்டால் அது தாநியாங்குர (பயிர்முளை) வர்ணமாகும்.

பச்சையில் சரிபாதி அரிதாரம், அதில் சரிபாதி குங்குஷ்டம் (குங்குமம்) கலந்தால் அது பயிர் பச்சை வர்ணமாகும்.

கருப்பும் லாக்ஷாரமும் சமமாக கலந்தால் அது ஜம்பூபல (நாவல் பழ) வர்ணமாகும்.

ஜாதிபலமும் (ஜாதிலிங்கமும்) லாக்ஷாரமும் சமமாகக் கலந்தால் அது லோஹிதவர்ணமாகும்.

கருப்பும் நீலமும் சமமாகக் கலந்தால் கேசவர்ணமாகும்.

பயிர்பச்சையும் சிவப்பும் கலந்தால் அது மாஞ்சிஷ்ட (மஞ்சிட்டை) வர்ணமாகும்.

கருப்பும் - மஞ்சளும் சமமாக கலந்தால் அது ''மது வர்ணம் (தேன்)'' வர்ணமாகும்.

கருப்பும் அதற்கு இரண்டு பங்கு மஞ்சளும் கலந்தால் அது ''மாநுஷ'' (மனித) வர்ணமாகும்.

மனித வர்ணத்துடன் சிகப்பு சேர்க்கப்பட்டால் அது ''ஹரித'' (மஞ்சள்) வர்ணமாகும்.









இந்த வர்ணங்களில் குறைந்த அளவுடன் அதிக அளவைக் கலந்தால் அது ''பஹுஸாரம்'' எனப்படும். அதிக அளவுடன் குறைந்த அளவைக் கலந்தால் அது அல்பசாரம் எனப்படும் (இது ஸுதாகர்மாவுக்கு உரியதாகும்) வர்ணங்களுக்கு அனுகூலமான வர்ணத்தை கல்பித்துக் கொள்வதற்காக ஸாரவர்ணமானது கூறப்பட்டிருக்கிறது.

கருப்பு 1 பங்கும் சிகப்பு 2 பங்கும் கலந்தால் அது காஷாய வர்ணமாகும்.

வெளுப்பு 1 பங்கும் மஞ்சள் 2 பங்கும் கலந்தால் அது ''பிங்கள'' வர்ணமாகும்.

வெளுப்பு 1 பங்கும் மஞ்சள் 2 பங்கும் சேரத்தால் அது கல்ஹார (செங்கழுநீர்ப்பூ) வர்ணமாகும்.

கருப்பு 1 பங்கும் மஞ்சள் 2 பங்கும் சேர்த்தால் அது ஜலவர்ணமாகும். அதுவே மனித வர்ணமாகும்.

கருப்பும் மஞ்சளும் சமமாகக் கலந்தால் அது மானுஷ வர்ணமாகும்.

அரிதாரமும் - கருப்பும் சமமாகக் கலந்தால் அது கிளிப் பச்சை நிறமாகும். அதில் மஞ்சள் அதிகமாக (2 பங்கு) கலந்தால் அது தானியாங்குர (பயிர்முனை) வர்ணமாகும்.

கருப்பும் அதில் 1/4 பங்கு அரிதாரமும் (மஞ்சளும்) 1/4 பங்கு குங்குமமும் (சிகப்பும்) கலந்தால் அது பயிர் பச்சை நிறமாகும்.

கருப்பும் லாக்ஷாரமும் சமமாக கலந்தால் அது ஜம்பு பழ (நாவல் பழம்) வர்ணமாகும்.

ஜாதிலிங்கமும் லாக்ஷாரமும் சமமாக கலந்தால் அது லோஹித வர்ணமாகும். லோஹித வர்ணத்தில் சிகப்பு அதிகமாக கலந்தால் அது ரூக்ஷஹரீதக வர்ணம் ஆகும்.

கருப்பும் நீலமும் சமமாகக் கலந்தால் அது கேசமர்ய வர்ணமாகும்.



## வர்ண லேபனம்



வஸ்ய சியாமமும் (பயிர் பச்சையும்) குறைந்த அளவில் சிவப்பும் (சிவப்பு சமமாக) கலந்தால் அது மாஞ்சிஷ்ட (மஞ்சிட்டை) வர்ணமாகும்.

கருப்பும் சிகப்பும் சமமாகக் கலந்தால் அது ''மது'' தேன் வர்ணமாகும். அந்த வர்ணமே சிகப்பு (மஞ்சள்) அதிக மாக சேர்க்கப்பட்டால் அதுவும் மானுஷ வர்ணமாகும். அந்த வர்ணத்துடன் சிகப்பு அதிகமாக சேர்க்கப்பட்டால் அது ''ருக்ஷ ஹரீதக'' வர்ணமாகும். அந்த வர்ணத்துடன் பச்சை அதிகமாக சேர்க்கப்பட்டால் அது (ஸூத்ர) தூமிர, கிளி வர்ணமாகும்.

வர்ணங்களுக்கு ஒற்றுமையாக இருப்பதை உத்தேசித்து ஸாரவர்ணமானது கூறப்பட்டிருக்கிறது.

வர்ணயுக்தி பிரகரணத்தில் வேறு நூல்களில் அதிகமாக சில வர்ணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவை உபயோகர மானவைகளாதலால் அவைகளும் இங்கு சேர்க்கப்பட்டிருக் கின்றன.

மஞ்சள் - வெளுப்பு - சிகப்பு இவைகளைச் சமமாக கலந்தால் அது ''ஸாரவர்ணம்'' ஆகும்.

வெளுப்பு - கருப்பு - மஞ்சள் இவைகளைச் சமமாக கலந்தால் அது ''மிஸ்ர'' வர்ணமாகும்.

கருப்பு 1 பங்கும் சிகப்பு 2 பங்கும் கலந்தால் அது கஷாய வர்ணமாகும்.

கருப்பு 1 பங்கு மஞ்சள் 2 பங்கு கலந்தால் அது ஜல வர்ணமாகும்.

கருந்நும் மஞ்சளும் சமமாகக் கலந்தால் அது திருண வர்ணமாகும்.

மஞ்சள் - சியாமம் (பச்சை) இவைகளைச் சமமாகக் கலந்தால் அது கிளியின் சிறகு போன்ற வர்ணமாகும். அதுவே தாலம் (மஞ்சள்) அதிகமாகச் சேர்க்கப்பட்டால் தானியாங்குர (பயிர்முனை) வர்ணமாகும்.







கருப்பையும் சிகப்பையும் சமமாகக் கலந்தால் அது மாஞ்சிஷ்ட (மஞ்சிட்டை) வர்ணமாகும். அந்த வர்ணத்தில் சிகப்பை அதிகமாகக் கலந்தால் அது மானுஷ வர்ணமாகும். மானுஷ வர்ணத்தில் சிகப்பை அதிகமாகக் கலந்தால் அது ருக்ஷ வர்ணமாகும். ருக்ஷ அருவறுக்கக் கூடியது. இதைக் காட்டிலும் பச்சை அல்லது கருப்பு அதிகமான வர்ணமானது கூறப்படவில்லை. வர்ணங்களில் அதிகமாக திரவியங்களைச் சேர்த்தால் அது ''பஹு¬சாரம்'' எனப்படும். ஸவல்பமாகச் சேர்த்தால் ஸவல்பசாரம் எனப்படும்.

## வர்ணலேபனம்

வர்ண பூச்சு ஆனது சிலாகர்பம், இஷ்ட்டகாகர்பம், தாரு கர்பம் என மூன்று விதம் ஆகும்.

வர்ண லேபனம் செய்ய வேண்டிய பிம்பமானது சிலா மயமாக இருந்தால் அதன் மஹா அங்கம் முதலியவைகள் சிலாமயமாக இருக்க வேண்டும். அதற்கு மேலே படாச் சாதனம் செய்து துணியைப் போத்தி அதற்கு மேலே சர்க்கரா லேபனம் (சுக்கான் சுண்ணாம்பு) செய்ய வேணும். அதற்கு மேலே சிக்கனம் பூசி அதற்கு மேலே வெள்ளை முதலிய வர்ணங்களைப் பூச வேண்டும். அதற்குப் பிறகு அந்த பிம்பத் திற்குத் தக்க வர்ணத்தை பூசி மூர்த்தியை நன்கு பிரதிஷ்டை செய்யவேணும். பிம்பமானது சுதையாக இருந்தால் அதன் மீது படாச்சாதனம் செய்யாமல் 1 யவை அளவு சுண்ணாம்பு பூசி அதன்மேல் சிக்கன லேபனம் செய்து வெள்ளை பூசி அதற்கு மேலே பிம்பத்திற்குரிய வண்ணத்தை பூச வேண்டும்.

பிம்பமானது தாருவாக இருந்தால் சூலஸ்தயனம் முதலிய எல்லாவற்றையும் முன்பு கூறியது போலே செய்து வர்ணம் பூசவேணும். வர்ணத்துடன் விலாம்பசினைக் கலந்து கொள்ளல் வேணும்.



# ஜீர்ணோத்தாரணம்

## த்ரவ்யங்களின் விசேடம்

ஸுப்ரபேதாகமத்தில் - சுட்டகல் கருங்கல் - இவைகளால் சிவாலயங்கட்டுவித்தவர்கள், சிவலோகத்தில் தங்கமயமான விமானத்தில் வீற்றிருப்பார்கள். காலோத்தராக்மத்தில் - ஜீர்ணங்களை செப்பனிடுவதால் தலைமேல் பலனுண்டாகும். ஆனதால் ஜீர்ணமற்றதை முயற்சியுடன் காப்பாற்ற வேண்டும். ஜீர்ணமற்றதை மோஹத்தாலோ, அஞ்ஞானத்தாலோ இடித்துக் கட்டுபவர்கள். ரௌரவமெனும் நரகத்தில் ஆயிரம் கல்ப காலம் உழலுவார்கள். ஆனதால் மிகமுயற்சியுடன் நன்றாக உள்ள ஆலயத்தைக் காப்பாற்றி வைக்க வேண்டும். ஜீர்ணமானதும் தோஷமாயுமுள்ள ஆலயங்களில் பூதங்கள் ப்ரேதங்கள் பிசாசங்கள் ப்ரம்ம ராக்ஷஸர்கள் வேதாளங்கள் ஜ்வராபஸ்மாரக்ரங்கள் முதலிய கெட்டவர்கள் குடியேறிவிடுவார்கள். அவ்வாறானதிலிருந்து பூமியில் துர்பிக்ஷம் அபஜயம் கெட்ட ஸ்வப்ன சகுனங்கள். மாரி பீடை, ஜனங்களுக்குப் பீடை, கருச்சிதைவு ப்ராம்மணர்களுக்கும், இராஜாக்களுக்கும் பீடை, இடி, பெருங்காற்று, ஸர்பம் முதலிய விஷ ஜந்துக்களின் ஹிம்ஸை இவைகளுண்டாகும்.

ஆலயங்களில் சிவலிங்கம் ஜீர்ணமாயின் அந்த லிங்கத்தைச் சுற்றிலும் மஹேசுவர கிரகங்கள் நாசஞ் செய்வார்கள். பசுக்கள் பாலற்றதும் பெரிதான கலகங்களும் கோமாரீ ஜனமாரீ பயிர் நாசம் இவைகளான கெட்ட ஸம்பவங்கள் உண்டாகும்.

## காமிகாகமத்தில்

ஆலயஞ் ஜீர்ண முதலான தோஷத்துடன் நல்ல நிலையில் பூஜையுடனிருக்குமாலயத்தை செப்பனிடுவதால் தலைக்கு மேல் புண்ய பலங்கிடைக்கும். ஆனதால் சாஸ்த்ரப்படிக்கு ஸுகத்தை யடைய ஜீர்ணாலயத்தை செப்பனிட வேண்டும்.







ஜீர்ணாதிகளான லிங்க பிம்பங்களை பூஜிப்பவர்களுக்கு கெடுதலுண்டாகும். அப்படியே பூஜிக்கத்தக்கதான பிம்ப லிங்கங் களை பூஜை செய்விக்காமலிருந்தாலும் நல்லதாகாது.

## மோஹ சூரோத்தரத்திலும்

ஜீர்ணமான ஆலய பிம்பங்களை உடனேயே செப்ப னிட்டு முன் உள்ளதுபோல் செய்தவர்களுக்கு தலைக்குமேல் சிவபுண்யங்கிட்டும், அடி முதல் நுனி வரை ஜீர்ணமாகி மஹா பயங்கரமாயும் க்ரூர உருவமாயுமுள்ள ஆலயம் ராஜாவுக்கும் ராஜ்யத்திற்கும் நாநாவிதமான தோஷங்களையும் எல்லா வகையிலுஞ் செய்யும். பின்னமான பிம்பங்கள் ராஜ்யத்தில் இருக்குமாயின் ஜனங்கள் மாரிபீடையுடையவர்களாயும் இராஜாக்கள் துக்கமும் சோகமும் உடையவர்களாகி ஸைன்ய வாஹனங்க ளாலுங் குறையுடையவராவார்கள்.

## ஸூக்ஷ்மாகமத்திலும்

அலக்ஷ்மையயால் ஜீர்ணமான இலிங்கத்தில் பூஜை நிவேத் யம் முதலியனவும் நித்யோத்ஸவம் முதலான உத்ஸவங்கள் யாவுமே இராக்ஷஸப்ரீதியேயாகும்.

## அஜிதாகமத்தில்

எந்த தேசத்தில் ஜீர்ணமான இலிங்க பிம்பங்கள் பூஜிக்கப் படுகிறதோ அத்தேசத்தில் மழையில்லாததால் உண்டாகும் பயம் ஸந்தேஹமின்றிருக்கக்கூடும். ஆனதால் மிக முயற்சி யுடன் ஜீர்ணத்தைச் செப்பனிட வேண்டும்.

ஐயா! ஜீர்ண லிங்க பிம்பங்களின் திவ்ய சக்தி எங்கு சென்று விடுமென்று கேட்பீர்களாயின்.

## அவ்விஷயங் காரணாகமத்தில்

தித்திரிபக்ஷி மாம்ஸந்தேட ஸஞ்சரிப்பது போன்று சிவ லிங்க பிம்ப சக்திகள் ஸூர்யமண்டலஞ் சென்று அவ்வூரிலுள்ள வர்களுக்கும் ஸந்தேகமின்றி சாபங்கொடுக்கிறது.



## ஜீர்ணோத்தாரணம்

### ஸௌக்ஷ்மாகமத்திலும் ஸமாதானமாவது

சிவலிங்க பேரங்களின் ஆலய சக்தி சூர்ய மண்டலத்திலிருந்து பார்த்தபின் பனிரெண்டு வருஷ முடிவில் சிவத்தில் ஐக்யமாகிவிடும். அதற்குமேல் ஆலய சக்தியும் ஸௌர்ய மண்டலத்தில் வஸிக்கும் பின் சூன்யாலயமாகி எல்லா கெடுதலுக்குமிடங் கொடுக்கும்.

ஆனதால் அவ்வாறான இடங்களில் சிவாகமத்தில் கூறப்பட்டபடி உழுதல் முதல் ப்ரதிட்டை வரை புதிதாகவே செய்ய வேண்டும்.

### ஸர்வஞ்ஞானோத்தராகமத்திலும்

சாஸ்த்ர விதிகளை அறியாமல் உலோபத்தால் தன்னிஷ்டபடிச் செய்பவர்களும் இவ்வுலக பரலோக வாழ்க்கைகளையும் நாசஞ் செய்து கொண்டவராவராவார். ஆனதால் பெரு முயற்சியுடன் சாஸ்த்ரோக்தமாகவே செய்விக்கவும். அவ்வாறு செய்யுங் கர்த்தாவும் செய்விப்பவர்களும் உன்னதமான கதியையடைவார்கள். இவ்வாறு உள்ள அநேகாகம புராண வாக்யங்களால் சிவகார்யங்களில் ஜீர்ணமானத்தை செப்பனிடுவதால், புதிய கட்டுமானத்தைவிட நான்கு பங்கு புண்யஞ் சொல்லப் பட்டது. (சுலோகம்) இதோடு நூன்முகம் முடிந்தது - 4.



இப்போது ஸொத்து நிச்சயத்துடன் ஜீர்ணத்தை செப்பனிடும் முறையை ஸாமான்யமாக சொல்கிறார்.

ஜீர்ணோத்தாரதசக முதல் சுலோகம் உறை, முன் சொன்ன அறுபத்தெட்டு க்ஷேத்ரவாஸம் சவிபக்த சிவலிங்கார்சனா ரூபமான புண்ய கூட்டங்களால் பரிபக்வமான மனமுடையவர் அநேகாயிர ஜன்மாந்தரங்களில் செய்த புண்ய வசத்தாலேயே சிவகார்யங்களில் ப்ரவ்ருத்தி ஏற்படும். வேறான புண்யங்களாலே) கிடைக்காது என்பதாகும். தன் பணத்தை மூன்று பங்காக ஸந்தோஷத்தோடு செய்து, அதாவது இச் சிவபுண்யம் எனக்குண்டாயிற்று என்ற பக்தியுடன் செய்து ஒரு பாகத்தை





தன் ஜீவனத்திற்கும், மற்ற இரண்டு பாகத்தை நல்ல தினத்தில் தாமர பாத்திரத்தில் வைத்து சிவ கைங்கர்யத்திற்கு உபயோகிக்க வேண்டும். சிவகார்யத்தில் ஈடுபடுவதின் பலன்.

## சிவதர்மத்தில்

பக்தியுடன் சொத்துக்கு தகுந்தபடி ஆலயங்களைச் செய்விக்க வேண்டும். சிறிதாக அல்லது பெரிதாகச் செய்தாலும் தனிகன், ஏழ்மையானவர்களுக்கும் ஸமமான புண்யமே. பணக் காரராயினும் லோபமான மனஸுடன் பணத்தைக் குறைத்து சிவதர்மங்களைச் செயபவர் அப்புண்ய பலனையடைய மாட்டார். வாழ்வும் நிலையற்றதால் தன் சொத்தில் இருபங்கு தர்மத்திற்கும், தனது வாழ்விற்கு ஒரு பங்கும் ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும்.

ப்ரபுத் தன்மையுடன் நிறைந்த செல்வமுடையவராயினும் பக்தியுடனே சிவதர்மங்களைச் செய்ய வேண்டும். ஸொல்ப சொத்துடையவரும் பக்தியுடன் கூடினவராகவே செய்விக்க வேண்டும்.

சிவபக்தியின்றி எல்லா சொத்தையுஞ் சிவதர்மங் களைச் செய்தவர் தர்மத்தைச் செய்தவராகமாட்டார். சிவபக்தி யுடனேயே செய்விப்பதுதான் சிறந்ததாகும்.

## அப்படியே ஸுப்ரபேதாகமத்தில்

சொத்தை சிவனாருடையதாகவே நினைத்து சிவனாரை ஆராதிக்க வேண்டும். சிவதர்மங்களைச் செயபவர், சொத்தை லோபித்தனமாகச் செலவு செய்பவர் அச்சிவதர்ம புண்யத்தை யடைய மாட்டார். ஆனது பற்றி தன் சொத்தில் இரு பங்கை சிவதர்மத்திற்கும், ஒரு பங்கை தன் ஜீவனத்திற்கும் செய்து, அச் சிவதர்மத்திற்கான சொத்தை தாம்பராத்திரத்தில் வைத்து சிவனாரின் பொருட்டு அர்பணஞ் செய்யவும்.

## மோஹ சூரொத்தரத்தில்

காளஞ்சரம், மஹேந்திரமலை, ஸஹ்ய மலை, மலய மலை இவைகளிலும் மண், புல் இவைகளால் மறைக்கப்



பட்டதும் இலை, காய், பூ, பழங்களையுடைய மரங்களை யுடையதும் சிவபக்த ஜனங்களையுடையதும் எல்லா தோஷங் களும் நீங்கியதுமாயுமுள்ள இடத்தில் நல்ல திதி நக்ஷத்ரயோகம் காரணம் இவைகளுங் கூடிய வேளையில் தேவதேவரான ஸ்ரீ ஸதாசிவரைப் பூஜித்து சிவபக்தனாக இருந்து சிவகார்யங் களைச் செய்விக்க சொத்தை விநியோகிக்கவும் என்பதால் சிவார்பணஞ் செய்து சிவதர்மங்கள் செய்யவும்.



### அப்படியே நிச்வாஸாகமத்திலும்

சிவலிங்கம் பீடம் பிம்பம் விமானம் பலிபீடம் மண்டபம் பரிவாராலயம் இவைகள் ஜீர்ணமாயின் உட னேயே செப்பனிட வேண்டும்.

### காச்யறப சில்பசாத்திரத்திலும்

சிவலிங்கம் பிம்பம் விமானம் மண்டபம் குண்டம் ப்ராகாரம் பரிவாராலயம் இவைகள் ஜீர்ணமாயின் முன் செய் துள்ளதாலோ, அதைவிட உயர்ந்த த்ரவ்யங்களாலோ லக்ஷண மாகவே முன்னிருந்தபடி செய்விக்க வேண்டும்.

### காரணாகமத்திலும்

சிவலிங்கம் பீடம் பிம்பம் ஆலயம் ப்ராகாரம் பரிவாரங் களது ஆலயம் ஏனைய ஆலயப் பிரிவுகள் தருணாலயம் அதன் சிவலிங்கம் இவைகளைச் செப்பனிடுதல் உத்தம செயலாகும்.

பின் ஜீர்ணாத்தாரணத்தின் உத்தேசம் பிரிவு இவைகளைச் சொல்கிறார்.

### 2. சுலோக தாத்பர்யமாவன

பின் சொல்லப்போகிற ஜீர்ணோத்தாரணம் ஆலயம் முதலியதுகளுடையதுகளுமாக மூன்று வகைப்படும். இம் மூன்றுக்குள் ஆலய விமானங்களுடைய ஜீர்ணோத்தாரணம் தளவரிசை, விமான, ப்ராகாரம், கோபுரம், மண்டபம், பரிவார





மூர்த்தி, ஆலய இடபரப்பு இவைகளது ஜீர்ணோத்தாரணம் ஏழு விதம்.

இரண்டாவதான லிங்கம் முதலியவைகளின் ஜீர்ணோத் தாரண்ணம் ஆவுடையார், மூலலிங்கம், பாலலிங்கம், ஸ்வாயம்புவ லிங்கம், மானுஷலிங்கம், பலிபீடம் இவைகள் இருக்குமிடங் களைச் செப்பனிடல் ஆக எட்டுவிதம்.

மூன்றாவதான பிம்பாதிகளில் செப்பனிடல் கருங்கல் உலோக பிம்பங்கள் சித்ராபாஸ சூல குண்டங்கள் (1) இவை களின் செப்பனிடல் ஆக ஆறுவிதம். இவ்வாறு சிவாகமங் களில் முறையே கூறப்படும்.

அவைகளுள் முதலில் தளவரிசை சொல்லப்படும்.

## 3 வது சுலோக தாத்பர்யமாவது

கர்பக்ரஹ தளவரிசை கெட்டியாக இல்லாததால் அபிஷேக ஜலம் கோமுக வழியாக வெளியே போகாமல் பெருச் சாளியால் தோண்டப்பட்ட குழிமூலம் கீழே சென்றுவிடும். பொழுதும் சுவரில் பூசப்பட்ட சுண்ணாம்பை உப்பளர் அடிக்கப் பட்ட பொழுதும் ஆசார்யர் கும்பத்தில் சிவலிங்க சிவ பிம்பங் களை ஆவாஹனஞ் செய்துகொண்டு தள வரிசையையும் சுண்ணாம்பு பூசுதல்லையுஞ் செய்விக்க வேண்டும்.

## தளவரிசை செய்விக்கும் விதியாவது காமிகாமத்தில்

தளவரிசையில் ஜலக்கசிவு, உள்ளே ஜலம் புகுந்து விடல், குழிகளில் தங்கி இருந்தாலும் தோஷமே. இவ்வாறு உள்ளபோது மூன்று தினம் சாந்திஹோமஞ் செய்வதுடன் கும்பத்தில் சிவனாரை ஆவாஹித்து கொண்டு தளவரிசை யைச் செப்பனிடவும். இப்படி ஆவாஹன ஹோமத்துடன் சந்தி பூஜைகளில் புண்யாஹப்ரோக்ஷணம் அஸ்த்ரமந்திர உச்சாரணத் துடன் அர்க்ய ஜலப்ரோக்ஷங்களால் ஸ்நாநோபசாரத்துடன் பூஜிக்கவும். தளவரிசை போட்ட பின் ஸம்புரோக்ஷணமுஞ் செய்விக்க வேண்டும்.



## அவ்வாறே சுப்ரபேதாகமத்தில்

கர்பக்ரஹதளம் குண்டுங் குழியாக ஆனபோது அதை சுக்கான்களால் கெட்டியாகச் செய்து பின் வாஸ்துஹோமத் துடன் புண்யாகவாசனஞ் செய்யவும்.

## காரணாகமத்திலும்

சுவர் பூச்சு தளவரிசை கெட்டுப்போய்விடின் மஹாமாரி பீடை உண்டாகும் ஆனதால் அதை செப்பனிட்டு புண்யாக பஞ்ச கவ்யங்கள் செய்து ப்ரோக்ஷித்து பஞ்ச கவ்யத்தால் அபிஷேகஞ் செய்ய வேண்டும்.

காமிகாகமத்தில் கொஞ்சம் விசேஷமுள்ளது. தளவரிசை கீலமாயினும் சுண்ணாம்பு பூச்சு இல்லாமலிருந்தாலும் அதை, பூஜையை நிறுத்தியாவது பூர்த்தி செய்தபின் யஜமானன் நித்யாக்னி கார்யமின்றி சிவலிங்கத்தை பூஜிக்கச் செய்யவும். சாந்திஹோமத்தையாவது இச் செய்கையின் சிறிது கிரியை பற்றி மூர்த்தி ஹோமம், திசர ஹோமம் இவைகளையுஞ் செய்விக்க வேண்டும். அப்படியே ஆவுடையார் (பீடம்) தளவரிசை சேர்க்கப்படும்போது சுவாமிக்கும் பீடத்திற்கும் ஸ்னபனா பிஷேகமும் அவ்வாறே ஆதாரசிலையும் தளவரிசை சேர்க்கப் படும்போது சுவாமிக்கும் பீடத்திற்கும் ஸ்னபனாபிஷேகமும் அவ்வாறே ஆதாரசிலையும் தளவரிசையும் அழுத்தங்கெட்டு இடைவெளியுண்டாகி சேர்க்கப்படினும் வஸ்திரம் முதலிய தால் துடைத்து, நிர்மால்யத்தை சுத்தி செய்வது போல் அபிஷேகத்தின் நிமித்தம் அஸ்தரமந்திரோச்சாரணத்துடன் ப்ரோக்ஷிக்கவும்.



இப்படி வெகுநாள் செய்யும்படி நேரிட்டுவிட்டால் மஹாஸ்னபனாபிஷேகத்துடன் மஹாஹவி (பள்ளய) நிவேதனஞ் செய்துவிடில் ராஜாராஜ்யம், கிராம மஹாஜனங்களுக்கும், செய்தவர் செய்வித்தவர்கள் ஆசார்யர் இவர்களுக்கு மிகுந்த க்ஷேமமுண்டாகும்.

இனி விமான ஜீர்ணோத்தராணங் காணப்படும்





நான்காவது சுலோக தாத்பர்யம், விமானங்கள் நாகரம் வேஸரம் திராவிடம் எனவும், இவைகள் முறையே ஸாத்விகம், இராஜஸம் தாமஸம் எனவும் ஸ்த்ரீ புருஷ நபும்ஸகம் எனவும் மூவகையாகும், பின்னும் லிங்கத்தை யொட்டி விமானமும், விமானத்தையொட்டி இலிங்கமும் என இருவகையுமாகும்.

இவ்விதமான பேதங்கள் ஸுப்ரபேதாகமத்தில் கண்டம் முதல் விருத்தமாக உள்ளது. வேஸரமும், கண்டம் முதல் எட்டு பட்டையாக உள்ளது த்ராவிடமும், முற்றிலுஞ் சதுரமாயுள்ளது, நாகரம் எனப் பெயர் பெறும்.

நாகரம் முதலியவைகளின் விசேஷம்

## காரணாகமத்தில்

உபாசனம் முதல் ஸ்தூபி வரை சதுரம் நாகரமும், வேதிகை முதல் எட்டுபட்டை த்ராவிடமும், கண்டம் முதல் விருத்தம் வேஸரமும் ஆகும்.

## யோகஜாகமத்தில்

ஸ்தூபி வரை சதுரம் நாகரமெனவும், கண்டம் முதல் எட்டுப்பட்டை த்ராவிடமெனவும், வேதி முதல் வ்ருத்தம் வேஸரமெனவும், ஸாத்விக நாகரமும், இராஜஸம் த்ராவிட மெனவும் நாகரம் புருஷ விமானமும், த்ராவிடம் ஸ்த்ரீ விமானமும், வேஸரம் நபும்ஸகமும் ஆகும்.

மேலும் இவைகள் ஸ்திதம் ஆஸீனம் சயனமெனவும் பெயர்பெறும். வர்தமான லிங்கத்திற்கு ஸ்திதமும், சிவாதிக லிங்கங்களுக்கு ஆஸீனமும், த்ரைராசிகலிங்கத்திற்கு சயனமும் ஆகும்.

நாகரவிமானத்திற்கு ஈசுவரரும் த்ராவிட விமானத் திற்கு பிர்மாவும் வேஸர விமானத்திற்கு விஷ்ணுவும் அதி தேவதையுமாவார்கள். இரண்டுவிதமாவது சிவலிங்கத்தை ஒட்டி விமானம். விமானத்தை ஒட்டி சிவலிங்கமும் என



இரண்டு விதம். இதை யோகஜாகமத்தில் மேல்கண்டவாறு கூறப்பட் டுள்ளது.



## காமிகாகமத்தில்

ஸ்வாயம்புவம் பாணலிங்கம் தைவிதம் ஆர்ஷம ஸித்தர்கள் வித்யாதரர்கள் மஹாத்மாக்கள் இவர்களால் பிரதிஷ்டை செய்விக்கப்பட்ட லிங்கங்களை யொட்டி விமான மும், மானுஷ லிங்கங்களுக்கு முன் உள்ளபடியும் இருக்கத் தக்கது.

காமிகாமத்தில் மானுஷலிங்கத்திற்கு விமானமாவது முன் செய்விக்கப்பட்ட விமானமானது இன்னது எனத் தெரியா விடில் லிங்கத்தையொட்டி விமானமும். இந்த லிங்க விமான மும் பூஜாபாகத்தை கொண்டு தெரிந்துகொள்ள வேண்டும். வேறுவிதமாகக் கூடாது.

இப்படி அம்சுமத் காச்யபமெனு முபாகமத்தில் தெரியும் பாகத்தை கொண்டு கீழ்பாகத்தை சோதிக்கலாகாது. மோகம் அஞ்ஞானம் இவைகளால் அடிபாகத்தை பிறித்து பார்ப்பானே யாகில் அவ்வாறு செய்தவன் கிராமவாசிகள் இராஜாக்கள் இவர்களுடைய நாசத்திற்கு காரணம், ஆகையால் அடிபாகத்தை சோதிக்காமல் காணப்படுகிற பூஜாபாதத்தை கொண்டே லிங்க நிச்சயஞ் செய்ய வேண்டும்.

முன்பாகவே ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஆர்ஷ பௌருஷ லிங்கங்களுக்கு இலிங்கத்தை யொட்டி விமானத்தைச் செய்யத் தக்கது.

இந்த லிங்க பிம்ப விமான விஷயம் காச்யப சில்பத் தில் விபரமாகக் கூறப்பட்டன. அதையுங் காணவும்.

அந்த விமானங்கள் வெடித்தல் இடிந்துவிடுவது நெருப்பால் கொளுத்தப்படல் இவைகள் அழகின்றிக் காணப் படுமேயாகில் அதன் பலனாவது. இது காமிகாகமத்தில்





விமானத்தின் கிழக்கு முதல் வடகிழக்கு வரை எட்டு திக்கிலும் வெடித்தால் இராஜபயம், அக்னி தாகம், கலகம், தன நாசம், வேலைக்காரர்களுக்கு நாசம் சத்ருவ்ருத்தி, புத்ர நாசம், ராஜா ஊமையும் முறையே உண்டாகும்.

இந்த விமானங்கள் ஸ்தூபி, நாஸி, சாலா, கபோதகம் கூடம் பஞ்சாங்கங்களுக்குள் பேதம் விழுதல் இவைகளால் ஒரு அங்கங் குறைந்தாலும் அந்த ஒரு அங்கத்தையும் முன் எந்த த்ரவ்யங்களால் செய்விக்கப்பட்டுள்ளதோ அந்த மரம், சுட்ட கல், கருங்கல், உலோகம் இவைகளாலேயே செய்விக்கப் பட வேண்டும்.

மாற்றுத்ரவ்யங்களால் செய்யப்படுவது தோஷம், காரணா கமத்தில் சொல்லப்படுவதாவது ஸ்தூபி நாஸீ சாலா கபோதகம் கூட பஞ்சரம் இவைகளுள் எவை எப்போது குறைவுடைய தாக ஆனதோ அவைகளை அப்போதே செப்பனிட்டுவிட வேண்டும்.

## ஸூக்ஷ்மாகமத்தில்

ஸ்வாயம்புவாதி லிங்கங்களது விமானம் அழகில்லா மல் போகும் பொழுது பலவர்ணம் முன்னுள்ள கற்கள் இவை களைக் கொண்டே செப்பனிடவும். அந்த விமானம் ஜீர்ண மாயின் முன்செய்த த்ரவ்யங்களாலேயே செப்பனிடவும். மாற்று த்ரவ்யங்களால் செய்யப்படுமாயின் இராஜ ராஷ்ட்ரங்கள் நாச மடையும். அவ்வாறு செய்தபின் ஆகமோக்த்ப்காரம் ஜலஸம்பு ரோக்ஷணமுஞ் செய்விக்கவும். அவ்வாறே பௌருஷ விமானங் களிலும் ஒரு பாகஞ் ஜீர்ணமாயின் அந்த த்ரவ்யங்களாலே செப்பனிட்டு ஸம்புரோக்ஷணஞ் செய்விக்க வேண்டும்.

## வர்கங்களின் பேதங்களாவன

வாதுளாகமத்தில் விசேஷமாக கூறப்படுவதாவது அதிட் டானம் முதல் ஒன்று முதலான தளங்களில் ஒரு அங்குலக் குறைவு உண்டாயின் தோஷமில்லை. இந்த ஒரு அங்குலத்திற்கு மேலாயின் அக்குறைவை பூர்த்தி செய்ய வேண்டும். பாதவர்கம்



ப்ரஸ்தரவர்கம் இவைகளில் மூன்றங்குலங்குறைவு காணப் பட்டாலும் ஜீர்ணமடைந்தாலும் வேடிப்பு காணப்படினும் அளவுபடிக்கு சேர்க்க வேண்டும். சிகரத்தில் மேல் சொன்னவை கள் இருந்தாலும் தோஷமாகாது. ஸ்தூபிவர்கங்களில் ஒன்று, ஒன்றே முக்கால், இரண்டங்குல அளவு குறைவுபடின், அவை களை முறைப்படிச் சேர்க்க வேண்டும். இவ்வாறு திருத்திய பின் சாந்தி ஹோமம் ஸ்நபநம் இவைகளைச் செய்யவும். ஸ்தூபிக்குள்ளிருக்கும் சூலமென்ற தண்டம் அசைவு பட்டிருப் பினும், வரிகள் பின்னமாயினும், கீழ் எறும்பு பொந்துகளிருப் பினும் முன் வைத்தபடிக்கில்லாவிடினும் இராஜ ராஷ்ட்ரங் களில் கேள்வி மூலம் சோக துக்கங்கள் உண்டாகும். ஆனதால் லக்ஷணமுள்ள புதிய தண்டத்தை ஸ்தாபனஞ் செய்ய வேண்டும். மேலும் பத்மம் அதன் கண்டம் சக்ரம் பாலிகை மொட்டு இவைகள் ஜீர்ணமாயினும் முன்புள்ள அந்த ஸாமான்கள் ஆறு வர்கங்களுடனுங் செப்பனிட்டும், மேல் சொன்ன ஆறு வர்க்கங் களும் (பத்மம் கண்டம் கர்ணம் பாலிகை சக்ரம் மொக்கு என்பன) முன் செய்துள்ள த்ரவ்யங்களாலேயே செப்பனிடப் பட்டு சாந்தி ஹோமத்துடன் ஸம்ப்ரோக்ஷணமுஞ் செய்விக்கப் பட வேண்டும். அப்படியே ஆறுவர்கங்கள் வெடிப்புடைய தாயினும், சிதைந்திருப்பினும், நாசமாக்கப்படினும், உருவமே இல்லாவிடினும் அந்த க்ராமவாஸிகளெல்லோரும் சோகம், துக்கம், பயம் இவைகளையுடையவர்களாவார்கள். ஆனதால் இவைகளைச் செப்பனிட்டு சாந்தி ஹோமத்துடன் ஸ்நபநாபி ஷேகமுஞ் செய்விக்க வேண்டும். சிகரம் அளவு குறைவுடைய தாயினும் அதன் ஆபரணம் அலங்காரம், நாஸிகாலங்காரம் சூலதண்டத்தின் முறிவு, பழைய சூலதண்டம் இவ்வாறிருந் தாலும், க்ராம, ஆலய விளக்கம் மாறுபடும். ஆன தால் அதை உடன்செப்பனிட்டு முன்போலவே செய்விக்கவும் வேண்டும். கர்ணம் ப்ரஸ்தாரம் பாதபீடம் இவைகளின் அலங்காரங்கள் பத்மம், சாலை, போதிகை, கம்பம், வாஜனம், திக்பாலகர்கள், அவர்களது விமானங்கள் இவைகளில்லாவிடினும் பயிர் நாசம் உண்டாகும். ஆனதால் இவைகளைச் செப்பனிட்டு சாந்தி ஹோமஞ் செய்விக்க வேண்டும். இப்படி விமானாதிகளின் அங்கஹீனங்களிலும் சில திருக்கலாமெனவுங் கூறப்பட்டுள்ளன.







சுபநக்ஷத்ர முகூர்த்தத்தில் மூலாலயத்தில் சேர்க்க வேண்டும். பழய ஆலயத்தில் ஜீர்ணமுண்டான போதும் பாலாலயஸ்தாபனஞ் செய்விக்க வேண்டும். மேலும் பூமி சகுன பரீக்ஷைகள், ஆலய சதுரத்திற்கு மளையடித்தல், கர்ஷணம் பதவின்யாசம், காலபரீக்ஷை, பிர்மரந்தரம் மூடல், ஸ்தூபிதண்டஸ்தாபனம், யாகசாலை குண்டம், அஷ்டாதசக்ரியைகள், ஜலஸம்புரோஜணம், ஜீர்ணோத்தாரணாதிகள், அவப்ருதம், நித்ய பவித்ராரோபணம், தேவாலய பிம்பங்களுக் காவாஹன விஸ்ஜனம் இவைகளை பகலில் மட்டும் செய்விக்கவும்.

## ஸஹஸ்ராகமத்தில்

இரவிலோ பகலிலோ சரலக்னத்தில் தேவதைகளை பூஜித்து, பூஜித்த தேவதையை கும்பத்தில் ஆவாஹிக்கவும். இரவில் பூஜை ஹோமங்களை செய்யவும்.

## காரணாகமத்தில்

முதல் இரண்டாவது என பாலாலயம் இருவகை. அதாவது கிராமம், பெரிய ஊர், பட்டணம் இராஜதானி இன்னும் மற்ற இடங்களிலும் ப்ரதானாலயங்கட்ட இடம் சதுரித்த பின், பால லிங்கத்தை பிரதிட்டை செய்து பூஜித்து வர வேண்டியதற்காக கட்டப்படுவது முதலாவது பாலாலயம்.

ஸுப்ரபேத அம்சுமானாகமங்களிலும் முதலில் பாலாலயத்தல் ப்ரதிட்டையும், பின் மூலாலயத்தில் மூலலிங்கத்தை பரதிட்டித்த பின் பாலாலயத்தை நீக்க வேண்டும். பின், மூலாலயம் பீடம் சிவலிங்கம் பிம்பங்கள் இவைகள் ஜீரண்மான காலத்தில் இவைகளை கும்பத்தில் ஆவாஹித்து பால பிம்பத்தில் சேர்க்க. அப்பால் பிம்பத்திற்கான ஆலயம் தருணாலயமெனப்படும்.

காரணாகமத்தில் மாதம் முதலியன பார்க்க வேண்டாமென கூறப்படுகிறது. அவையாவது நல்ல மாதம் பக்ஷம் நக்ஷத்ரம் வாரம் முதலியவைகளைப் பார்த்து சிவலிங்க ப்ரதிட்டை முறைப் படிக்க ஆத்ய பாலஸ்தாபனத்தைச் செய்யவும்.



இவைகளுள் சரலக்னம் சிரேஷ்டமும், உபயலக்னம் மத்ய மமும், ஸ்திர லக்னம் அதமமும் ஆகும். இரண்டாவது பாலஸ் தாபனத்திற்கு மாதம் பக்ஷம் முதலியவைகளை எதிர்பார்க் கவும் வேண்டாம்.

## பாலலிங்க சலலிங்க லக்ஷணம்

ஸுப்ரபேதாகமத்தில் உலோஹம் கருங்கல் மரம் மண் இவைகளால், கூறப்பட்ட லக்ஷணத்துடன் பாலலிங்கமும், கருங்கல் மரம் இவைகளால் பாலபிம்பமென்ற சலலிங்கமும் பாலாலயத்தில் ப்ரதிட்டை செய்விக்கலாம்.

## பாலலிங்க த்ரவ்யங்கள்

காமிகாமத்தில் பாலலிங்கம் உலோகம் கருங்கல் மரங்கள், இம்மரங்களுள் பாலள்ளமரம் பொரக ஆல் அத்தி அரசு இலுப்பை பிலா நெல்லி வாகை சந்தனம் கருங்காலி தேவ தாருமா இவைகளால் பாலலிங்க பிம்பங்கள் செய்விக்கவும். லிங்க அளவின் பேரிலேயே பீடமுஞ் செய்விக்கவும் வேண்டும்.

ஸுப்ரபேதாகமத்தில் மேல் கூறப்பட்ட மரங்களாலும், மண்ணாயின் மணல் சேர்ந்தும், சிவலிங்கம் எந்த த்ரவ்யத்தால் செய்யப்பட்டதோ அதாலேயே பீடமும், அல்லது சுட்ட கல் லாலோ செய்விக்கவும்.

இந்த லிங்கங்களது அளவின் பேதம் வீராகமத்தில் கூறப் பட்டு முள்ளது. கர்பக்ரகவாசல், கர்பக்ரக சதுரம், தாலம் இம் மூன்று கொண்டும் செய்விக்கலாம்.

லிங்கமானமாவது சிவலிங்கத்தின் பூஜாபாகமான ருத்ர பாகம், நந்தியின் இரண்டுபாகம் இந்த உயரங்கொண்டும், தால அளவில் நான்கு மூன்று இரண்டு என்று உத்தமம் மத்யமம் அதமமான முறையே இந்த அளவைக்கொண்டும் கருங்கல், மரம், இவைகளாலும் பாலலிங்கஞ் செய்விக்கவும். கர்பக்ரஹ வாசலளவாவது வாயிலுயரத்தை ஒன்பது பாகஞ் செய்து அதில் ஒவ்வொரு பங்கும் பிம்ப உயரமிருக்கத்தக்கது.







ஸுப்ரபேதாகமத்தில் மூலலிங்கத்திற்கு ஸமமான உயரம் அல்லது முக்கால், அரை உயரம், அதற்கான சுற்றளவு இவை களுடனிருக்க வேண்டும். லக்ஷணோத்தாரணங்கள் வேண்டாம். இதற்கு தகுந்த விஷ்ணுபிர்ம பாகங்களும், மூலலிங்கம் போன்று சிரேவர்தனமும், பாலலிங்கத்திற்கு தகுந்த பீடமும், பீட இடைவெளியும் செய்விக்கவும். அப்பீடமும் விருத்தம் சதுரம் பதினாறு பட்டையாகவும், உயரத்திற்கு தகந்த விசாலம் பள்ளம் ஜலம் போகும் மார்கம் இவைகளுடன் லிங்க உயரத்தின் மூன்றிலொரு பாகம் பீடத்தினுள்ளும் இருக்க வேண்டும். இந்த பால லிங்கங்களுக்கு ரத்னந்யாஸம் கூர்ம சிலை ப்ரதிலிங்கம் இவைகள் வைக்க வேண்டும்.

## காமிகாகமத்தில்

லிங்கத்தில் நீளம் வ்ருத்தமும், நீளம் பருமனும் ஸமம். குடை முதலிய சிரஸுடன் ஸுத்ரமில்லாமலுஞ் செய்விக்க வேண்டும். ஒன்பதங்குலம் வரை பாலலிங்கங்கள் செய்விக்க வேண்டும். அந்த பாலலிங்கத்தின் மூன்று அல்லது நான்கில் ஒரு பங்களவு பீடத்தில் பதிய இருக்க வேண்டும். அடியும் நுனியும் ஸமம் சிறந்தது. குறைவு மத்யமம், இடைவெளி யுள்ளது அதமம். எட்டு பாகமாக பகுக்கின் ஒன்பதாவது பாகம் லிங்கத்தினுயரமும் ஆகும்.

## ஸுக்ஷ்மாகமத்தில்

ஏழங்குலம் முதல் இரண்டங்குலம் கூடுதலாக இருபத்தி மூன்றங்குலம் வரை சிவலிங்கத்தினுயரம் ஒன்பது விதமாகும். லக்ஷணத்தை சோதித்தல் பிர்மஸுத்ரமும் வேண்டாம். பீட மத்தியில் ஹ்ருதய மந்திரமுச்சரித்து தங்கமும் வைக்கவும்.

## காமிகாகமத்தில்

மூலபிம்பத்தின் பாதியளவு சிரேஷ்டமும், நான்கிலொரு பங்கு அளவு கனிஷ்டமும், எட்டு பங்கு அளவில் ஏழு பங்கும் ஆக ஒன்பது வித அளவுமாகும்.



# பாலஸ்தாபனாலய லக்ஷணம்



## காமிகாகமத்தில்

மூலாலயத்திற்கு வடக்கு, வடகிழக்கு, கிழக்கு, தெற்கு, தென்கிழக்கு அல்லது இஷ்டமான இடத்தில் பாலஸ்தாபனா லயமிருக்க வேண்டும்.

## காரணாகமத்தில்

மூலஸ்தானாலயத்தின் முன் வடக்கு வடகிழக்கு முதலிய முன் சொன்ன இடங்களிலும் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து ப்ரகாரங்களிலும் மூன்று முழம் முதல் பனிரண்டு பனிரண்டங் குலங்கூடுதலாக ஏழரை முழம் வரை பாலாலயமும் தருணாலய மும் இருக்க வேண்டும்.

## வீராகமத்தில்

கொட்டகை - மண்டபம் - உபாநாதிஸ்தூபி வரையிலான ப்ராஸாதம் இவைகளும் இவைகளுக்கு ஸமமான அளவு முக்கால். அரை பங்களவு அர்த மண்டபம் அல்லது மகா மண்டபம் இவைகளிருக்கத்தக்கது.

## அஜிதாகமத்தில்

பாலஸ்தாபனாலய கர்பக்ரஹவிஸ்தாரம் ஐந்து நான்கு மூன்று முழ பரப்புள்ளதாகவும் கருங்கல், சுட்டகல், சுடாதகல் இவைகளிலொன்றாலும் அர்தமண்டபம் கர்பக்ரஹ பரப்பின் மூன்று பங்கு; நான்கு பங்கு விசாலமுடையதாகவுஞ் செய் விக்கவும். அந்த விஸ்தாரத்தின் ஒரு பங்கு மஸூரகமும் அந்த மஸூரத்தின் இரண்டு பங்கு யாமமும் அம்மண்டபத்தின் மேல் மரத்தால் கொட்டகையுமுடையதாக இருக்க வேண்டும். அப்பாலயமும் மூல கர்பக்ரஹ பாதியளவு, நாலில் அல்லது மூன்றிலொரு பங்களவுஞ் செய்விக்க வேண்டும். இந்த பால லிங்கத்தில் மூலலிங்கத்திலாவாஹிக்கப்பட்ட சக்தியை ஆவா





ஹித்து யாத்ரா ஹோமத்துடன் ஸாபேக்ஷமாக சேர்ந்துகொண்டு தர்பமாலையாகிய ஜாலமார்க்கப்ரயோகத்தால் நிஷ்கள ஸகள ரூப ஸதா சிவத்தை ப்ரவேசிக்கச் செய்யவும். அந்த பால ஸ்தாப னத்திற்கு அநேகாகம வசனங்களால் அதன் கார்ய கூட்ட முறையுஞ் சொல்லப்படுகிறது.

## அஜிதாகமத்தில்

பாலாலயத்தின் முன்பக்கம் தென்மேற்கு, வடகிழக்கு இவைகளிலொன்றில் ஐந்து மூன்று இந்த முழு அளவில் உத்தம மத்யம கன்யஸம் என்ற முறையில் யாகசாலையை யாகசாலை யின் அளவில் ஒன்பதிலொரு பங்களவில் நடுவில் வேதிகையும், வேதிகையின் வெளிபாகத்தில் நவகுண்டமும், பஞ்ச குண்ட மாயின் கிழக்கு முதலிய திசைகளில் முறையே சதூரச்ரம், தனுஸ், விருத்தம் திருகோணம் வடகிழக்கில் விருத்த குண்டத் தையுஞ் செய்வித்து பின் அந்த யாக சாலையில் ப்ராம்மண போஜனத்துடன் மெழுகி பெருக்கி புண்யாஹ பஞ்சகவ்யங் கொண்டு புரோக்ஷிக்கவும் வேண்டும்.

## காமிகாகமத்திலும்

பாலஸ்தாபனாலயத்தின் முன் பத்து, ஒன்பது, எட்டு, ஏழு இதில் ஒரு பாகமான முழ அளவில் சதுரமாயும் வாயில், பதினாறு அல்லது பனிரெண்டு, இந்த தூண்களுடனும் மூன்று பத்தியுடையதாயும் தர்பமாலை, மேக்கட்டிகளுடனும், யாக சாலையை செய்விக்க வேண்டும். யாகசாலையின் நடுவில் நாலி லொரு பங்களவினால் வேதிகையுஞ் செய்விக்க வேண்டும்.

## காரணாகமத்தில்

அந்த யாகசாலையில் மாஷஷபதத்தில் சதுரம் யோநி அர்தசந்திரம் முக்கோணம் விருத்தம், ஏழு பட்டை, தாமரை மலர், எட்டு பட்டை இக்குணடங்களை கிழக்கு முதலிய எட்டு திசைகளிலும், வடகிழக்கு கிழக்கு இங்குள்ள குண்டங் களிடையில் பிரதான குண்டமான விருத்தத்தையுஞ் செய்விக்க வேண்டும்.



## ஸூக்ஷ்மாகமத்தில்

ஒன்பது, ஐந்து, ஒன்று இந்த குண்டங்களிலோ அல்லது ஸ்தண்டிலத்திலோ ஹோமஞ் செய்யவும்.

## காமிகாகமம்

யாகசாலைக்கு வடக்கில் ஜலாதிவாஸ மண்டபஞ் செய்வித்து அதில் புண்யாஹ பஞ்சகவ்யங்கொண்டு ப்ரோக்ஷித்து லிங்கத்தை அபிஷேகித்து ப்ரதிட்டைக்குரியது போல ஜலாதிவாஸமும் சயனமுஞ் செய்விக்கவும்.

## அஜிதாகமத்தில்

அதிவாஸனத்திற்கு ஜீர்ண லிங்கத்தின் முன் கும்ப ஸ்தாபனத்துடன் யாத்ரா ஹோமமூஞ் செய்வித்தும், யாகசாலையில் கும்பங்களை வைத்தும் விசேஷ பூஜா ஹோமங்களையுஞ் செய்விக்கவும்.

## ஸுப்ரபேதாகமத்தில்

சயனத்தின் நின்றும் சிவலிங்க பேரங்களை எடுத்து பாலாலய கர்பக்ரகத்தில் சிவ பிம்ப மந்தரங்களை யுச்சரித்து பீடமத்தியில் வைத்தும் ஹ்ருதய மந்திரமுச்சரித்து திருபந்தன மருந்துஞ் சாத்தவும்.

## காமிகாகமத்தில்

மூலலிங்கத்தின் முன் சிவ வர்தனி கும்பங்களை அஷ்டவித்யேசகும்பங்களுடன் வைத்து மூலலிங்க பிம்பங்களை கந்த புஷ்பாதிகளுடன் பூஜித்து ஆவாஹித்து பின் யஜ மானர் ஆசார்ய சில்பிகளுடன் ஒரு வருஷம் முதல் பனிரெண்டு வருஷத்திற்குள் மூலாலயத்தை செப்பனிட்டு வ்வாலயத்தில் மறுபடியும் ஸ்தாபனஞ் செய்கிறேன் என விஞ்ஞாபனத்துடன் இரண்டாவது பாலஸ்தாபனத்தை செய்விக்கவும். முதலில் செய்விக்கும் பாலஸ்தாபனத்தில் இப்பிரார்த்தனை வேண்டாம் அல்லது வாதுளாகமத்தில் மேல் சொன்னபடி பூஜா மூலமந்திர ஜபங்களை









ஸமர்பித்து நமஸ்கரித்து மூன்று பக்ஷம், மூன்று மாதம், மூன்று வருஷம் இவ்வளவுக்குள் மூலாலயத்தில் சேர்த்து வைக்கிறேன் என ஸ்வாமி ஸன்னிதானத்தில் பிரார்த்திக்கவும். மேல் சொன்ன ஆவாஹனம் ஸங்க்ரமணம் நிராலம்பம், ஸாலம்பம் இவை களை இவ்வாசார்யரால் செய்விக்கப்பட்ட ஆத்மார்த்த பூஜா பத்ததியில் விவரமாக கூறப்பட்டுள்ளது . அங்கு பார்க்க.

இவ்வாறு அஜிதம் காமிகம் வாதுளம் ஸுப்ரபேதம் காரணம் அம்சமான் இவ்வாகமங்களில் பாலஸ்தாபநவிதி படலங்களில் ஏனைய விபரமும் காணலாம். மூலத்தில் லிங்காஞ்ச பாலாபிதம் என்ற இடத்தில் - ஆம் என்றதால் பத்துவித அம்சு மதாகம பால லிங்கங்கள் சொல்லப்படுகிறது.

ப்ராயச்சித்தத்திற்கான பாலஸ்தாபனம் இரண்டாவது இதன் பேதம் கத்தி, கூர்சம், கண்ணாடி, ப்ரதிபிம்பம், கும்பம், ஸ்தண்டிலம், மண்டலம், பாதுகை, வஸ்த்ரம், சுவர்சித்ரம். இந்த பத்தும் பாலலிங்கத்திற்கும், அவைகளுள் கும்பத்தில் பாலஸ்தாபனம் ஒரு மாதமளவும் மணடலம் ஸ்தண்டிலம் கூர்சம் இவைகளில் பாலஸ்தாபனம் ஏழு தினமளவும் வைத்து இவைகளில் மண்டல பூஜா முறையில் பூஜிக்கவும். ஏனைய கத்தி, கண்ணாடி, பிரதிபிம்பம், பாதுகை, வஸ்த்ரம், சுவர் சித்ரம் இவைகளில் பனிரெண்டு வருஷமளவு வரை வைத்துப் பூஜிக்கலாம் ஆயினும் இது சொத்தின் காரணம் பற்றி வாஸத் தின் பேதமுங் காணவேண்டியதாகும்.

## காமிகாகமத்தில் கடஸ்தாபன காலவரையாவது

ஸ்வாயம்புவம், தைவிகம், ஆர்ஷம், காணவம், உலோஹ பிம்பங்கள் இவைகள் நதீஜலப்பெருக்கால் தகர்க்கப்பட்ட விடங்களில் கும்பத்தில் ஆவாஹனங்கூடாது. மானுஷ லிங்கங் களை ஏழு பதினைந்து தினங்கள், ஒரு மாதம் வரை கும்பத்தி லிருக்கச் செய்யலாம். அதற்குமேல் இருக்கச் செய்வது எல்லா தோஷங்களையுஞ் செய்யும். ஸ்வயம்பு லிங்கத்திற்கு பால லிங்கம் வேண்டா மெனவும் வேண்டுமெனவும் சில சில ஆகமங் களில் சொல்லப் பட்டாலும், இதன் பெருமையை அநுஸரித்து



ஜீர்ணாலய விஷயத்தில் வேண்டாமென ஒப்புக்கொள்ளப் பட்டதாகவே கொள்ளப்பட வேண்டும்.



## வீராகமத்தில்

ஸ்வாயம்புவம் ஆர்ஷம், தைவிகம் இந்த லிங்கங்கள் ஜீர்ணமாயின் ஜீர்ணத்திலேயே பாலலிங்கஞ் செய்விக்கத்தக்கது. அம்சுமானாகமத்தில் கும்பபாலஸ்தாபனம் மாதத்திற்குமேல் வைத்திருக்கக்கூடாது. காரணாகமத்தில் கும்பபாலஸ்தாபனம் ஐந்து தினம், ஏழு தினம், ஒரு மாதம், இவ்வாறு உத்தம மத்ய மாதமாகும். இந்த கணக்கு அங்குரார்பண தினம் முதலே எண்ண வேண்டும். இந்த முழு ஜீர்ணாலய விஷயத்தில் ஸ்ரீ ஸதாசி வரை பஞ்சாவரண தேவர்கள் பரிவார தேவர்கள் விமானத்தி லிருக்குந்தேவர்கள் எல்லோரையும் பாலஸ்தாபன கும்பத்தில் ஆகர்ஷித்து பூஜிக்கவும் வேண்டும். மேலும் சில விசேஷ மாவது ஒரு மாதமளவு கும்பத்திலும் இரண்டு மாதம் கத்தி யிலும், கண்ணாடியில் ஆறுமாத காலமும் வஸ்த்ரசித்ரத்தில் ஒரு வருஷ காலமும் இருக்கச் செய்தும், ஸோமாஸ்கந்தர் முதலியவர்களை பாலபிம்பத்தில் முப்பத்திரண்டு வருஷமும் வஸ்த்ரசித்ரத்தில் இரண்டு வருஷ காலம் வரை வைத்து பூஜிக் கலாம்.

## காமிகாகமத்தில்

ஒரு மாதம் முதல் பனிரண்டு வருஷத்திற்குள் முன்போல் கும்பத்திலாவாஹித்து, அதிவாஸனத்தின் பின் மூல லிங்க பிம்பத்தில் சேர்த்து பூஜிக்க வேண்டும்.

பாலஸ்தாபனத்திற்கு லிங்க பிம்பாதிகளை கும்பத்தி லாவாகித்த பின் லிங்க பிம்பங்களை மரக்கூண்டுக்குள் இருக்கச் செய்து தினமும் சாந்தி ஹோமத்துடன் பூஜித்தும் வரவும்.

## காரணாகமத்தில்

சிவலிங்க பிம்பங்கள் ஆலயம் விமானம் செப்பனிடும் வரை தருணாலயத்தில் பூஜை உத்ஸவம் முதலியவைகளைச்





செய்விக்கவும். இப்படி கூண்டுக்குள் வைப்பதை ஆவர்த அனாவர்த புனராவர்த்த அந்தரித ப்ரதிட்டைகளுள் புனராவர் தாந் தரிதமென சொல்கிறார்கள்.

காரணாகமத்தில் ப்ரஸாதம் (அதாவது கர்பக்ரஹம் அடி முதல் நுனி வரை) வீழ்தல், பின்னம், சிவலிங்க மசைக்கப் பட்டிருப்பினும் மூர்த்தியை மூலாலயத்தினின்று பாலாலயத் தில் வைத்து செப்பனிட்டபின் மூலாலயத்தில் சேர்த்தல் புனரா வர்தமாகும்.

## அம்சுமானாகமத்தில்

புனராவர்தமிரு வகைப்படும். யுகம் யுகமாக பூஜிக்கப் பட்டு வரும்போது ப்ரஸாதம் வீழ்ந்து சிவலிங்கம் சலனமான போது ஸ்தான சக்தியை ஆவாஹஞ்செய்து பாலபிம்பத்தில் வைத்து ப்ரஸாதத்தை செப்பனிட்டபின் ஸம்புரோக்ஷணஞ் செய்வித்தல் ஒன்று, மற்றொன்று குறைவான அளவை யுக்த மான அளவில் செய்ய மூலாலயத்தில் நின்று ஆவாஹனஞ் செய்து பால பிம்பத்தில் சேர்த்து கூண்டை சிவலிங்கமாகவும் சிவத்தை பக்ஷி போல பாவித்து ப்ரஸாதத்தை முன்போல செப்பனிட்டு அச்சிவ சக்தியை பாலலிங்கத்தினின்று கடத்தில் ஆவாஹித்து மூலலிங்கத்தில் சேர்த்து ஸம்புரோக்ஷஞ் செய் வித்தல். இப்படி பாலாலயத்திலிருப்பதை கிளி கூட்டிலிருப்ப தாகச் சொல்வார்கள். இக்காலத்தில் அளவுக்குறைவை சில்பி பூர்த்தியான அளவாகவுஞ் செய்து வைக்க வேண்டும்.

பின் சில்பகார்யம் அதாவது விமானத்தின் மேலுள்ள பிம்ப சித்ரங்கள் செப்பனிடுதல், ஆசார்யகார்யமாவது விமானத் தினுள்ள பிம்பங்களை சிவலிங்காவாஹன கும்பத்தில் சேர்த்து பாலலிங்கத்தில் சேர்த்து பூஜித்து வருதல் இந்த இரண்டும் முடிந்தபின் விமானஞ் செப்பனிட்டபின் விமானத்தில் சேர்க்க ஸம்புரோக்ஷணத்தை வீராகமம், காமிகம், காரணம், அஜ்தம் அநலம் இவைகளில் சொல்லப்பட்டபடி செய்யவும். இவ் விடத்தில் மூல புத்தகத்திலுள்ள ப்ராஸாத ஸதாபன விதிகள் விரிவிற்கஞ்சிவிடப்பட்டது.

ப்ராகாரங் கோபுரம் மண்டபம் முதலியனவைகளுக்குஞ் ஜீர்ணோத்தாரணம் மறுபடி ப்ரதிட்டை ஸமானமானதால்



ஒரு சுலோகத்தால் இந்த ஜீர்ணம் செப்பனிட, இதற்கான ஸம்புரோக்ஷணம் இவைகளைச் சொல்கிறார்.

## ஆறாவது சுலோகம்

ப்ராகாரங்கள் அதாவது அந்தர் மண்டலம் அந்தர்ஹார மத்யஹார மார்யாதா மகாமர்யாதா என்ற ஐந்து ப்ராகாரங்கள் கோபுரங்கள் த்வாரதூலா, த்வாரசோபா, த்வாரப்ராஸாதம், த்வாரஹர்ம்யம், த்வாரகோபுரம் என்ற ஐந்து கோபுரங்கள் (ஒரு நிலம் முதல் பதினாறு நிலம் வரையுள்ளன) நான்கு தூண்களிலிருந்து ஆயிரம் தூண்களுள்ள மண்டபங்கள், ஸவஸ்திகம் முதலிய ப்ராஸாத பதங்கள், நித்யாக்னிகார்ய குண்டங்கள், (மூலாலயத்திலுள்ள விநாயகர் முதலான) பரிவார தேவதைகளின் ஆலயங்கள் இவைகள் ஜீர்ணமடைந்தபோதும் ஒரு அங்கம் மட்டும் ஜீர்ணமானபோதும் அதுகளை செப்பனிட்டும், பூராவுஞ் ஜீர்ணமானபோதும் அந்தந்த த்ரவயங்களால் முன்போலவே செப்பனிட வேண்டும். உயர்ந்த த்ரவயங்களால் முன்புள்ளதை விட பெரிதாக செய்விப்பதுந் தோஷமாகாது.

### காமிகாகமத்தில்

மேல்கண்டபடி உள்ள இடங்களைச் செப்பனிட்டு பஞ்சகவ்ய ப்ரோக்ஷணத்துடன் சாந்தி ஹோமமுஞ் செய்விக்கப்பட வேண்டும்.



## ப்ராகாரங்களது அளவு கூட்டல்

### வாஸ்து வித்யாப்ரகாசத்தில்

மேல்கண்டபடி உள்ள இடங்களில் ஐந்து ப்ராகாரமுள்ள விடங்களில் மூன்று ப்ராகாரமும் மூன்றுள்ள இடங்களில் ஒன்றுஞ் செய்விக்கத்தக்கதாகும். இவ்வாறு விபவத்திற்கு தகுந்த படியுஞ் செய்யலாம். ஒரு ப்ராகாராலயத்தில் வெளிச்சுற்றுப் புழக்கமிருக்கவும் இவைகளை கூடக்குறைவாகவுஞ் செய்விக்கலாகாது.

## ப்ராகார ஜீரணம்

### காரணாகமத்தில்

ப்ராகாரம் கொஞ்சம் சீர்ணமாயின் முன்சொன்னபடியும்,





பூராவுஞ் சீர்ணமாயின் கல்நாட்டு விழா முதல் பூராவுஞ் செய்து சாந்திஹோமம் செய்விக்கவும். முன்னுள்ளது போலவும் அதிகமாகவுஞ் செய்விக்கவும்.

## மாநஸாரத்தில்

பழைய கோவில்கள், கிணறுகள், மரங்கள் இவைகளை ஒதுக்கவும் தூர்கவும், வெட்டுவதுங் கூடாது. இவைகளைச் சுற்றி பதராகிருதியாக (ப. போல ஒதுக்கி) ப்ராகாரங் கட்டுவிக்கவும். அவ்வாறின்றி மேல் சொன்னதை செய்விப்பவர்கள் விபத்துக் குள்ளாவார்கள். ஆனதால் அவைகளை விடுத்து வெளியே ப்ராகாரஞ் செய்விக்கவும். இப்படி காமிகம் ஸுப்ரபேதம் நிச்வாஸம் காரணம் ஸூக்ஷ்மம் இவ்வாகமங்களில் காட்டப்படு வதை மூலத்தில் பரக்கக் காணவும்.

## வாஸ்து ஜீர்ணங்கள்

ஆலயங்கட்டுவதற்கான ப்ராகார வீதிகளுடன் சதுரிக்கப் படுமிடம் வாஸ்துவெனப் பெயருடையதாகும்.

## காமிகாகமத்தில்

இவ்வாஸ்து ஆகமம் சில்ப சாஸ்திரங்களில் கூறப்பட் டுள்ளபடி இருப்பது மிக விசேஷம். இதற்கு மாறுதலாக இருப் பது இராஜாக்களுக்கு ஆபத்தை விளைவிக்கும். இவ்வாஸ்து கிழக்கு வடக்கில் நீண்டிருப்பது விசேஷமும் தெற்கு மேற்கில் நீண்டிருப்பது தோஷமும் உண்டாகும். ஆனதால் கிராமம் முதலியதும் வீடுகள் சாலைகள் (நீண்ட சதுரமானதுகள்) ஒரு சதுரத்தில் குறுகல் நீளங்களிருக்கக் கூடாது. ஆனதால் ஸமம் அதிகம் அல்லது நான்கு பக்கம் கிழக்கு வடக்கில் இவ்வாறு பெருக்கியும் சாலைகளை மட்டும் அங்கணங்களைக் கொண் டும் எல்லோருக்கு முசிதமாகச் செய்விக்கவும். ஆயினும் மட்ட மானதை உயர்ந்த த்ரவ்யங்களால் முன்போலவே விபவாநு ஸாரமாக விரிவாகவே செய்யவும். இவ்வாறு செய்பவர்கள் பெரிய புண்யவான்களாகி எல்லா இஷ்டஸித்திகளைப் பெரு வார்கள். இப்படியே ஸர்வஞ்ஞானோத்தாத்திலுங் கூறப்பட் டுள்ளது.



## குண்ட ஜீர்ணோத்தாரணம்

**அஜிதாகாகமத்தில்**

நித்யாக்னிகுண்டஞ் ஜீர்ணமாயின் அக்குணடத்திலுள்ள அக்னியே யாத்ராஹோமஞ் செய்து அக்குண்டத்திற்கு கிழக்கு அல்லது வடக்கில் மணலால் செய்வித்த சதுரத்தில் ஹோமஞ் செய்து அந்த அக்னியை மடப்பள்ளி அக்னியில் சேர்க்க வேண்டும். பின் குண்டஞ் செப்பனிட்டபின் அச்சதுரத்திலிருந்து யாத்ரா ஹோமத்துடனக்னியை குண்டத்திலிட்டு விதிப்படி ஓமஞ் செய்யவும்.



## பரிவாராலய ஜீர்ணோத்தாரணம்

**காரணாகமத்தில்**

பரிவார தேவர்களது ஆலயஞ் சீர்ணமாயின் முன் மூல பிம்பம் லிங்கங்களுக்குச் சொன்னபடிக்கு பாலாலயத்தில் பிரதிட்டை செய்வித்துப் பூஜிக்கவும். பின்பு முன்போலவே அழகாகச் செய்து விதிப்படிக்கு அவ்வாலயத்தில் சேர்த்து பூஜிக்க வேண்டும். இவ்வித பரிவார தேவதைகளுக்கும் ஆலயத் திற்கும் பொருந்தும். பிம்பங்கள் ஜீர்ணமாயின் அக்கோவில் களுக் கெதிரில் பீடத்தில் அப்பிம்ப சக்தியை விதிப்படி ஆவா ஹித்துப் பூஜித்தும், பிம்பஞ் செய்து ப்ரதிட்டை செய்யும்போது அப்பீடத்திலிருந்து விதிப்படி ஆவாஹித்து மூல பிம்பத்தில் சேர்த்தும் பூஜிக்க வேண்டும்.

**காச்யபத்தில்**

பரிவாரதேவர்களது ஆலயங்கள், பீடங்கள் ப்ராகாரங் கள், கோபுரங்கள், அர்த்த மண்டபம், பிற மண்டபங்கள் முன்பு செய்தது அளவுக்கு குறைவாகவோ கூடுதலாகவோ இருக்கு மாயின் பின் அதே இடத்திலோ அதற்கு வெளியாகவோ லக்ஷணமாகவே செய்விக்க வேண்டும். இப்படிய வாதுளம் ஸுப்ரபேதம் அம்சுமான் இவ்வாகமங்களிலும் கிரணாகமத் தில் இவ்வாறு செய்பவர்கள் உருத்ரலோகத்தில் அவர்களுக்கு வாஸமும், இப்படி செய்விக்கப்பட்ட ஆலயாதிகளை பார்ப் பவர்களான பஞ்ச பாதகிகளும் பரமகதியையும் பெறுவர். ஜீர்ணோத்தார தசகத்தில் முதல் பரிச்சேதம் முடிந்தது,





இவ்வாறு ஆலய ஜீர்ணோத்தாரத்தைச் சொல்லி பின் சிவலிங்கங்களது லக்ஷணங்களும் ஜீர்ணோத்தாரணத்தையும் சொல்கிறார்.

## ஏழாவது சுலோகம் சிவலிங்க ஜீர்ணோத்தாரணம்

### ஸுப்ரபேதாகமத்தில்

ஸ்ருட்டி காலத்தில் ஸ்ருட்டியும் ஸம்ஹார காலத்தில் ஒடுக்கமும் இதிலிருந்தே உண்டாகின்றது என்பது லிங்கபதப் பொருளாகும். இவ்லிங்கங்கள் ஸ்திரமெனவும், சலமெனுமிரு வகைப்படும்.

### காரணாகமத்தில்

இவ்விரண்டுக்குள் சிலையால் ஆனதும் பிர்ம விஷ்ணு ருத்ர பாகங்கள் மூன்று ஸூத்ரங்கள் மொட்டு இவைகளுடங் கூடியதும் ஸ்திரமென்றும் ஏனைய லிங்கங்கள் யாவுஞ்சலமு மாகும். ஸுப்ரபேதாகமத்தில் இந்த சல லிங்கங்களும் க்ஷணிகம் மணல் மயம், ரத்ன மயங்கள் லோஹத்தாலாக்கப்பட்டன, மரங்களால் ஆனது, கற்களாலானது என ஆறு பேதங்கள். க்ஷணிக லிங்கங்களான மண், அக்ஷதை, நதி மணல், அன்னம், கோமயம், வெண்மை, ருத்ராக்ஷம், விபூதி, சந்தனம், கூர்சம், புஷ்பமாலை, வெல்லம் ஆக பனிரெண்டு பேதங்கள். இவை களுள் ருத்ராக்ஷத் திற்கு பதிலாக பழமும், விபூதிக்கு பதிலாக அரிசிமாவுஞ் சில ஆகமங்களில் கூறப்படுகிறது. முதலாவதான மண்லிங்கம் பக்வம் (சுட்டது) அபக்வமென இரு வகையாகும்.

லோகலிங்கங்கள் தங்கம், வெள்ளி, தாமிரம், வெண் கலம், தகரம், இரும்பு, ஈயம், பித்தளை இப்படி எட்டு விதம்.

இரத்ன லிங்கங்கள் முத்து, பவழம், வைடூர்யம், படிகம், புஷ்பராகம், மரகதம், நீலம் இப்படி ஏழு விதம்.

மரலிங்கங்கள் வன்னி, இலுப்பை, காரண்டகம், கோங் கிலவு, திந்துகம், மருது, அரசு, அத்தி இப்படி எட்டு விதம்.



இம்மரங்களைக் காட்டிலும், வேறுமரங்களுங் காமிகா கமத்திலுங் கூறப்பட்டுள்ளது. திவ்யம், ஸ்வாயம்புவம், தைவதம், கர்ணவம், ஆஸுரம், ஸுரம் (ஸுரேட்யம்) ஆர்ஷம், ராக்ஷஸம், மானுஷமென சிவலிங்கங்கள் ஒன்பது விதம்.

ஆக க்ஷணிகம் பனிரண்டு, மண் இரண்டு, லோகம் எட்டு, மரங்கள் எட்டு, இரத்னங்கள் ஏழு, கருங்கல்லாலானதுகள் ஒன்பதும் ஆகும்.



வெடிப்புடையதாயினும், சிதைந்திருப்பினும், நாசமாக்கப் படினும், உருவமே இல்லாவிடினும் அந்த க்ராம வாஸிகளெல் லோரும் ரோகம், துக்கம், பயம் இவைகளை யுடையவர் களா வார்கள் ஆனதால் இவைகளைச் செப்பனிட்டு சாந்தி ஹோமத் துடன் ஸ்நபநாபிஷேகமுஞ் செய்விக்க வேண்டும். சிகரம் அளவு குறைவுடையதாயினும் அதன் ஆபரணம் அலங்காரம், நாஸி காலங்காரம் சூலதண்டத்தின் முறிவு, பழைய சூலதண்டம் இவ்வாறிருந்தாலும், க்ராம, ஆலய விளக்கம் மாறுபடும் ஆனதால் அதை உடன்செப்பனிட்டு முன்போலவே செய்விக் கவும் வேண்டும். கர்ணம் ப்ரஸ்தாரம் பாதபீடம் இவைகளின் அலங்காரங்கள் பத்மம் சாலை, போதிகை கம்பம் வாஜனம் திக்பாலகர்கள் அவர்களது விமானங்கள் இவைகளில் லா விடினும் பயிர் நாசம் உண்டாகும். ஆனதால் இவைகளைச் செப்பனிட்டு சாந்தி ஹோமஞ் செய்விக்க வேண்டும். இப்படி விமானாதிகளின் அங்கஹீனங்களிலும் சிலதிருக்கலாமெனவுங் கூறப்பட்டுள்ளன.

அதாவது காமிகாமத்தில் எல்லா லக்ஷணங்களுடன் கூடிய கர்பக்ரகம் அல்பதோஷம் அகல நீளத்தின் கொஞ்சங் குறைவு உண்டானாலும், உயரத்தில் பனிரண்டங்குலம் வரை யும், தூண் முதலியதுகளில் ஒரு அங்குலம் வரையும், கிராமம் குப்பம் பட்டினம் இவைகளின் ஒரு முழமும், தலம் இரண் டங்குலம் வரை குறைந்திருப்பினுங் கூடவிருப்பினும் தோஷ மாகாது.





## ஸ்தூபி அதன் தண்டம்

காரணாகமத்தில்

ஸ்தூபி அங்கங்களில் ஒரு அங்குலமும், மஹா பத்மத்தில் இரண்டங்குலமும், மஹா நாஸியில் மூன்றங்குலமும், சிகரத்தில் பத்தங்குலமும், கண்டத்தில் மூன்றங்குலமும், வாஜனம் முதலியதுகளில் இரண்டங்குலமும் உபானம் முதல் ப்ரஸ்தரம் வரை ஏழங்குலம் வரையும் கூடவும் குறைந்துமிருக்கலாம். இதற்கு மேலுளதாயின் ஜீர்ணான பாகத்தைச் செப்பனிட வேண்டியதேயாகும்.

இம்மாதிரி ஒவ்வொரு அங்குல குறைவிலும் செப்பனிட வேண்டியதைச் சொல்லி, எல்லா அங்ககுறைவில் முன் செய்துள்ள த்ரவ்யம் அதற்கு ஸமமாகவோ அதைவிட உயர்ந்த த்ரவ்யங்களாலோ செப்பனிட வேண்டும். இப்படி ஸூக்ஷ்மாகமத்தில் உள்ளதாவது ப்ராஸாதத்தின் (கர்பக்ரகம்) எல்லா அங்க நாசத்தையும் பார்த்து முன் உள்ள த்ரவியத்தால் முன் சொன்னபடி செப்பனிட வேண்டும். அப்படியே விபவத்திற்கு தக்கபடி மேலான த்ரவ்யங்களாலுஞ் செப்பனிடலாம். ஆகையால் முன்னுள்ளதைக் காட்டிலுங் குறைவாக செய்விக்கக் கூடாது.

### காரணாகமத்தில்

பிம்பங்கள் விமானங்கள் ஸ்தூபி முதல் முகூர்த்த கல் நாட்டு வரை மரங்கள் உண்டாகி பெயர்க்கப்பட்டிருந்தால், அம்மரங்களை முழுவதும் பெயர்த்தெடுத்து எரிந்துவிட்டு மறுபடி கர்பன்யாஸத்துடன் கல்நாட்டைச் செய்வித்து லயம் முன்னுள்ளபடி லக்ஷணமாகவே செப்பனிட்டு, முன் த்ரவ்யத்தால் முன் அளவுபடியும் முன் ஆக்ருதிபோலவும் (செப்பனிட்டு) ஸர்வாங்கங்கள் பூர்ணமாயும் அழகாகவும் அழுத்தமாகவும் செப்பனிட வேண்டும் மரம், சுட்டகல் சிலைகளை பின் சேர்க்கக் கூடியவைகளில் சேர்க்கவும். சேர்க்கக்கூடாதவைகளை விலக்கி விடவும். குறைந்த அளவைக் கொண்டு கட்டப்பட்டவைகளை சாஸ்திரோக்தமான பெரிய அளவினாலுஞ் செய்விக்கலாம். அது நன்மையையே பயக்கும். ஆனதால் குறைவாகச் செய்யாமல் மேலானதாகவே செய்விக்கவும்.



## அவ்வாறே வைகானஸத்திலும்

முன் செய்யப்பட்ட உயர்ந்த த்ரவ்யங்களாலேயே செப்பனிடவும் வேண்டும். முதலில் அபக்ருஷ்டமானத்ரவ்யங்களால் செய்யப்பட்டிருந்தால் பின் உக்ருஷ்டமானத்ரவ்யங்களாலுஞ் செய்விப்பது விசேஷமே.

## அப்படியே காமிகாகமத்தில்

முன் நாகர விமானமாயின் பின் நாகர விமானமும், த்ராவிடமாயின் த்ராவிடமும் - அம்சுமான் ஆகமத்திலும் வேஸரமாயின் வேஸரமும் த்ராவிடத்தில் த்ராவிட விமானமும், சாந்திகாதிகளில் எது செய்ய வேண்டுமோ அதையே சாந்திகாதிகளிலும் அடிக்கடி செய்ய வேண்டும். இதற்கு மாறுதலாகச் செய்யப்படுவதிலும் அனர்த்தம் ஸந்தேகமின்றி உண்டாகவே ஆகும். கனமான விமானத்தில் அவ்வாறு கர்பக்ரகமுண்டாகும்.

மஹாவிச்வகர்மீயத்தில் உயர அகலத்துடன் கூடிய விமானம் மண்டபங்கள் அவ்வளவைக் காட்டிலும் கூடியோ குறைவோ செப்பனிடுவது ஸர்வதோஷங்களைச் செய்விக்கும்.

கர்பக்ரகம் குருங்கல்களால் செய்யப்பட்டிருப்பின் அதற்கு முன்னுள்ள மண்டபாதிகளிலும் சிலைகளாலும் கற்கல்கள் சுட்ட கல்லாகவோ செய்யப்பட்டிருப்பின் மண்டபாதிகள் எல்லாம் கருங்கல்களால் செய்விக்கலாகாது.

அஞ்ஞானத்தாலோ மோஹத்தாலோ செய்பவர் ஸர்வதோஷங்களைப் பெறுவார்கள் அதனால் அக்கார்யம் விலக்கத்தக்கது.

எது செய்ய வேண்டுமோ அதையே சாந்திகாதிகளிலும் அடிக்கடி செய்ய வேண்டும். இதற்கு மாறுதலாகச் செய்யப்படுவதிலும் அனர்த்தம் ஸந்தேகமின்றி உண்டாகவே ஆகும். கனமான விமானத்திலே அவ்வாறு கர்பக்ரகமுண்டாகும். மஹாவிச்வகர்மீயத்தில் உயர அகலத்துடங்கூடிய விமானம் மண்ட







பங்கள் அவ்வளவைக் காட்டிலும் கூடியோ குறைவோ செப்ப னிடுவது ஸர்வதோஷங்களைச் செய்விக்கும்.

கர்பக்ரகம் கருங்கல்களால் செய்யப்பட்டிருப்பின் அதற்கு முன்னுள்ள மண்டபாதிகளிலும் சிலைகளாலும் கற்கல் கள் சுட்ட கல்லாகவோ செய்யப்பட்டிருப்பின் மண்டபாதிகள் எல்லாம் கருங்கல்களால் செய்விக்கலாகாது. அஞ்ஞானத்தாலோ மோஹத்தாலோ செய்பவர் ஸர்வதோஷங்களைப் பெறுவார் கள் அதனால் அக்கார்யம் விலக்கத்தக்கது.

## பழைய விமானம்

### அம்சுமானாகமத்தில்

பழமையாக ஜீர்ணமான விமானம், ஜீர்ணமான உபா னாதிகள் இவைகளை கூடவோ குறைவதோ செய்வதாகாது. முன் உள்ள அளவுபடியே செய்விக்கவும், இவைகளை எஜமான னின் இஷ்டப்படியுஞ் செய்யுவும் காலங்களை பார்க்க வேண்டும்.

### மோஹசூரொத்தரத்தில்

மரகர்பக்ரகத்தை சுட்ட கல்லாலும், சுட்ட கல்லால் செய்விக்க பட்டதை கருங்கற்களாலும் செய்விக்கவும். மட்ட மான ஆலயத்திற்குச் சொன்ன த்ரவ்யங்களாலேயே சபமாக அந்தந்த த்ரவ்யங்களால் செய்விக்கவும்.

### இப்படியே நிச்வாஸாகமத்திலும்

சிலாமயமான ஆலயத்தைச் சிலைகளாலும், மரத்தா லானதை மரத்தாலும், மண்ணால் செய்யப்பட்டதை மண் களாலுமே செய்விக்கவும்.

### த்ரவ்ய ச்ரேஷ்டங்களின் பலன்

அஜிதாகமத்தில் மண்ணால் செய்விப்பதை காட்டிலும் மரங்கள் சிறந்தது. மரங்களால் செய்விப்பதை விட சுட்ட கல் லும் இதைவிட கருங்கல் மேன்மேலும் நூறு பங்குயர்வாகும்.



இப்படியே ஜீர்ணோத்தார விதியிலுங் கூறப்பட்டுள்ளது.

காமிகாகமத்திலும் க்ருதயுகத்தில் நாகர கர்பக்ரகமும், த்ருதேயாயுகத்தில் திராவிட கர்பக்ரஹமும், ஸார்வதேசிக கர்ப க்ரகம் கலியுகத்திலும், வாராட காலிங்க கர்பக்ரகம் எல்லா யுகங்களிலும் ஸம்மதமாகும். ஆனதால் கீர்தியை விரும்புப வர்களால் தந்திரங்கள் மந்திரங்கள் ஆசார்யர்ரகள் தேசங்கள் காலங்கள் யுகங்கள் வேறு செர்கை தோஷங்களில்லாத ஸர்வ தேசிக கர்பக்ரகஞ் செய்விப்பது சிறந்ததாகும்.

இப்படி கர்பக்ரக ஜீர்ணோத்தாரணஞ் செய்விக்கும் போது சில்பி ஆசார்யர் இவர்கள் செய்விக்குங் கார்யங்களைச் சொல்கிறார்.

## 5-ம் சுலோகம் உரை

சிவாகமங்களிலுள்ளபடி கர்ஷணம் முதல் ப்ரதிட்டை வரையிலான கார்யங்களை செய்விப்பதில் ஸமர்த்தரானவர் ஆ ார்யர். அப்படிப்பட்ட ஆசார்யருக்கே இம்மாமதிரி கிரியை க. ாச் செய்ய அதிகாரமாகும். சிவாலயம் ஜீர்ணம், நெருப்பு, இடி, ஜலப்ரவாகம் இவைகளால் பாதிக்கப்படின் பாலமெனும் லிங்கம் அவ்வாறே ஆலயம் இவைகளைச் செய்ய வேண்டும்.

அந்த பாலாலய விதி காமிகாகமத்தில் ஆலயங் கட்டு வதற்கு முன்னும், கட்டப்பட்ட ஆலயம் ஜீர்ணம், பின்னம், அங்கக் குறைவு, வெடிப்பு முதலிய தோஷமானபோதும் பாலா லயத்தில் பாலலிங்க பிம்பங்களை வைக்கவேண்டும்.

அவ்வாரே வாதுளாகமத்தில் ஆலயம் முன் சொல்லப் பட்டவைகளுடன் நாசமாக்கப்படினும் பாலாலயத்தை ஆக மோக்தப்படி செய்து, லிங்க பிம்பாதிகளை ஆகமோக்தப்படி ஸ்தாபித்து பூஜை செய்து வரவேண்டும். பின் மூல ஆலயத்தை விதிப்படி அமைத்து ஸம்புரோஷணமுஞ் செய்விக்க வேண்டும். பழைய ஆலய கர்பக்ரஹவாயில் அசைந்தாலும் அந்த இராஜ்ய நாசமும், வேறு இராஜனது ஆளுகையும் உண்டாகும். ஆனதால் பாலாலயத்தைச் செய்து அதில் ப்ரதிட்டை பூஜை







களைச் செய்வித்து, செப்பனிட்ட பழைய ஆலயத்தில் சேர்க்க வேண்டும்.



## ஸூக்ஷ்மாகமத்தில்

முதலில் பாலாலயத்தில் சிவலிங்கத்தை ப்ரதிட்டித்து பூஜை செய்த பின்பே மூலாலயத்தில் சேர்ப்பிக்க வேண்டும். பாலாலய ஸ்தாபனமில்லாத சிவலிங்கப்ரதிட்டை புத்ர பௌத்ரர்களுக்கு கெடுதலுண்டாகும். அவ்வாகம பாலஸ்தாபன விதி படலத்தில், பாலாலயஸ்தாபனமின்றி மூலாலய சிவலிங்க ப்ரதிட்டை குலநாசத்தைச் செய்யும். ஆனதால் பாலாலய ப்ரதிட்டை அவசியமாகும். பின் மூலாலயங் கட்டப்பட்டப் பிறகு உத்ராயணம் சுக்லபக்ஷம்.



மண்டபத்தில் கணபதி



மண்டப முன் தோற்றம்



இரண்டு விமானங்களுடன் இராஜகோபுரம்
முன் தோற்றம்



பல்லவ சிற்பம் போல் யானை

## 1. TANJAVUR, RARARAJESVARAM: GARBHAGRIHA - GROUND PLAN




தஞ்சை பெரிய கோவில் கெற்பக்ருஹம் ஹாரை குட்யம் என்று சில்ப நூலில் கூறப்பட்டபடி செய்யப்பட்டுள்ளது. அந்தராளத்தில் வாசனுடன் உள்ளது. கோமுகை மாத்திரம் சரியான பிரம்ம சூத்திரத்தில் அமையவில்லை. கீழ் உபபீடத்திற்கும் அதிஷ்ட்டானத்திற்கும் சம்பந்தமில்லாது உள்ளது.

தஞ்சை நடராஜ ஆடவல்லான் மிக அருமையான விக்ரகம் 124 பாகத்தில் 10 பாகம் நதமானம் குறைத்து கெம்பீரமான பார்வை சிவகாமியுடன் உள்ளது. அபஸ்மாரம் என்னும் முயலகம் காலின் கீழ் உள்ளது.



பத்மபீடம் பத்ரபீடத்துடன் உள்ளது. ஏதோகாலத்தில் பிரபை பாதிக்கு கீழ் உடைந்து புதிதாக இணைக்கப்பட்டுள்ளது. மிக அழகான மூர்த்தி லக்ஷணப்படி உள்ளது.




TUKKACHCHI - APATSAHAYESVARAR TEMPLE
(VIKRAMACHOLISVARAM)

ஸ்வாமி கற்பக்ருஹம் அந்தராளம் முகமண்டபம் அவகாச அந்தராளம் மஹாமண்டபம் நடராஜர் கோவில் தெற்கு பார்த்த முகம் இராஜ கோபுரம் மற்றும் அந்தர் மண்டலம் என்னும் முதல் பிராகாரத்தில் ஒரே வாசல் என்று சாஸ்த்திரத்தில் சொல்லியபடி செய்து இருக்கிறார்கள் இரண்டாம் பிராகாரம் என்னும் அந்தர் ஹாரையுடன் உள்ளது. அம்பாள் தெற்கு முகம் மற்றும் த்வாரசாலை என்னும் கோபுரத்துடன் அமைந்தது.

திருவாலங்காட்டு நடராஜா செப்புச்சிலை மிக அழகான சிலை திருவாச்சி உடைந்து போய் இல்லாதிருக்கிறது.



தலையில் கொக்கு சிறகு மண்டைஓடு, எருக்கம்பூ, ஊமைத்தம்பூ, வலது காதில் வெரும்காது அல்லது மகரத்துடன் கூடியது. வலது காதில் ஓலையும் பிரைச்சந்திரனும், உதரபெநதமும், அபயம், உடுக்கை, அக்னி போல ஹஸ்தம் முதலிய நான்கு கரங்களுடன் 12 அமசம் குறைந்த அளவுடன் கூடிய மிகச் சிறந்த நடராஜர்.



DEIVANAYAKI AMMAN TEMPLE - DARASURAM

அம்மன் கோவில் கெற்பக்ருஹம் அந்தராளம் முகமண்டபம் அவகாச அந்தராளம் மஹாமண்டபம் நிருத்த மண்டபம் முதலியவைகளுடன் கூடியது 1 பிராகாரம் ஒரே வழி கோபுரம் சில்ப நூலில் சொன்னபடி உள்ள சுதந்திராலயம்.




**AIRAVATESVARAR TEMPLE - DARASURAM**
KUMBAKONAM TALUK - TANJAVUR DISTRICT

பெரிய கால்புரவாய் உள்ள கெற்பக்ருஹம் முகமண்டபம் அவகாச அந்தராணம் மஹாமண்டபம் தெற்கு நோக்கிய அம்மன், கோவில் திருமாளிகா மண்டபம் சாஸ்த்திரம் அமைந்துள்ளது - ஒரே கோபுரம்.



பார்வதி தேவியின் கைத்தலம் பற்றி ஸ்வாமியின் வலது பக்கத்தில் நின்ற நிலை நாணத்துடன் உள்ள நிலை ஸ்வாமி கடக ஹஸ்தம், மான், மழுவுடன் அம்பாள் கரம் பற்றியது. அரைவஸ்திரம் துடைவரை உள்ளது. ஜடாமகுடம் சகல ஆபரணங்களுடன் உள்ளது. இது சோழர்காலச் சிலை.




பெரிய கால்புறவயினுடன் கூடிய விமானம் முகமண்டபம் அவகாச அந்தராளம் மஹாமண்டபத்துடன் கூடியது சபேஸ்வரருடன் கூடியது தஞ்சைக் கோவிலைப் போல் வடிவமைப்புடன் உள்ளது.



MAHABALIPURAM: SHIVA, PARVATI

பல்லவர்கால சோமாஸ்கந்தர் விக்ரகம் சிவன் ஸ்கந்தன் பார்வதியுடன் கூடி அமர்ந்த நிலை. பின்பக்கம் பிரம்மா, விஷ்ணு நிற்கின்ற நிலை கருவரையில் லிங்கத்திற்கு பின்பக்கம் சுவற்றில் அர்த்சித்ரமாக செதுக்கப்பட்டுள்ளது சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன் செதுக்கப்பட்டது. மிக அழகான சோமாஸ்கந்தர்.




ஸ்ரீ விஷ்வ ரூப மஹா விஷ்ணு

பத்மஸ்ரீ
எம். முத்தையா ஸ்தபதி

கிரீடிநட கதிநம் சக்ரஹஸ்த மிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ |
தேநைவ ரூபேண சதுர்புஜேந ஸஹஸ்ரபாஹோ பவ விஸ்வமூர்தே ||

கிரீடம் தரித்தவராகவும் கதாயுதத்தையும் சக்ராயுதத்தையும் கைகளில் ஏந்தியவராகவும் உள்ள அந்த ஸ்வருபத்திலே உங்களை தரிசிக்க நான் விரும்புகிறேன். ஆகையால் விஸ்வருபம் கொண்டவரே ஆயிரக்கணக்கான திருக்கரங்கள் உடையவரே அதே நான்கு கரங்கள் கொண்ட அந்த ஸ்வருபத்துடனேயே தரிசனம் அளியுங்கள்.

( அர்சுனனால் கேட்கப்பட்டது. )
பகவத்கீதை பதினொன்றாவது அத்யாயம் 46வது ஸ்லோகம்

ஆலயம் என்பது ஸ்வாமி கிடந்த நிலையாகும்.
கர்பக்ருஹம் ஆன து சிரசாகவும் அந்தராளம் முகமாகவும்
சுகாசனமானது கழுத்தாகவும் தோள்களானது அர்த்தமண்டபமாகவும்
மஹாமண்டபமானது வயிறாகவும் பிராகாரமானது கால்களாகவும்
கோபுரமானது ஸ்வாமியுன் பாதமாகவும்
இந்த மாதிரி ஸ்வாமியின் தேகத்தின் படி தேவாலயம்
நிர்மானிக்கப்படுகிறது. ஆலயத்தின் ஒவ்வொரு பகுதியும்
ஸ்வாமியின் அங்கங்களாகும். ஆகையால் ஆலயத்தின் எல்லா
பகுதியும் ஆராதிக்கப்பட வேண்டியதாகும்





ஆலயத்தின் கற்பக்ருஹத்தில் உள் ள சிவலிங்கம் மற்றும் மூர்த்திகள் சூக்ஷ்சும மூர்த்திகளாகும் கற்பக்ருஹத்தின் மேலே அமைந்திருக்கும் விமானம் அடித்தளம் முதல் ஸ்தூபி வரை உள்ளது ஸ்வாமியினுடைய ஸ்தூல ரூபமாகும். அதாவது உபான வர்க்கம் பாதமாகவும், ஜகதி குமுதம் முதலிய அதிஷ்ட்டான வர்க்கங்கள் கால்களாகவும், கபோதக வியாழ வர்க்கங்கள் சுவாமியின் வயிறாகவும், கண்டம் கழுத்தாகவும் சிகரம் முகமாகவும், ஸ்தூபி சிகையாகவும் ஆக விமான கோபுரங்கள் ஸ்வாமியினுடைய நின்ற ரூபமாக காட்சியளிக்கிறது.

மொத்தம் கெற்பக்ருஹ அகலத்ததை 9 பாகம் செய்




| | |
|---|---|
| சுவர் | 1 பாகம் |
| அலிந்தரம் | 1 பாகம் |
| சுவர் | 1 பாகம் |
| கெற்பக்ருஹம் | 3 பாகம் |
| சுவர் | 1 பாகம் |
| அலிந்தரம் | 1 பாகம் |
| சுவர் | 1 பாகம் |
| ஆக | 9 பாகம் |



வட அமெரிக்காவில் அமைந்துள்ள ஸ்ரீ முருகன் ஆலயத்தின் முன்புற தோற்றம்.

60 அடி உயர ஒரே கல்லால் ஆன கிருஷ்ணர் சிலை திரு. பத்மஸ்ரீ எம். முத்தையா ஸ்தபதி அவர்களால் சென்னையில் செய்யப்பட்டு கல்கத்தாவில் பிர்லா அகாடாமியில் நிறுவப் பட்டுள்ளது.



இவர் இந்தியாவில் அலகாபாத் 135 அடி உயர விமானம் உடைய திருபுவன கோயில், உத்தர சிதம்பரம் என அழைக்கப்படும் சதாராவில் உள்ள நடராஜர் கோயில் காலடியில் 150 அடி உயர ஆதி சங்கர மண்டபம்; தமிழ்நாட்டில் ஸ்ரீவரதராஜர் திருக்கோயில் 130 அடி உயர இராஜகோபுரம், தென்காசியில் 175 அடி உயர இராஜகோபுரம், ஒரே கல்லால் ஆன 60 அடி உயர ஆதிசங்கர விக்ரகம் காஞ்சிபுரத்திலும், 60 அடி உயர கிருஷ்ணர் சிலை செய்து கல்கத்தாவிலும், 32 அடி உயர ஆஞ்சநேயர் சிலை மும்பாய் மற்றும் நங்கநல்லூரிலும், 36 அடி உயர பஞ்சமுக ஆஞ்சநேயர் சிலை பாண்டிச்சேரியிலும், 18 அடி உயர விநாயகர் சிலை குண்டூரிலும் பிரதிஷ்டை செய்துள்ளது, சென்னையில் உள்ள பெசன்ட் நகரில் முழுக்க முழுக்க கருங்கல்லால் ஆன ஆறுபடை வீடு ஸ்ரீ முருகன் கோயிலும், பெங்களூரில் கருங்கல்லால் ஸ்ரீ பைரவர் கோயிலும் செய்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

தற்சமயம் 131 அடி உயர ஸ்ரீ வெங்கடேஸ்வரர் சிலை ஒரே கல்லால் காஞ்சி ஸ்ரீ சங்கர மடத்தின் மூலம் செய்து வருகிறார்.

இவர் அமேரிக்காவில் ஹூஸ்டன் ஸ்ரீ மீனாட்சி கோயில், லாஸ் ஏன்ஜல்சில் சிவன் கோயில், சிகாகோவில் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் திருக்கோயில், சான்பிரான்சிஸ்கோவில் சிவா விஷ்ணு கோயில், நியூயார்க்கில் ஸ்ரீ கணபதி கோயில், வாஷிங்டனில் ஸ்ரீ முருகன் கோயில், மற்றும் பிட்ஸ்பர்க், நாஸ்வில், பாஸ்டன், அட்லாண்டா, லூயிவில்லி, மெம்பீஸ், டல்லாஸ், லான்சிங், ஒக்கலஹோமா, பொக்கிப்சி, வெல்மிங்டன், டாம்பா, மியாமி, டெலிவர் ஆகிய இடங்களில் இந்து கோயில்கள் கட்டியுள்ளார். மேலும் ஆஸ்திரேலியாவில் உள்ள சிட்னியில் ஸ்ரீ முருகன் கோயில், தாய்லாந்தில் உள்ள பேங்காக்கில் ஸ்ரீ மகாமாரியம்மன் திருக்கோயில், ஸ்ரீ லங்காவில் 20 அடி உயர ஆஞ்சநேயர் சிலை கருங்கல்லால் செய்து கோயிலும் கட்டியுள்ளார்.

தற்சமயம் நியூஜெர்ஸியில் கருங்கல்லால் ஸ்ரீ நடராஜர் கோயிலும், லண்டனில் கருங்கல்லால் ஸ்ரீ முருகன் கோயிலும் கட்டி வருகிறார்.

இவருடைய திறமைக்குப் பரிசாக 1976ல் ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயில் கும்பாபிஷேகத்தின் போது காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ பெரியவா மூலம் "சில்பகலாமணி" விருதும், 1992ல் இந்திய ஜனாதிபதி திரு. ஆர். வெங்கட்ராமன் மூலம் இந்திய அரசின் "பத்மஸ்ரீ" விருதும், 1985ல் காசி ராஜா் மூலம் அலகாபாத் திருபுவன கோயில் கும்பாபிஷேகத்தின்போது "சில்பரத்னகாரா" விருதும், அமேரிக்கா நியூயார்க் அத்யாயனா யூனிவர்சல் மிஷன் மூலம் "மஹோன்நத சில்பகலா சிரோமணி" விருதும், 2003ல் டாக்டர் பத்மா சுப்ரமணியம் அவர்களின் நிர்தோதயா நாட்டிய குழுவின் மூலம் "கர்ண சில்ப விநோதா" விருதும் கிடைக்கப் பெற்றார்.

தற்சமயம் தமிழ்நாடு அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையில் ஸ்தபதி ஆலோசகராக 1990ல் இருந்து பணியாற்றி வருகிறார்.

